உ
சிவமயம்

# வில்லியும் சிவனும்



"தமிழ்க் கடல்"
"சிவமணி"
"சிவம் பெருக்கும் சீலர்"
**ராய. சொ.**
இயக்குநர், தமிழ் ஆராய்ச்சித்துறை
அழகப்பா கல்லூரி
காரைக்குடி



அழகப்பா கல்லூரி வெளியீடு
1966

உ
சிவமயம்

# வில்லியும் சிவனும்





" தமிழ்க் கடல் "
" சிவமணி "
" சிவம் பெருக்கும் சீலர் "

**ராய. சொ.**

இயக்குநர், தமிழ் ஆராய்ச்சித்துறை
அழகப்பா கல்லூரி
காரைக்குடி



அழகப்பா கல்லூரி வெளியீடு
1966

உ
சிவமயம்

# வில்லியும் சிவனும்

# க. வெ. சித. வெ. வேங்கடாசலனுர்க்கு

# உரிமை.

கன்னன்எனும் கார்மேகம் கனகமழை
பொழிந்ததெனக் கவிஞர் வேந்தன்

பன்னும்நறும் தமிழ்வில்லி, பாரதத்தில்
அந்நாளில் பகரக் கேட்டேம்;

கன்னன்உயர் கொடைத்திறத்தைக் கண்ணுரக்
கண்டதுண்டோ? கலேஞர் போற்றும்

மன்னன்நமது அழகப்பன் வழங்கியபொன்
கோடியைக்கண் மலரக் கண்டேம்.

அப்பெரியோன் அறம்காக்க அமைந்தஉயர்
திருவாளன்; அருமை அன்பன்;

செப்பரிய திறம்படைத்த சீ. வீ. சீ
டி. வேங்க டாச லற்கு,இவ்

ஒப்புயர்வில் சிவன்புகழை ஓது, இருநூற்று
எழுபதுபா ஒருங்கு கொண்ட,

திப்பிய''வில் லியும்,சிவனும்'' எனும்நூலை
இராய. சொ. உரிமை செய்தேன்.



திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலஞ் செட்டியார்

அறநிலையச் செயலர்

# பொருள் அடக்கம்

# உள்ளுறை

உ
சிவமயம்.

# நன்றியுரை

( 'தமிழ்க்கடல்', 'சிவமணி', ராய. சொ. )

வள்ளல் அழகப்பனர் கண்ட அழகப்பா கல்லூரியின் தமிழ் ஆராய்ச்சித் துறையின் சார்பாக, 'வில்லியும் சிவனும்' என்ற இந்நூல் இன்று வெளிவருகிறது. இது கல்லூரியின் இரண்டாவது வெளியீடு. முதல்வெளியீடு 'கம்பனும்சிவனும்' என்ற நூல். அந்நூல் 30—8—66இல் வெளியானது. அடுத்த நூலை இரண்டு திங்கள்களில் வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

முதல் நூலைக் கல்லூரி கண்ட வள்ளல் அழகப்பனருக்கு உரிமை ஆக்கினேன். அதனை அவருக்கு உரிமையாக்காமல் வேறு யாருக்கு ஆக்க முடியும்? இரண்டாவது வெளியீடாகிய இந்நூலை, அவர் செய்த அறத்தை ஒல்லுமாறு காத்துவரும், அன்பர் க. வெ. சித. வெ. வேங்கடாசலனருக்கு உரிமையாக்குகிறேன். இரண்டாவது நூலை இவரைத்தவிர வேறு யாருக்குத்தான் உரிமையாக்க முடியும்?

வள்ளல் அழகப்பனர் கோடி கொடுத்துக் கல்லூரி கண்டார். அன்பர் வேங்கடாசலனர் அவ்அறத்தைத் திறம்பட நடத்தி வருகின்றார். தமிழ் ஆராய்ச்சிப்பகுதி ஒன்றைக் காண, வள்ளல் அழகப்பர் விரும்பினர்; அதனைச் செயலுக்குக் கொணர்ந்தார் வேங்கடாசலனர். அதன் பயனாக இரண்டு நறுமலர்கள் மலர்ந்தன. ஒன்றை அழகப்பர் பெற்றார். இன்னொன்றை வேங்கடாசலனர் பெறுகின்றார்.

பாரத நாட்டினர் உள்ளத்தைக் கவர்ந்த பெருங் காப்பியங்கள் இரண்டு. ஒன்று இராமாயணம்; இன்னொன்று பாரதம். இராமாயணத்தின் மூல ஆசிரியர் வான்மீகி முனிவர். அப்பெரியார் அருளிய காதையைப் பெரும் சிறப்பாகத் தமிழில் இயற்றிப் புகழ் கொண்டார் கம்பர் பெருமான்.

மகாபாரதத்தை முதலில் ஆக்கியவர் வேத வியாச முனிவர். அப்பெரியார், மறைகளை, இருக்கு முதலாகக் கோவை செய்த பெருமையையுடையவர். இதனை, இந்நூல் ஆசிரியராகிய,வில்லிபுத்தூர் ஆழ்வாரின் மைந்தர் வரந்தருவார்,

'இருக்குஆதி மறைமொழிந்தோன் இயம்பியஇப் பெருங்கதை'

என்று பாராட்டுவார். இப்பெரும் பாரதக்கதையை வில்லிபுத்தூர் ஆழ்வார் என்ற புலவர்பெருமான் தமிழ் விருத்தப் பாக்களால் செய்து, புகழ்பெற்ருர்.

இவ்விரு பெரும் புலவர்களும் வைணவத் தொடர்புடைய காதைகளை ஆக்கியோர். இப்புலவர் பெருமக்கள், முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் சிறப்பை எவ்வாறு பாராட்டினர் என்பதை ஆராயும் பணியில் முதல் ஆய்வுநூல் 'கம்பனும் சிவனும்'. இரண்டாவது ஆராய்ச்சி நூல் இவ் 'வில்லியும் சிவனும்'.

வில்லிபுத்தூர் ஆழ்வார் சிவனைப்பற்றி 270 பாடல்களில் கூறியிருக்கின்ருர். அவற்றுள் கவிமொழி 199. பிறர்மொழி 71. இந்நூலின் பின்னே சேர்க்கப்பெற்றுள்ள சிவனைப் பற்றிய சொல்தொடர், படித்துப்படித்து இன்புறத்தக்கன. சிவனைப் பற்றி ஆசிரியர் சொல்லும் சிறப்புக்கள் எல்லாம் ஆங்காங்கு உள்ள பாடற்பகுதியிலும், வில்லியும் சிவனும் என்ற முதற் கட்டுரையிலும் நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

வில்லிபுத்தூர் ஆழ்வார் பேரறிவு கைவரப் பெற்ற பெரும் புலவர். கதைகளைத் தேவையின்றி விரிக்காமல், மிக அருமையாக நுணுகிப்பாடும் பேராற்றல் வாய்ந்தவர். அவர் நூலை முழுதும் படிக்கும் புலமையுடையார் இதனை அறிவர். இந்நூலைப் படிக்கின்றவர்கள் இவ்வுண்மையை அறிந்து கொள்ளமுடியும்.

இந்நூலின் பொழிப்புரையை, பங்களூரில், பெரியார் திருச்சி சுவாமிகளால் தோற்றுவிக்கப்பெற்றிருக்கும் "கைலாச ஆசிரமம்" என்ற நல்ல இடத்தில் இருந்து எழுதி முடித்தோம்.

'கயிலையம் பொருப்பன்'

'கயிலைவாழ் விற்குன்றுடையோன்'

'எயில்ஒரு மூன்றும் செற்றேன் ஏந்திழையுடனே வைகும்
கயிலையின் பெருமைதன்னைக் கட்டுரை செய்வது எங்ஙன்'

என்ற சொல்தொடர்களால் கயிலாசத்தைப் பாராட்டுவார் வில்லிபுத்தூர் ஆழ்வார். அக்கயிலைக்குச் சென்றுவந்த திருச்சி சுவாமிகள் கண்ட கயிலாச ஆசிரமத்தில் இந்நூல் உருவானது பொருத்தம்தானே.

இந்நூலுக்கு முன்னுரை தந்து உதவினார் பெரியார் சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள். சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், எண்பது ஆண்டு நிரம்பிய இளைஞர்; உடல் தளர்ந்தாலும் உள்ளம் தளராதவர்; நன்றாகப் படித்தவர்; கல்வித் துறையில் பல பதவிகளை வகித்தவர்; சைவசமயத்தில் அழுத்தமான பற்று உடையவர்; எனினும் பிறமதக் காழ்ப்பு இல்லாதவர்; 'இந்துமதத்தின் பாதிரி' என்று பலராலும் போற்றப் பெறுபவர்; என்னிடம் பேரன்பு கொண்டவர்; நானும் தமிழ்ப் பெருமக்கள் பலரும் உச்சியில் வைத்துப் போற்றும், 'தமிழ் முனிவர்' திரு. வி. க. அவர்களின் உயிர்த் தோழர்; இப்பெரியார் இந்நூலைப் போற்றி எழுதியிருப்பது, நூலுக்கே ஒரு தனிச்சிறப்பு. எனவே இவருக்கு நன்றி என்று சொல்ல வேண்டுமா?

பங்களூரில் இந்நூலுக்கு நான் பொழிப்புரை எழுதும் போது உடன் இருந்து பணிபுரிந்த என் நண்பர், அழகப்பா கலைக்கல்லூரி அரசியல் பகுதிப் பேராசிரியர், அன்பர் சூரியநாராயணனுக்கு நன்றி.

இந்நூல் வெளியீட்டில் எனக்குத் துணைபுரிந்த கல்லூரி முதல்வர் டாக்டர். வ. சுப. மாணிக்கனாருக்கும், தமிழ்ப் பேராசிரியர் சாரங்கபாணியாருக்கும், உடன் இருந்து பணி செய்த புலவர் மு. இராமசாமியாருக்கும் நன்றி.

எந்த நூலுக்கும்போல் இந்நூல் வெளியீட்டிலும் என் நிழல்போல உடன் இருந்து, உறுதுணையாக இருந்த, என் அன்பு மாணாக்கர் பதுமநாபனுக்கு நன்றி.

இந்நூலை எழில் ஒழுக, விரைந்து அச்சிட்டுத்தந்த என் ஆருயிர் நண்பர் சு. வீர. வீரப்பனின் மைந்தன் சௌத் இந்தியா அச்சக நிருவாகி சுப்பையாவுக்கு நன்றி.

இந்நூல் வெளியீட்டில் எனக்குத் தோன்றாத்துணையாக இருந்து அருளிய, வில்லிபுத்தூர் ஆழ்வார் கூறுமாப்போல,

'கவிஞானியர் கண்ணில் பருகும்சுவை அமுதானவர்'

ஆகிய முழுமுதற் கடவுளுக்கு நன்றி.

அழகப்பாபுரம்
3—11—66.

ராய. சொ.

# பதிப்புரை

டாக்டர் வ. சுப. மாணிக்கர், முதல்வர், அழகப்பா கல்லூரி.

அழகப்பா கல்லூரித் தமிழ் ஆராய்ச்சித் துறையின் இரண்டாவது வெளியீடு 'வில்லியும் சிவனும்' என்ற இவ்வாராய்ச்சிப் பதிப்பு. 'கம்பனும் சிவனும்' என்ற முதல் ஆராய்ச்சிநூல் வெளியாய இருதிங்களில் இந்தஇரண்டாவது நூல் வெளியாகுகை ஆராய்ச்சித்துறையின் வளர்ச்சியையும் அறுபத்தேழு ஆண்டு நிறைந்த தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களின் இளமை வீற்றையும் காட்டுகின்றது. மேலும் நூல்பல பதிப்பித்து இளமையோடு வாழ்க என்று மொழிக் கடலாரை நன்றியுணர்வோடு வாழ்த்துகின்றோம்.

முதல் நூலை வள்ளல் அழகப்பருக்கு உரிமை செய்த ஆசிரியர் இந்நூலை வள்ளலின் நண்பர் வேங்கடாசலனார்க்கு உரிமை செய்கின்றார். இவ்வுரிமை பல்லாற்றானும் பொருத்தம் உடையது. திரு. வே. யின் தந்தை சிதம்பரஞ்செட்டியார் தம் நெற்றியில் அரியக்குடிப் பெருமாளின் அருளால் திருமண் அடையாளம் பெற்ற தெய்வப்பேறு உடையவர். அவர் மகன் வேங்கடாசலனார் "சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடிகுடி ஆட்செய்கின்றோம்" என்று பெரியாழ்வார் பாடியபடி, அரியக்குடிக்கு வழிவழி அடிமைக் குடியானவர். சிவபூசை செய்யும் இடத்தும் அரியக்குடிப் பெருமாளின் திருவுருவம் அருகிருக்கும். வேங்கடாசலனாரை அரியக்குடி ஆழ்வார் என்று கூறலாம். திரு. வே. ஆரவார மில்லாத இயல்பான தமிழ்ப்பற்று வாய்ந்தவர். மகா மகோ பாத்தியாய உ. வே. சாமிநாதையர், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், மகாவித்துவான் இராகவையங்கார், விபுலானந்த அடிகள், ரசிகமணி சிதம்பரநாத முதலியார், நாவலர் சோமசுந்தர பாரதியார் என நாடறிந்த பெரும்புலவர்களின் தொடர்புடையவர். மேலும் ராய. சொ. வின் நீண்ட நட்பை நிரம்பப் பெற்றவர். இப்பெருமகனாரைத் தம் குருவாக மதிப்பவர்.

உலகில் பலர் செய்யும் அறங்கள் சிறிய அளவின. அவற்றைக் காப்பது எளிது. அழகப்ப வள்ளல் செய்த அறங்களோ தொகையிலும் பெரியவை; அளவிலும்

பெரியவை. அவற்றைப் போற்றிக் காத்தல் என்பது அறத்தில் அன்பும் திறத்தில் மிகுதியும் கொண்ட ஒருவராற்றான் இயலும். பெருமாள் காப்புக்கடவுள். அக் கடவுளைக் குடிகுடியாகத் தொழுகின்ற அன்பர் வேங்கடாச லனார் எதனையும் காக்கவல்ல ஆற்றல் பெற்றிருக்கின்றார். இதனை எண்ணியே, "அப்பெரியோன் அறம்காக்க அமைந்த உயர்திருவாளன்" என்று உரிமைப்பாடலில் வேங்கடா சலனாரை ராய. சொ. பாராட்டியுள்ளனர்.

இனி, 'வில்லியும் சிவனும்' என்ற நூலாராய்ச்சிபற்றி ஒருசில அருமைகளைக் காணலாம். இப்பதிப்பையும் முன் வந்த 'கம்பனும் சிவனும்' என்ற பதிப்பையும் உடன் வைத்துக் காணும்போது சில நுண்கூறுகள் புலப்படும். இராமாயணத்து 42 பாத்திரங்கள் சிவனைப்பற்றி மொழி கின்றன. ஆனால் சிவன் மொழியாக வந்தபாடல் யாதுமில்லை. வில்லிப்பதிப்பில் 21 பாத்திர மொழிகளில் சிவன்மொழியும் ஒன்று. அருச்சுனன் தவநிலையைப் பார்வதியிடம் சிவனே பாராட்டிப் பேசுவதாக அமைந்த பாரதப் பகுதியை ராய. சொ. உளம்பதிய உணர்ச்சி தோன்ற வரைந்துள்ளார். "தலப்பெருமை சொல்லுங்கால் வில்லி, தன்னை மறந்து சைவப்புலவர் எவரையும் மிஞ்சி விடுகின்றார்" எனத் தலங்கள் சுற்றிய சிவமணிப் புலவரான ராய. சொ. எடுத்துக்காட்டும் நடுநிலைமையே நடுநிலைமை.

இராமாயணத்துச் சிவனைக்குறிக்கும் தொடர்களில் பல வில்லி பாரதத்தும் வருகின்றன. அதன்மேலும் பாரதத்தில் மட்டுமே வரும் சிவத்தொடர்களும் உள. உமாபதி, பசுபதி, புண்ணியன், பொன்னம்பலநாதன், சிவபெருமான், சிவசிவ, நீலமணித்திருக்கண்டன் என்ற சிவமொழிகளை இந்நூலில் காண்கின்றோம். இராமாயணத்தைக் காட்டிலும், வில்லி பாரதத்து வடமொழிக் கலப்பு மிகுதியாதலின், ஐயானனன், புரதகனன், உகாந்தகாலன், காலாந்தகன், பரமரூபி என்ற ஆட்சிகளும் உள. இராமாயணத்துச் சிவனது கோலமும், பூக்களும், கருவிகளும் பலபடப்புனையப் பெற்றிருந்தாலும், ஒரு சில கூறுகளைப் புலப்படுத்துவதில் வில்லி பாரதம் விஞ்சி நிற்கின்றது. பார்வதியை "அறம் வளர்க்கும் தெய்வப் பாவை" என்றும், "ஆற்றினால் அறம் வளர்க்கும்

அம்மை'' என்றும் "பச்சைக்கொடி விடையானொரு பாகம் திறைகொண்டாள்'' என்றும் ஈடுபாட்டோடு பாடுவர் வில்லி. சிவன் அணியும் கொன்றை மாலை பற்றிய குறிப்பு இராமாயணத்து ஓரிடத்துத்தான் வருகின்றது. வில்லியிலோ, "கொன்றை கமழ் முடியோன்'', "கொன்றை நாண் மலரோன்'', எனப்பல இடங்களில் அன்றலர்ந்த புதுக் கொன்றை புகழப்படுகின்றது. 'கவிஞானியர்' என அப்பர், சம்பந்தரை வில்லிபுத்தூராழ்வார் குறிப்பிடுவது காப்பியவுலகில் அவருக்கேயுரிய தனிச்சிறப்பு.

வில்லிபாரதத்து இருபத்தொருவர் மொழியாக அமைந்து கிடக்கும் பாடல்களைத் தொகுத்துப் பதிப்பித்த ராய. சொ. கற்பவர்க்குச் சுமை தோன்ருது சுவை தோன்றுமாறு இடமும் பொழிப்பும் விளக்கமும் சொன்னயமும் பொருணயமும் சுட்டி எழுதியுள்ளனர்.

சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம், இராமாயணம், தேவாரம், திருவாசகம், முத்தொள்ளாயிரம் முதலிய பன்னூல் மேற்கோள்களை இப்பதிப்பிற் காணலாம். இடையிடையே வரும் இம்மேற்கோள்கள் கற்கும் சுவையை மிகுக்கின்றன. சில மேற்கோள்கள் தெளிவு தரும் சான்ருக நிற்கின்றன. "கந்தனை பளித்த கன்னி" (பா. 54) என்ற இடத்துவரும் சிவஞான சித்தியார் மேற்கோளும், "ஐந்தான சொல்லான் (பா-222) என்ற இடத்து வரும் சுந்தரர் தேவாரமும் இன்றியமையாத மேற்கோள்கள்; இவை தமிழ்க் கடலின் சைவ நூற் பயிற்சிக்கும் எடுத்துக்காட்டுக்கள். "மிக நகைத்தும் வெறுத்தும்'' எனவரும் வீமனது இருவகையுணர்ச்சிகளுக்கு ஆசிரியர் நயங்கூறுவதும், வில்லியிலிருந்தே அதற்கு ஒரு காட்டு நல்குவதும் மறக்கமுடியாத இடங்கள்.

சிவன் சில பாத்திரங்களின் வாயிலாக இழித்து உரைக்கப்படுகின்ருன் என்பதை ஒப்பி, பாரதத்தில் சிலபாத்திரங்களால் திருமாலே பழிக்கப்பட்டது உண்டு எனக்காட்டி, "இது பாத்திரங்களின் தகுதியையும் சூழ்நிலையையும் பொறுத்தது'' என்று காப்பிய விலக்கணத்தைச் சூத்திரம் போல வடித்துத் தருகின்ருர் ராய. சொ. இன்றைய மேனுட்டுத் திறனய்வாளர் ஒப்பிய உண்மையும் இதுவே.

பாரதம் கண்ணன் தலைமைக்குரிய நூலாயினும், வில்லி பெரியாழ்வார் பெயர்கொண்ட வைணவப் புலவராயினும், யாரும் போற்றத்தக்க சமயப்பொது நோக்கினர் என்ற கருத்தை இவ்வாசிரியர் பதிப்பு தெளிவாக்கிவிட்டது. 'கம்பனும் சிவனும்' என்ற தலைப்பிலும், 'வில்லியும் சிவனும்' என்ற தலைப்பிலும் வரும் இவ்வெளியீடுகளின் நோக்கம் ஒன்றேயொன்று. கம்பர், வில்லி போன்ற பெருங்காப்பியப் புலவர்கள் தம் காப்பியத்துக்கு உரிய கடவுள் எதுவாயினும், தாம் வழிபடு கடவுள் எதுவாயினும், அக்கடவுளைப் பாடும் போது தமிழ்மக்கள் வழிபடும் ஏனையகடவுளர்களையும் மதித்துப் பாடியுள்ளனர். பாடும்போது அச்சமய மக்கள், தம் கடவுளரைப் போற்றிப்பாடும் அளவிற்கு, ஏற்றிப்பாடியுள்ளனர். அதனால் அவர்கள் யாத்த காப்பியங்கள், சமயப்பொது நூலாகவும், எல்லா மக்களும் கற்றற்கு உரியபொதுவிலக்கியமாகவும் விளங்குகின்றன. இந்த இலக்கிய மரபை விரிவாக அறிந்து கொள்ள இவ்விருநூற்பதிப்பும் துணைசெய்யும் என்பது என் கருத்து.

காரைக்குடி.<br>
18–10–66.

வ. சுப. மாணிக்கம்

உ
சிவமயம்

# முன் உரை

(திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, எம். ஏ. எல். டி.)

இந்நூலின் ஆசிரியர் சைவத்திருவாளர் ராய. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள். இத்தலைமுறையில், தமிழ் வழங்கு நிலங்களும் இந்துசமுதாயமும் போற்றும் சிறந்த அறிஞர்களில் ஒருவர். இவர்கள் வாழ்க்கை வரலாறு யாவரும் அறியத் தக்கதே. ஆதலின், அதன் முக்கியமான பகுதிகளைச் சிறிது குறிப்பிட்டு மேற்செல்வது நல்லதென நினைக்கின்றேன்.

இவர் 30—10—1898இல், காரைக்குடியில், தனவைசிய குடும்பத்தில் பிறந்தார். தமிழ் இலக்கண இலக்கியங்கள் நன்கு பயின்றுர்.

தம் பத்தொன்பதாம் வயதில், சமூகச் சீர்திருத்த இயக்கத்தைத் தொடங்கிய சொ. முருகப்பா அவர்களுடன் தொடர்பு கொண்டார். இருவரும் சேர்ந்து, 1917இல் ஹிந்துமதாபிமான சங்கம் என்னும் அரிய சங்கம் ஒன்றைத் தோற்றுவித்தார்கள்.

பின்பு 'தனவைசிய ஊழியர் சங்கம்' என்னும் சங்கத்தைத் தாபித்தனர். ஊழியன் என்ற சிறந்த தேசீயப் பத்திரிகையைக் காரைக்குடியிலும், சென்னையிலும் இருபதாண்டு காலம் நடத்தினுர்.

இவர் களங்கமற்ற தேசபக்தர்; தீவிர காந்தீயவாதி; 1932இல் சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்ந்து ஒருவருடச் சிறைத் தண்டனையும் அடைந்தார். அகில இந்தியக் காங்கிரஸ்க் கமிட்டி அங்கத்தினராகவும், தமிழ்நாடு காங்கிரஸ்க் கமிட்டி அங்கத்தினராகவும், தமிழ்நாடு காங்கிரஸ்க் காரியக் கமிட்டி உறுப்பினராகவும், ஜில்லாக் காங்கிரஸ்க் கமிட்டித் தலைவராகவும் அந்த நாளிலிருந்து தொண்டு செய்திருக்கின்றுர். காங்கிரஸ் கட்சியின் சார்பாகக் காரைக்குடி நகர சபைத் தலைவராக மூன்றுண்டு பணி புரிந்திருக்கிருர்.

1958இல் இவருக்கு மணிவிழாக் கொண்டாடப்பட்ட போது காரைக்குடியில் 'தமிழ்க்கடல்' என்ற பட்டம் அளிக்கப்

பட்டது. கல்கத்தா, பம்பாய் ஆகிய வடஇந்திய நகரங்களுக்குச் சென்று தமிழ் பரப்பி வந்திருக்கின்றார். தமிழகத்தில் பல பகுதிகளிலும் தமிழ்பரப்பும் பணி தீவிரமாகப் புரிந்து வருகின்றார்.

மலேயா, பர்மா, இலங்கை, சுமத்திரா, இந்தோனேசியா முதலிய நாடுகட்கும் சென்று, தமிழ்ப் பண்பாட்டை இவர் பரப்பி வந்துள்ளார். 1961இல் இரங்கூனில் நாட்டுக் கோட்டைச் செட்டிமார் தரும பரிபாலன சபையாரால் இவருக்கு, 'சிவமணி' என்ற பட்டம் அளிக்கப்பட்டது. கோலாலம்பூர் அன்பர்கள் இவருக்குச் 'சிவம்பெருக்கும் சீலர்' என்ற பட்டம் வழங்கி மகிழ்ந்தனர்.

சமய வாழ்க்கையில் மிக்க ஈடுபாடுடையவராய், ஹிந்து மதாபிமான சங்கத்தில் அரிய சமயச் சொற்பொழிவு ஆற்றி வந்தார். காரைக்குடி நகரச்சிவன் கோவில் மேற்பார்வையாளராக வந்தபோது, அதனைத் தெய்வீகப் பொலிவுடன் விளங்குமாறு செய்தார்.

சைவவைணவ சமரநோக்கம் கொண்ட இச்சான்றோர், தலயாத்திரைகளையும் மேற்கொண்டார். பாடல்பெற்ற சிவத் தலங்கள் 275-இல் 269 தலங்களையும் ஆழ்வார்கள் பாசுரங்களைப் பெற்ற 108 திருப்பதிகளில் 93 பதிகளையும் இதுவரை இரண்டு முறை தரிசித்திருக்கிறார் என்று அறிகிறேன். நேபாளம், காசி, பிரயாகை, பஞ்சவடி, அயோத்தி முதலிய வடநாட்டு க்ஷேத்திரங்கள் சிலவற்றிற்கும் யாத்திரை செய்தார்.

1958இல் சிவாகம ஞான சிகாமணியாய் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகளிடம், நம் 'சிவமணி' அவர்கள் சிவபூசை எழுந்தருளுவித்துக் கொண்டார்கள். பிற அன்பர்கள் பலரை இதில் ஈடுபடுத்தினார்கள்.

இத்தகைய பெருநலங்களைப்பெற்ற, 'சிவம்பெருக்கும் சீலர்' வாழ்வில் அழகப்பா அவர்கள் அறமாண்பைப் போற்றி, அவர்கள் பெயரால் விளங்கும் கலைக்கல்லூரிக்குத் தாம் சேமித்து வைத்திருந்த 1800 நூல்களைக்கொண்ட களஞ்சியத்தை நன்கொடையாக அளித்துவிட்டார்.

சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தார் கேடயம் வழங்கிச் சிறப்பித்தார்கள். கோயம்புத்தூர், ஈரோடு, பவாநி முதலிய ஊர்களின் சங்கத்தார் பொற்பதக்கம், பொன்னுடை முதலியன அணிவித்துப் பெருமைப்படுத்தினர்.

இவர் அக்கல்லூரியின் தமிழ் ஆராய்ச்சித் துறைக்குக் கௌரவத் தலைவராக அமர்ந்து, ஆராய்ச்சி அரும்பணி பல புரிந்து வருகின்றார். தமிழ்ப் பெரு நூல்களைப் பரப்புவதற்குப் பல தொகுப்பு நூல்களைத் தக்க குறிப்புகளுடன் வெளியிட்டுள்ளார். பல புதிய கவிதை நூல்களும் பாடி, சில உரை நூல்களும் ஆராய்ச்சி நூல்களும் வெளியிட்டுள்ளார்.

இப்பணியைத் தொடர்ந்து எழுந்தவையே இவ்வாண்டு அச்சிடப்பெற்ற 'கம்பனும் சிவனும்,' 'திருத்தலப்பயணம்,' 'வில்லியும் சிவனும்' என்ற பெருநூல்களும்.

வில்லியும் சிவனும் என்னும் இந்நூல் அழகப்பா கல்வி அறநிலையச் செயலர் திரு. க. வெ. சித. வெ. வேங்கடாசலம் செட்டியார் அவர்கட்கு உரிமையாக்கப்பட்டுள்ளது. இதன் முதற்பகுதியாகிய 'வில்லியும் சிவனும்' என்பதில் வில்லி புத்தூர் ஆழ்வார் பிறப்பால் வைணவர் என்பதும், அவர் அருமை மைந்தர் இன்னார் என்பதும் குறிக்கப்பட்டுள்ளன. வில்லிபுத்தூர் ஆழ்வார் வைணவ மெய்ப்பொருளை உணர்ந்து, சிவனை எவ்வாறு பாராட்டுகிறார் என்பதைக் காட்ட எழுந்ததே இவ் ஆராய்ச்சி நூல். 270 பாடல்களில் வில்லி புத்தூர் ஆழ்வார் சிவனைப்பற்றிச் செப்புகின்றார் என்றும் அவற்றுடன் கவிமொழியாக மட்டும் கூறும் இடங்கள் 199 என்றும் எடுத்துக்காட்டியுள்ளார் இந்நூலில். இம் மொழிகட்கெல்லாம் தக்க தலைப்புகளும், பொழிப்பும் விளக்கமும் தரப்பட்டுள்ளன.

பிறர்மொழி என்னும் பகுதியில் அருச்சுனன் முதலிய பாத்திரங்களின் வாயிலாக 71 பாடல்களில் சிவனைப்பற்றி ஆசிரியர் குறிக்கின்றதை எடுத்துக்காட்டுகின்றார்.

வில்லி பாரதத்தில் சிவனைப்பற்றி எவ்வெப் பருவத்தில், எந்த இடங்களில், குறிப்புகள் அமைந்துள்ளன என்பதைக் காட்டும் தொகுப்புத் தரப்பட்டுள்ளது.

பிறகு 'சிவனைப்பற்றிய சொல்தொடர்' என்ற பகுதியில் 213 சொற்றொடர்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. மேலும் சிவசம்பந்தமான 30 சொற்றொடர்களும், அவை அமைந்துள்ள பாடல் எண்களும் தரப்பட்டுள்ளன. இறுதியாக 270 பாடல்கட்கு முதற்குறிப்பு அகராதி அமைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறெல்லாம், தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள், தமிழ் அறிந்தோர் பலரும் வில்லி பாரதத்தின் அருமை பெருமைகளை அறிந்து போற்றப் பெருந்துணை புரிந்துள்ளார்கள். நம் இரு பெரு இதிகாசங்களாகிய இராமாயணமும் மகாபாரதமும், இமயமுதல் குமரிவரையில் பரந்துள்ள, நமது பாரத நாட்டின் ஆன்மீகப் பண்பாட்டு அடிப்படை ஒற்றுமையைப் பெரிதும் போற்றி, பற்பல நூற்றுண்டுகளாக வழிகாட்டிகளாக வணங்கி வருவனவாகும்.

இப்போது நாம் பாராட்டும் ஆராய்ச்சி நூலும் இப்பெரு நோக்கத்திற்கு ஆக்கம்தர வல்லதாகும். சமரச – சன்மார்க்கப் பார்வையும், சீவ கருணைத் தொண்டில் ஆர்வமும் பெருகுவதற்கு ஊக்கம் அளிக்கும்; முதல்தரமான இந்நூலைப் படிப்பவர்கட்கு இதன் ஆசிரியரது ஆராய்ச்சிமுறை புலப்படுவதோடு, தாமும் இத் துறையில் இயன்றவரையில் ஈடுபட வேண்டும் என்னும் நல் விருப்பத்தையும் எழுப்பும்; உலக ஒற்றுமை உணர்ச்சியைப் பெருக்குதற்கு உதவ வல்ல பண்டை ஆதாரங்களை எடுத்துக்காட்டும் பணியிலும் ஈடுபடத் தூண்டும்.

நுண்மாண் நுழைபுலம் படைத்துள்ள செந்தமிழ்க் கடலும், சிவம்பெருக்கும் சீலருமாம் சான்றோராகிய ராய. சொ. அவர்கள் இன்னும் பல ஆராய்ச்சி நூல்களையும், பத்தி ஞானங்களை இக்காலத்திலும் பரப்புதற்கு உதவும் சமய சாத்திரங்களையும் தமிழ் உலகிற்கு அளித்துவந்து, பல்லாண்டு பல்லாண்டு தமிழகத்திலும், பாரதநாட்டிலும் சிவமணியாய்த் திகழ்ந்துவரத் திருவுளம்கொள்ள வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

சென்னை
12–10–66          ச. சச்சிதானந்தம் பிள்ளை.

சிவமயம்

# வில்லியும் சிவனும்

வில்லி என்பது வில்லிபுத்தூர் ஆழ்வார். வியாச முனிவர் வட மொழியில் இயற்றிய பாரதக்கதையைத் தமிழ் மொழியில் விருத்தப் பாவால் ஆக்கினுர் வில்லிபுத்தூர் ஆழ்வார். வில்லியின் பாரதப் பாடல் தொகை 4336.

வில்லிபுத்தூர் ஆழ்வார் பிறப்பால் வைணவர். அவருக்கு வரந்தருவார் என, பெரும்புலமை வாய்ந்த அருமந்த மைந்தர் ஒருவர் இருந்தார். புலமையில் மேம்பட்ட தந்தை செய்த வில்லிபாரதக் காப்பியத்துக்கு அவர் மைந்தர் வரந்தருவார் அரிய பாயிரம் ஒன்றை வழங்கி, தந்தையைச் சிறப்பித்துத் தானும் புகழ்பெற்றுர். வில்லிபுத்தூர் ஆழ்வார் நல்ல வைணவர் என்பதை,

ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கு அதி பதியாய்
வந்து வட்டமா மணியில்நன் மணிமுடி புனைந்து,
பைந்து ழாய்முடிப் பரமனைப் பலகவித் துறையும்
சிந்தை யால்மொழிந்து அன்பர்தம் திருவுளம் பெற்றேன்.

என்ற வரந்தருவார் பாயிரச் செய்யுள் வலியுறுத்தும். மேலும்,

தென்னர் சேரலர் செம்பியர் எனப்பெயர் சிறந்த
மன்னர் மூவரும் வழங்கிய வரிசையால் உயர்ந்தோன்;
முன்னர் எண்ணிய முத்தமிழ்ப் பாவலர் எவரும்
பின்னர் வந்தொரு வடிவுகொண் டனரெனப் பிறந்தோன்.

என்ற வரந்தருவார் பாடல் வில்லியின் பெரும்புலமையையும், அவருக்கு மகனுகப் பிறந்தமையால் வரந்தருவார் கொண்ட பெருங்களிப்பையும் காட்டா நிற்கும்.

வைணவராகப் பிறந்து திருவில்லிபுத்தூர் பெரியாழ்வார் பெயரைச் சூட்டிக் கொண்ட வில்லிபுத்தூர் ஆழ்வார், மெய்ப் பொருள் உணர்ந்து, சிவனை எவ்வாறு பாராட்டுகின்றுர், என்பதைக் காட்ட எழுந்ததே இவ் ஆராய்ச்சி நூல்.

இருநூற்றெழுபது பாடல்களில் சிவனைப்பற்றி வில்லிபுத்தூர் ஆழ்வார் செப்புகின்றார். அவற்றுள் கவிமொழியாக மட்டும் கூறுமிடங்கள் நூற்றுத் தொண்ணூற்று ஒன்பது.

கம்பர் சிவனைப்பற்றி முந்நூற்றுத் தொண்ணூற்றைந்து இடங்களில் மொழிந்தார். வில்லி, இருநூற்றெழுபது இடங்களில் பேசினார். எனினும், பதினாயிரம் பாடல்கள் பாடிய கம்பர் 395 இடங்களில் சிவனைப் பற்றிப் பேசியிருக்க, நாலாயிரம் பாடல்கள் பாடிய வில்லி சிவனைப்பற்றி 270 இடங்களில் சொல்லியிருப்பதால், விகிதப்படி வில்லியே மேலே நிற்கின்றார். வில்லிபாரதத்தைவிட இரண்டரை மடங்கு அளவு கொண்டது கம்பராமாயணம்.

வில்லியின் மைந்தர் வரந்தருவார் பாடிய இருபத்து நான்கு பாயிரப் பாடலுக்குள் ஒரு பாட்டில் சிவன் பெருமையையும், சிவன் சிறப்பை உலகத்துக்குக் காட்டுதற்கென்றே பிறந்த தேவார ஆசிரியர்களையும் வாய் கொள்ளாமல் பாராட்டுவார். அப்பாடல் வருமாறு:—

பாஅரும் தமிழால் பேர்பெறு பனுவல்
பாவலர், பாதிநாள் இரவில்,
மூவரும் நெருக்கி, மொழிவிளக்கு ஏற்றி,
முகுந்தனைத் தொழுதநன் னாடு;
தேவரும் மறையும் இன்னமும் காணச்
செஞ்சடைக் கடவுளைப் பாடி,
யாவரும் மதித்தோர் மூவரில் இருவர்
பிறந்தநாடு இந்தநன் னாடு.

வில்லிபுத்தூர் ஆழ்வார், தாம் பாரதக் கதையைப் பாடியதற்குக் காரணம் சொல்லுங்கால் சிவன்கதை வருதலால், அன்றித் திருமால் கதை வருதலால் என இரண்டு பொருள் படுமாறு சொற்றொடரை வைத்துப் பாடிய பின்வரும் பாடல் சிந்திக்கத் தக்கது :—

முன்னும், மாமறை முனிவரும், தேவரும், பிறரும்
பன்னும் மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்;
மன்னும் மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும்
என்னும் ஆசையால் யானும்ஈது இயம்புதற்கு இசைந்தேன்.

மன், உமாதவன், மன்னும் மாதவன் என இச்சொற்றொடரை இருவகையாகப் பிரிக்கலாம். உமாதவன் — சிவன்; மாதவன் — திருமால். பாரதத்துள் சிவன்கதை இடையிடை வருதலாலும்,

திருமால் கதை இடையிடை வருதலாலும் பாரதக் கதையைப் பாடத்தொடங்கினேன், என்று வில்லி கூறுவார்.

நூல்முழுதும் ஆங்காங்கு வில்லி சிவனைப்பற்றி நுவல்கின்றாரெனினும், சிறப்பாகச் சிவனைப்பற்றி விரித்துப் பேசும் இடங்கள் இரண்டு. ஒன்று பார்த்தன் தீர்த்த யாத்திரை; மற்றொன்று பார்த்தன் தவம். பார்த்தன் திருத் தலங்களுக்குச் சென்ற முறையைப்பற்றிப் பேசும்போது, சிதம்பரம், திருவண்ணமலை, காஞ்சீவரம், திருவெண்ணெய் நல்லூர், மதுரை முதலிய தலப்பெருமை சொல்லுங்கால், வில்லி, தன்னை மறந்து சைவப் புலவர் எவரையும் மிஞ்சிவிடு கின்றார். பாடல்களை இந்நூலினுள் ஆங்காங்குக் கண்டு கொள்க.

பார்த்தன் தவம் செய்யக் கைலையை அடைந்தான். கைலையை மெய்ம்மறந்து பாடுவார் வில்லிபுத்தூர் ஆழ்வார் :—

"எம்பிரான் இமவான் தந்த
புரிகுழ லோடும் வைகும் புண்ணியப் பொருப்பு"

என்பார். மேலும்,

"எயில்ஒரு மூன்றும் செற்றோன்
ஏந்திழை உடனே வைகும்
கயிலையின் பெருமை தன்னைக்
கட்டுரை செய்வது எங்ஙன்"

என்று பெருமிதத்தோடு பேசுவார்.

தவக்கோலம் பூண்ட "மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த" அருச்சுனன் திருமேனிப் பொலிவைப் பின் வரும் பாடல் படம்பிடித்துக் காட்டாநிற்கும் :—

ஆசில்நான் மறைப்படியும் எண்ணில் கோடி
ஆகமத்தின் படியும்எழுத்து ஐந்தும் கூறிப்
பூசினன் வடிவம்எலாம் விபூதி யால்;அப்
பூதியினைப் புரிந்தசடைப் புறத்தே சேர்த்தான்;
தேசினால் அப்பொருப்பின் சிகரம் மேவும்
சிவனிவனே போலுமெனத் தேவர் எல்லாம்
பேசினர்; வரிசிலைக்கை விசயன் பூண்ட
பெருந்தவத்தின் நிலை,சிலர்க்குப் பேசல் ஆமோ?

விசயன் தவம் செய்யுங்கால் தன் உள்ளத்தில் படிய வைத்துக்கொண்ட அம்மையப்பன் வடிவத்தைப்பற்றி வில்லி பின்வரும் பாடலால் விளம்புவார் :—

வலப்பாகம் செழும்பவளச் சோதி என்ன,
வரன்நீலச் சோதிஎன்ன மற்றைப் பாகம்,
கலப்பான திருமேனி அணிந்த நீற்றால்
கதிர்முத்தின் சோதிஎன, மேனை ஈன்ற
குலப்பாவை உடன்கயிலைக் குன்றில் வாழ்,விற்
குன்றுடையோன் திருக்கோலம் குறிப்பால் உன்னி,
புலப்பாடு புறம்பொசிய, மார்பும் தோளும்
பூரித்தான்; உடல்புளகம் பாரித் தானே.

இறைவனின் பகுதியாகிய வலப்பக்கம் அவனது செம் மேனியைப் பவளத்தின் ஒளியென எடுத்துக்காட்ட, இறை விக்கு உரிய இடப்பாகம் நீலமணியின் ஒளியைக் காட்டிநிற்க, இரண்டு நிறமும் கலந்த முழுத் திருமேனியில் அணிந்த திருநீற்றின் நிறம் முத்தின் ஒளியைப் புலப்படுத்த, உமையவ ளோடு கைலையில் இருக்கும் கண்ணுதல் வடிவத்தை உள்ளத்தில் பதித்து, மார்பும் தோள்களும் விம்மிப் புளகாங் கிதம் எய்தினன் பார்த்தன்.

"நினைப்பற நினைந்தேன்" என மணிவாசகப் பெருமான் கூறுமாப்போல, வேறு சிந்தனை இல்லாதவனாய் சிவ பெருமானையே பார்த்தன் உள்ளத்து இருத்தினன், என்பதைப் பின்வரும் வில்லியின் அரிய பாடல் பேசும் :—

கூற்றினை உதைத்த பாதமும், உடுத்த
குஞ்சரத்து உரிவையும், அணிந்த
நீற்றுஒளி பரந்து நிலவெழு வடிவும்,
நிலா,வெயில், அனல்,உமிழ் விழியும்,
ஆற்றுஅறல் பரந்த கொன்றைவார் சடையும்,
அல்லதை யாவையும் கருதான்;
மாற்றம்ஒன்று இன்றி நின்றனன் வரைபோல்,
வச்சிரா யுதன்திரு மகனும்.

நிற்க. திருமாலும் பிரமனும் சிவபெருமானின் அடிமுடி தேடிய சைவக் கதையை "ஓர்ஏனம் தனைத்தேட ஒளித்தரு ளும் இருபாதத்து ஒருவன்" எனவும், "புள்ளுடைக்

கொடியோர் இருவரும் காணுப் புண்ணியன்'' என்றும், வில்லிபுத்தூர் ஆழ்வார் கையாளுவது வியத்தற்கு உரியதாக இருக்கின்றது.

'சல்லியன், தன்தேரை ஓட்டினுல், பார்த்தனுக்கு இப்போது தேரோட்டும் பார்த்தசாரதியாகிய திருமாலே அல்ல, சிவனேவந்து அந்த அருச்சுனனுக்குத் தேரோட்டினுலும் நான் வெல்வேன்' என, கன்னன் கூறுகின்ருன் :–

அவன்நின்றுஎன் மணிநெடுந்தேர் கடவும் ஆகில்
அருச்சுனனுக்கு அடல்ஆழி அவனே அன்றி,
சிவன்வந்து தேர்விடினும் கொல்வேன், அந்தத்
தேர்நின்ருர் இருவரையும், செங்கோல் வேந்தே!

இது வணங்காமுடி மன்னனைப் பார்த்துக் கன்னன் பேசும் பேச்சு. இதனுல் திருமாலைவிடச் சிவன்பெரியவன் எனக் கன்னன் வாயிலாக வில்லி கூறுவதாக ஆகின்றது அல்லவா?

தருமன் அவைக்கு நாரதன் வருகின்ருன். நாரதனைத் தக்கவாறு வரவேற்கும் தருமன், நாரதனுக்குக் கூறும் வரவேற்புப்பாவில் சிவபெருமான் பெருமையைச் செப்பும் சிறப்பு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

யான்புரிந்த தவம்உலகில் யார்புரிந்தார்?
அவனிபரில்; இசையின் வீணைத்
தேன்புரிந்த தெள்ளமுதால், அமுதுண்டோர்
செவி,இரதம் தெவிட்டு விப்பாய்!
மான்புரிந்த திருக்கரத்து மதிஇருந்த
நதிவேணி மங்கை பாகன்,
தான்புரிந்த திருக்கூத்துக்கு இசைய,மகிழ்ந்து
இசைபாடும் தத்வ ஞானி!

வில்லிபுத்தூர் ஆழ்வாரின் பெரும்புலமையை அவர் நூலினுள் நுழையும் புலவர் அறிவர். அப்புலவர் பெருமான் தனக்குக் கதை அளித்த மூல நூலின் ஆசிரியர் வியாச முனிவரைப் பெரிதும் போற்றிக் கூறும் அவையடக்கப் பாடல் இரண்டை இங்கே தருகின்றேன்.

மண்ணில் ஆரணம் நிகர்என வியாதனுர் வகுத்த
எண்இ லாநெடுங் காதையை, யான்அறிந்து இயம்பல்,
விண்ணில் ஆதவன் விளங்குநீடு எல்லையை, ஊமன்,
கண்இ லாதவன், கேட்டலும், காண்டலும் கடுக்கும்.

முன்சொல் ஆகிய சொல்எலாம் முழுதுணர் முனிவன்,
தன்சொல் ஆகிய மாப்பெருங் காப்பியம் தன்னை,
தென்சொ லால்உரை செய்தலில், செழும்சுவை இல்லாப்
புன்சொல் ஆயினும் பொறுத்தருள் புரிவரே புலவோர்.

'கொங்கர் பிரான் சூழ்தமிழான் ஆட்கொண்டான்' என்று பாராட்டப்பெற்ற கொங்கர்குல வரபதி ஆட்கொண்டான் என்ற வள்ளல் பாரதத்தைப் பாடுமாறு வில்லிபுத்தூர் ஆழ்வாரைக் கேட்டார்.

'பிறந்துய்யக் கொண்டவன்இப் பேருலகம்
பெருவாழ்வு கூரும் நாளில்,
நிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூ
ரனைநோக்கி, நீயும் நானும்
பிறந்தநிசைக்கு இசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக்கு அமுதம்எனத் தமிழ்மொழியின்
விருத்தத்தால் செய்க' என்ருன்;

என்பது வரந்தருவார் பாடல். இவ்வள்ளல் வில்லிபுத்தூர் ஆழ்வாரைப் பெரிதும் ஆதரித்தார். அந்நன்றியைப் புலப் படுத்தி நூலிற் பல இடங்களில் ஆட்கொண்டானை வில்லி பாராட்டுவார். செய்ந்நன்றி அறிதலுக்கு எடுத்துக் காட்டாகக் கன்னன் என்ற பாத்திரத்தைத் திறம்பட வகுத்த வில்லி, செய்ந்நன்றி அறிதலில் சிறந்து விளங்கினுர். சான்ருக ஒரு பாடலை இங்கே தருகின்றேன்.

கோவல்சூழ் பெண்ணை நாடன்;
கொங்கர்கோன்; பாகை வேந்தன்;
பாவலர் மானம் காத்தோன்;
பங்கயச் செங்கை என்ன,
மேவலர் எமர்என் ருமல்
வெங்களம் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும்
பொழிந்தது கனக மாரி!

கன்னன் வரையாது வழங்கினன்; போர்க்களத்திலும் கொடுத்தான்; தம்படை மாற்ருன்படை என்று பாராமல் ஈந்தான்; கன்னன் கை தங்க மழை பொழிந்தது. எதுபோல? பெண்ணை நாடன், கொங்கர்கோன், பாகை வேந்தன், பாவலர் மானம் காத்தோன் கையைப் போலக் கன்னன்கை கனகமாரி பொழிந்தது. இங்கே செய்ந்நன்றி அறிதலில் கன்னனையும் விஞ்சி விடுகின்ருரன்ரே வில்லி?

திருமாலைப் பற்றி எண்ணற்ற பாடல்கள் பெரும் சிறப்பாக வில்லி பாடியிருக்கின்ருர். பெரும்பாலும் சருக்கங்கள் தோறும் பாடிய திருமால் வணக்கச் செய்யுட்கள் மிக அருமையானவை. நூல் முழுதும் ஆங்காங்கு, திருமால் சிறப்பைக் காணலாம்.

'தேவுமாய் மானுடமாய் மற்றும் முற்றும்
செப்புகின்ற பலகோடி சரா சரங்கள்
யாவுமாய் விளையாடும் ஆதி மூர்த்தி'

எனச் சல்லியன் பேசுவான்.

நீலநெடும் கிரியும்,மழை முகிலும், பவ்வ
நெடுநீரும் காயாவும் நிகர்க்கும் இந்தக்
கோலமும்,வெங் கதை,வாளஞ், சங்கு, நேமி,
கோதண்டம் எனும்படையும், குழையும் காதும்,
மாலைநறும் துழாய்மார்பும், திரண்ட தோளும்,
மணிக்கழுத்தும், செவ்விதழும், வாரி சாதக்
காலைமலர் எனமலர்ந்த முகமும், சோதிக்
கதிர்முடியும், இம்மையிலே கண்ணுற் றேனே.

இது, கடைசிக் காலத்தில் கன்னன் கண்ட கடவுட் காட்சி; ஈடு எடுப்பு இல்லாதது.

திருமாலை வழிபடு கடவுளாகக் கொண்ட வில்லிபுத்தூர் ஆழ்வார் சிவனைப் பற்றி நூற்றுத் தொண்ணூற்று ஒன்பது இடங்களில் கவிமொழியாக இயம்பியிருப்பது போற்றத் தக்கது. சில பாத்திரங்களின் வாயிலாகச் சிவன் இழித்துப் பேசப் பெறுகின்ருன் என்ருல், திருமாலும் அவ்வாறு செப்பப் பெறுகின்ருன் என்பதைப் பல இடங்களில் காணலாம். அது பாத்திரங்களின் தகுதியையும் சூழ்நிலையையும் பொறுத்தது.

'கற்கொண்டு கன்மழைமுன் காத்த கள்வன்'
'வஞ்சனைக்கோர் கொள்கலமாம் கொடிய பாவி'

என்ற சொற்ருெடர்களால் திருமால் பேசப்படுவது காண்க,

## 1. கவிமொழி.

1 கைலைவாழ் விற்குன்றுடையான்
2 கருமயில் பாகன்
3 இமைய இன்பமயில் கேள்வன்
4 பச்சைமயில் பாதியன்
5 உமைக்கு நாயகன்
6 மறைக்கும் எட்டுதற்கு அரியவடிவினன்
7 பிறப்பிலி இறப்பிலி
8 நீலமுண்டு இருண்ட கண்டன்
9 கனகமலைச் சிலைவளைத்த கையினன்
10 இறையோன்
11 எம்பிரான்
12 ஈசன்
13 எயில் ஒரு மூன்றும் செற்றோன்
14 ஏறுடைக் கடவுள்
15 கவிஞானியர் கண்ணில் பருகும் சுவை அமுதானவர்
16 கற்றவர் கருத்தினுல் காண்போன்
17 காலாந்தகன்
18 பவநாசக் கடவுள்
19 சங்கரன்
20 சிவன்
21 பசுபதி
22 புள்ளுடைக் கொடியோர் இருவரும் காணுப் புண்ணியன்
23 ஓர்ஏனம்தனைத்தேடஒளித்தருளும் இருபாதத்து ஒருவன்
24 வெள்ளிக் குன்றுடைப் புனிதன்
25 பொன்னம்பல நாதன்
26 முக்கண் அற்புதன்

என்பன ஆதி சொல் தொடர்களால் கவிமொழியாக வில்லி சிவனைப் பாராட்டி மகிழ்வார். விரிவை இவ்வாராய்ச்சி நூலில் இடங்கள் தோறும் கண்டுகொள்க.

உ
சிவமயம்

# க. கவிமொழி

## பூக்கும் மாமுதல்

1. ஆக்கும் ஆறுஅய னும்;முதல்
ஆக்கிய உலகம்

காக்கும் ஆறுசெங் கண்நிறை
கருணைஅம் கடலாம் ;

வீக்கும் ஆறுஅர னும் ;அவை
வீந்தநாள் மீளப்

பூக்கும் மாமுதல் எவன்,அவன்
பொன்அடி போற்றி.

**பொழிப்பு :** உலகத்தைப் படைக்கின்ற பிரமனாகவும், அப்படிப் படைத்த உலகத்தைக் காக்கின்ற சிவந்த கண்களை உடைய கருணைக்கடலாகிய திருமாலாகவும், அந்த உலகத்தை அழிக்கின்ற சிவனாகவும், அவ்வுலகம் அழிந்த காலத்து அதனை மீளவும் உண்டாக்கும் சிறந்த முதல்வனாகவும் உள்ளவன் எவனோ, அவனுடைய பொன்போன்ற திருவடிகட்கு வணக்கம்.

**விளக்கம் :** ஆக்குதல்: படைத்தல். வீக்குதல்: அழித்தல். பூக்கும் : உண்டாக்கும். மா : சிறந்த. இப்பாடல் "உலகம் யாவையும்'' என்ற கம்பர் கடவுள் வாழ்த்துடன் பெரிதும் ஒத்தது.

(ஆதி பருவம். தற்சிறப்புப் பாயிரம். கடவுள் வாழ்த்து.)

## வானவர்க்கு அரியவன்

2 பொருந்த வான்உறை நாள்களை
நாள்தொறும் புணர்வோன்,

அருந்த வானவர்க்கு ஆர்அமுது
அன்புடன் அளிப்போன்;

திருந்த வானவர்க்கு அரியவன்
செஞ்சடை முடிமேல்

இருந்த வானவன், பெருமையை
யார்கொலோ இசைப்பார்?

**பொழிப்பு:** விண்ணில் தங்கி இருக்கின்ற மீன்களை ஒவ்வொரு நாளும் பொருந்துமாறு அணைவோன்; அமரர்களுக்கு உண்பதற்கு நிறைந்த அமுதத்தை அன்போடு கொடுப்போன்; தேவர்களுக்கு அருமை உடையவனாகிய சிவபெருமானின் சிவந்த சடைமுடியின் மீது திருத்தமாக அமர்ந்திருந்த தேவனாகிய சந்திரனின் சிறப்பை யாரால் சொல்லமுடியும்?

**விளக்கம்:** பொருந்த: பொருந்துமாறு. நாள்: நட்சத்திரம். புணர்தல்: சேர்தல். அருந்த: உண்ண. இசைத்தல்: சொல்லுதல். வானவர்க்கு அரியவன் செஞ்சடை முடிமேல் திருந்த இருந்த வானவன் என இயைக்க.

(ஆதி. குருகுலச் சருக்கம். திங்களின் சிறப்பு)

## மன் உமாதவன்

3 முன்னும் மாமறை முனிவரும்,
தேவரும், பிறரும்,

பன்னும் மாமொழிப் பாரதப்
பெருமையும் பாரேன்;

மன்னும் மாதவன் சரிதமும்
இடைஇடை வழங்கும்

என்னும் ஆசையால், யானும்ஈது
இயம்புதற்கு இசைந்தேன்.

பொழிப்பு; முற்பட்டதும் சிறந்த மறை பயின்ற இருடிகளும் அமரர்களும் ஏனையோரும் பயில்வதுமாகிய உயர்ந்த மொழியிலுள்ள பாரதத்தின் பெருமையை எண்ணிப் பார்த்தேன் அல்லேன்; நிலைபெற்ற உமையவளால் தவம் செய்து அடையப்பெற்ற சிவபெருமானின் காதையும் இடையிடையே சொல்லப்பெறும் என்ற ஆசை காரணமாக (தகுதியற்ற) நானும் இந்தப் பாரதக் கதையைச் சொல்லத் தொடங்குகின்றேன். ''மன்னும் மாதவன்'' எனக் கொண்டு, நிலையுடைய திருமகள் தவத்தலைவன் என்பதும் பொருந்தும். இது இரட்டுற மொழிதல்.

விளக்கம்: பன்னுதல்: பயிலுதல். மன்: நிலைபெற்ற. ஈது: இந்தப் பாரதக் கதை. யானும் என்பதில் உள்ள உம் இழிவு சிறப்பு.

(ஆதி. குருகுலம். பாரதம் பாடியதற்குக் காரணம்.)

## இதழி கமழும் கங்கையாள்

4 வான்முக மதியமும்,
புதிய மாலிகைக்
கான்முக இதழியும்
கமழும் கங்கையாள்,
தேன்முகம் பொழிதரு
செய்ய தாமரை
நான்முகன் பேரவை
நண்ணி னள்அரோ.

பொழிப்பு: (சிவபெருமான் தலையில் இருத்தலால்) விண்ணில் பொருந்தும் திங்களும், சோலையை இடமாக உடைய புதிய மாலையில் பொருந்திய கொன்றைப் பூவும் மணக்கின்ற கங்கை என்னும் மங்கை, தேனைப் பொழிகின்ற செவ்விய தாமரையை இருக்கையாக உடைய பிரமதேவனது பெரிய சபையை அடைந்தாள்.

**விளக்கம் :** முகம்: இடம். மாலிகை: மாலை. இதழி: கொன்றை. பிரமன் உறைவது வெண்தாமரை ஆதலின் ஈண்டுச் செய்ய என்பது சிறந்த என்னும் பொருளது. அரோ: அசை.

(ஆதி. குருகுலம். கங்கை தன் சாபமூலம் கூறுதல்.)

## விடையவன் குமரன்

5 வியந்திட வரும்அக் குரிசிலை 'இவனே
விடையவன் குமரன்!'என்று அயிர்க்கும்;
'வயந்தனில் உலவும் மதன்கொலோ!' என்னும்;
'வாசவன் மதலை'என்று எண்ணும்;
'உயர்ந்தவர் இவனின் வின்மையின் இல்லை
ஒருவரும் உலகின்மேல்!' என்னும்;
பயந்த,தன் வடிவின் படிஎனத் திகழும்
பான்மையை நினைந்திலன் பயந்தோன்.

**பொழிப்பு :** கண்டவர் வியப்பு எய்துமாறு நடந்து வருகின்ற அந்த ஆணிற் சிறந்தவனை 'இவன் ஏறு ஊர்ந்த செல்வனின் மைந்தனே' என்று ஐயுற்றான்; 'வசந்த காலத்தில் உலாவருகின்ற காமதேவனே இவன்' என்று சொல்லுவான்; அன்றி, 'இந்திரன் மைந்தனாக இருக்கலாமோ?' என்று எண்ணுவான்; 'வில் தொழிலில் இந்த உலகத்தில் இவனைவிட உயர்ந்தவர் எவருமே இல்லை' என்று சொல்லுவான்; பெற்ற தன் உருவத்தைப் போலவே விளங்குகின்ற தன்மையை எண்ணிப்பார்த்தான் அல்லன், பெற்றவனாகிய சந்தனு மன்னன்.

**விளக்கம் :** குரிசில்: சந்தனுவின் மைந்தனாகிய தேவவிரதன் என்னும் பெயர்கொண்ட வீட்டுமன். விடையவன் குமரன்: முருகக் கடவுள். அயிர்த்தல்: ஐயுறுதல். வயம்: வசந்தம். வாசவன்: இந்திரன். வின்மை: வில்லின் தன்மை. பயந்த: பெற்ற. படி: ஒப்பு.

(ஆதி. குருகுலம். சந்தனு, தேவவிரதனைக் கண்டு வியத்தல்.)

## காளி வந்து கலந்தனள்

6 காளி வந்து
கலந்தனள்; கங்கைவேய்த்

தோளி யும்புயம்
தோய்ந்தனள் முன்னமே;

வாளி வெம்பரி
மாநெடும் தேருடை

மீளி தானும்
விடையவன் ஆதலால்.

**பொழிப்பு :** காளிதேவியானவள் தன்னைவந்து சேர்ந்து விட்டாள்; கங்கை என்னும் மூங்கிலனைய தோளை உடைய மாதும் முன்னரே இவன் தோளை அணைந்து விட்டாள்; மண்டலமிட்டுச் செல்லுகின்ற கொடிய குதிரை பூட்டிய சிறந்த பெரிய தேரை உடைய ஆற்றல் வாய்ந்தவனான சந்தனு மன்னனும் விடையவனே ஆதலால்.

**விளக்கம் :** இப்பாடல் சிலேடை அணி. விடையவன் : சிவபொருமான். இடபக்குறி உடைய வருணனின் பிறப்பு ஆதலின் சந்தனு விடையவன் ஆகின்றான். சிவபெருமானைக் காளியும், கங்கையும் கலந்தது போலவே, சந்தனுவை முன்னே கங்கை கலந்தாள்; பின்னே காளி கலந்தாள். காளி : பரிமளகந்தி. அவள் காளிந்தி நதிக்கரையில் வளர்ந்தவள். வேய் : மூங்கில். வாளி : வளைந்து வளைந்து செல்லுதல். மீளி : வலிமை உடையவன்.

(ஆதி. குருகுலம். சந்தனு பரிமளகந்தியை மணந்து வாழ்தல்.)

## மேரு வில்லி

7 மெய்யில் தெறித்த குருதித்துளி
மேரு வில்லி

சையத்து அலர்ந்த கமழ்குங்குமத்
தாது மான,

கையில் சிலையோடு உலவுங்கழல்
காளை கேதம்

பையத் தணித்தான் இமநாக
பவனன் என்பான்.

**பொழிப்பு :** (பாண்டுவின்) உடம்பில் பட்ட இரத்தப் புள்ளியானது, மேருமலையை வில்லாக வளைத்த சிவபெருமானின் இமயமலையிலே முகிழ்த்த மணம் கமழும் குங்குமப் பொடியை ஒத்துத் தோன்ற, கையில் வில்லோடு உலாவுகின்ற வீரச்சிலம்பு அணிந்த காளையாகிய பாண்டுவின் வருத்தத்தை மெதுவாக ஆற்றினான், இமயமலையினின்றும் புறப்பட்ட காற்று என்பவன்.

**விளக்கம் :** மெய்: உடம்பு. குருதி: இரத்தம். மேருவில்லி: சிவன். சையம்: மலை. தாது: பொடி. கேதம்: வருத்தம். நாகம்: மலை. பவனன்: காற்று.

(ஆதி. சம்பவச் சருக்கம், பாண்டு மன்னன் வேட்டை வருத்தத்தை இமயக்காற்று நீக்கியமை.)

## கொன்றை தோயும் கங்கை

8 குந்திபோ சன்தன் தெய்வக்
குலத்துளோர் களும்அ நேக

இந்திரர் அவனி தன்னில்
எய்தினர் ஆகும் என்ன,

கந்தவான் கொன்றை தோயும்
கங்கையாள் குமரன் வைகும்

அந்தம்இல் சுவர்க்கம் அன்ன
அத்தினா புரிவந்து உற்றார்.

**பொழிப்பு :** குந்தி போசனுடைய கடவுள் தன்மை வாய்ந்த குலத்தில் தோன்றிய வசுதேவன் முதலியோரும், பல இந்திரர்கள் உலகத்தில் வந்தனர் என்று சொல்லுமாப்போல (சிவபெருமான் சடையில் பொருந்திய) மணம் கொண்ட சிறந்த கொன்றைப் பூவில் படிந்த கங்கை நங்கையின் மைந்தனாகிய வீட்டுமன் வாழ்கின்ற, முடிவில்லாத சுவர்க்க லோகம் போன்ற அத்தினாபுரி என்ற நகரத்தை வந்து அடைந்தார்கள்.

**விளக்கம் :** குந்திபோசன் தன் தெய்வக்குலத்துளோர் : குந்திதேவியின் உறவினர். கந்தம் : மணம். வான் : சிறந்த. கங்கையாள் குமரன் : வீட்டுமன். அத்திஞபுரி: குருகுலத்தார் அரசிருக்கைத் தலைநகரம்.

(ஆதி. சம்பவம். வசுதேவன் முதலியோர் அத்திஞபுரி வருதல்.)

## பரனெடும் மால் பிரமன்

9 புரியில்அறி வோர்,சன பதத்தில்அறி வோர்,புவி
புரக்குமவர் தம்மில் அறிவோர்,
வரிபட வயங்குகொடி மஞ்சவிதம் எங்கணும்
வனப்புஉற இருந்த பொழுதில்,
தெரிவுற விமானமனை தோறும்உறை தேவர்பலர்
சித்தர்முத லோர்ப ரனெடும்
கரியநெடு மால்,பிரமன், இந்திரன்,மு தல்பலர்
கலந்தஅகல் வான்நி கருமே.

**பொழிப்பு :** ஊரிலுள்ள அறிஞர்கள், நாட்டிலுள்ள அறிஞர்கள், அரசாளும் மன்னர்களுள் அறிஞர்கள், இவர்களெல்லாம் வரிசையாக அவ்வவர்க்குரிய இடங்களில் விளங்குகின்ற கொடிகள் கட்டிய ஆசனங்களில் அழகாக இருந்த போது, ஆராயப்பெற்ற விமானமென்னும் வீடுகள் தோறும் தங்கி இருக்கின்ற அமரர் பலர், சித்தர் முதலியோர், சிவபிரான், கருநிறம் வாய்ந்த திருமால், பிரமன், இந்திரன் முதலிய பலர் விரவிய அகன்ற வானுலகத்தை ஒத்திருந்தது.

**விளக்கம் :** புரி: நகரம். சனபதம்: நாடு. புவிபுரக்கும் அவர்: மன்னர். வரிபட: ஒழுங்காக. பரன்: சிவபிரான்.

(ஆதி. வாரணவதச் சருக்கம். துரோணன் மாணக்கர்களின் கல்வித்திறம் காணக் கூடிய கூட்டம்.)

## தனதனும் சிவனும்

10 தவனன் மைந்த னும்சு யோத-
னனும்,இ சைந்து, தனதனும்

சிவனும் என்ன நண்பு கொண்டு
திறலு டன்சி றந்துளார்;

பவனன், உம்பர் நாய கன்,ப
யந்த வீரர் அஞ்சவே,

'அவனி எங்கும் நமது'எ னக்கொள்
பெருமி தத்தர் ஆயினர்.

**பொழிப்பு :** ஆதவனின் மகனான கன்னனும், துரியோதனனும் பொருந்தி, குபேரனும், சிவனும் என்று சொல்லுமாறு நட்புப் பூண்டு, வலிமையுடன் சிறந்து விளங்கினர்; காற்றுக் கடவுள், தேவர்கள் தலைவன் ஆகிய இருவரும் பெற்ற வீரர்களாகிய வீமனும், பார்த்தனும் அஞ்சுமாறு, உலகம் முழுவதும் தமதுஎனக் கொள்ளத்தக்க பெருமிதம் வாய்ந்தவர்களாக அவ்விருவரும் ஆனார்கள்.

**விளக்கம் :** தவனன் : சூரியன். தனதன் : குபேரன். பவனன் : காற்று. உம்பர்நாயகன் : இந்திரன்.

(ஆதி. வாரணாவதம். கன்னன் துரியோதனன் நட்பு.)

## நுதல்கண்மேல் இவள்பிறந்தாள்

11 மண்மேல் ஒருத்தி, அரக்கர்குலம்
மாளப் பிறந்தாள்; வாமன்நுதல்

கண்மேல் இன்றும் இவள்பிறந்தாள்,
கழற்கா வலர்தங் குலமுடிப்பான்;

எண்மேல் என்கொல் இனியென்றங்கு
எவரும் கேட்ப, ஒருவார்த்தை

விண்மேல் எழுந்தது; அவன்புரிந்த
வேள்விக் களத்தின் இடைஅம்மா!

**பொழிப்பு:** நிலத்தின்மீது ஒப்பற்ற ஒருபெண் (சீதை) அரக்கர் கூட்டம் அழிவதற்குத் தோன்றினாள்; சிவபெருமானின் நெற்றிக் கண்ணாகிய நெருப்பினின்றும் இன்று இப் பெண் (துரோபதை) வீரக்கழல் அணிந்த மன்னர் கூட்டத்தை அழிப்பதற்குத் தோன்றினாள்; இனி எண்ணுவதற்கு என்ன இருக்கிறது? என யாவரும் கேட்குமாறு விண்ணினின்றும் ஒரு பேச்சுக் கேட்டது, அந்தத் துருபத மன்னன் செய்த வேள்விச்சாலையின் இடையில்.

**விளக்கம்:** வாமன்: சிவபெருமான். களம்: இடம். கொல், அம்மா: வியப்பிடைச் சொற்கள்.

(ஆதி. வாரணாவதம். துரோபதை பிறப்பைப்பற்றி விண்ணில் தோன்றிய பேச்சு.)

## வாரணாவதம் வணங்கினர்

12 ஆர மார்புடை
ஐவரும், குந்தியும்,

பூர ஞான
புரோசன நாமனும்,

சேர வெண்பிறைச்
செஞ்சடை வானவன்

வார ணாவதம்
சென்று வணங்கினர்.

**பொழிப்பு:** மாலை அணிந்த மார்பை உடைய பாண்டு மைந்தர் ஐவரும், குந்திதேவியும், முழு அறிவு பெற்ற புரோசனன் என்ற பெயரை உடைய முனிவனும் ஒன்றாக வெள்ளை நிறம் வாய்ந்த திங்கள் சூடிய சிவந்த சடையை உடைய தேவனாகிய சிவபெருமானின் காசிமாநகரத்தைப் போய்த் தொழுதார்கள்.

**விளக்கம்:** ஆரம்: மாலை; ஆபரணம் அல்லது சந்தனம் எனினும் பொருந்தும். வாரணாவதம் என்பது காசிமாநகரம். பூரண ஞானம் என்பது பூர ஞானம் என நின்றது.

(ஆதி. வாரணாவதம். ஐவரின் சிவ வணக்கம்.)

## காசிவிசுவநாதன் அருள்பெற்றூர்

13 அங்கு அ வன்தன்
அருள்பெற்று, அமைச்சன்அங்கு

இங்கி தத்தொடு
இயற்றிய நீள்கொடி

மங்குல் தோய்மணி
மாளிகை எய்தினர்;

சங்கம் விம்ம,
முரசம் தழங்கவே.

**பொழிப்பு :** அந்தக் காசி நகரத்தில் விசுவநாதப்பெருமான் கருணையை அடைந்து,(துரியோதனனின்)மந்திரியானவன் அந்தக் காசி நகரத்தில் சில எண்ணக் குறிப்போடு உண்டாக்கிய நீண்ட கொடிகள் கட்டப்பெற்ற வானளாவிய அழகிய மாளிகையைச் சங்கு ஒலி முழங்க, முரசு ஓசை தழைக்க அடைந்தனர் (பாண்டவர்.)

**விளக்கம் :** அங்கு: காசிமா நகரையும், அவன்: விசுவநாதப் பெருமானையும் சுட்டும். இங்கிதம் : எண்ணக்குறிப்பு; ஈண்டுக் கபட நோக்கு.

(ஆதி. வாரணுவதம். ஐவரும் விசுவநாதனை வணங்கிப் புதிய மாளிகையை (அரக்கு மாளிகையை) அடைதல்)

## முக்கண் அற்புதன்

14 அக்க ணத்திடை, அன்னையில்
அணுகிஆங்கு அவரை,

தொக்க சித்திரத் தூண்அடித்
துவாரமே வழியா,

பொக்கெ னக்கொடு போய்அகல்
வனத்திடைப் புகுந்தான்;

முக்கண் அற்புதன் முனிந்தனூர்
மூவரோடு ஒப்பான்.

**பொழிப்பு :** அப்பொழுது அன்னையாம் குந்தி இருந்த இடத்தை அடைந்து, அவ்விடத்தின் நின்றும் துணைவர் நால்வரையும், அன்னையையும் பொருத்தப்பட்ட அழகிய தூணின் அடித்துவாரத்தின் வழியாக, விரைந்து கொண்டு சென்று, அகன்ற காட்டினுள்ளே நுழைந்தான் (வீமன்.) (அப்போது) மூன்றுகண் படைத்த அற்புதனாகிய சிவபெருமான் கோபித்து அழித்த முப்புரத்தினின்றும் தப்பி ஓடிய மூன்று பேரை நிகர்த்தான் வீமன்.

**விளக்கம் :** கணம்: பொழுது. அன்னை: குந்தி. அவரை: துணைவர் நால்வரையும், தாயையும். தொக்க: பொருத்தப் பெற்ற. பொக்கு: விரைவுக் குறிப்பு. முப்புரத்தைச் சிவபெருமான் எரித்தபோது அத்தீயினின்றும் சுதன்மன், சுசீலன், சுகுத்தி என்ற மூவரும் தப்பி ஓடினர் என்ப. எரியும் அரக்கு மாளிகையின்றும் தப்பி வந்த வீமன் அவர்களை நிகர்த்துக் காணப்பட்டான் என்க.

(ஆதி. வாரணவதம். அரக்கு மாளிகையைக் கொளுத்தி, வீமன் துணைவரையும் தாயையும் கொண்டு தப்பித்தல்.)

## சிவனை வழிபடும் மார்க்கண்டன்

15 "அவனை இடுபலி அருளுக!" எனமொழி
அளவில், மறலியும் உளைவுறச்

சிவனை வழிபடும் மகவை அருளிய
செனக செனனியர் நிகர்என,

தவனில் முதிர்தரு முனியும், வழுவுஅறு
தனதுஇல் அறனுடை வனிதையும்

துவனி அற,மன மகிழ்வொடு இனிதுஅறு
சுவைகொள் அமுதுஅடு தொழிலராய்.

**பொழிப்பு :** "அந்த வீமனைப் பலியாகக் கொடுக்க" எனக் குந்தி கூறிய அளவில், காலனும் வருந்துமாறு சிவபெருமானை வழிபட்ட மார்க்கண்டனைப் பெற்ற தாய் தந்தையராகிய செனக செனனியர் போல, தவத்தினால் முதிர்ச்சி

அடைந்த முனிவனும், குற்றமற்ற அவனுடைய இல்வாழ்க்கைத் துணைவியும் அழுகையை ஒழித்து, மனக்களிப்போடு இனிதாக ஆறு சுவையோடு கூடிய உணவை உண்டாக்கும் தொழில் உடையவராய்,

விளக்கம் : இப்பாடல் குளகம். முடிவு பின்னே வரும். அவன் என்பது வீமனைச் சுட்டும். மறலி: எமன். உளைவுறுதல்: வருந்துதல். மகவு: மார்க்கண்டன். தவம் என்பதன் போலி தவன். வனிதை: பெண். துவனி: ஒலி. அடுதொழில்: சமைத்தல் தொழில்.

(ஆதி. வேத்திரகீயச் சருக்கம். அந்தணனும் அவன் மனைவியும் பகன் என்ற அசுரனுக்கு அனுப்ப முறை உணவு ஆக்குதல்.)

## ஈசனோடும் தவம்புரி உமை

16 வாச மாமணி விளக்குஎ டுப்பஇவன்
வந்து, தாம்உறையும் மனைபுகுந்து,
ஈச னோடுஉமை எனத்த வம்புரியும்
இருவர் தாள்களும் இறைஞ்சியே,
நேசம் ஆனஅருள் அன்னை யைத்தொழுது,
தம்மு னைத்தொழுது, நெஞ்சுறத்
தேசி னோடுஇளைஞர் தொழம கிழ்ச்சியொடு
தழுவி னன்முறைமை திகழவே.

பொழிப்பு : மணம் பொருந்திய சிறந்த அழகிய விளக்கு எடுத்து வரவேற்ப, வீமன் நகரத்துக்குள் வந்து, தாம் தங்கி இருக்கும் வீட்டில் நுழைந்து, சிவபெருமானோடு தவம் செய்கின்ற உமையவள் என்று சொல்லத்தக்க அவ்வீட்டுக்கு உரிய இருவர் அடிகளையும் வணங்கி, அன்புமிக்க கருணை வடிவமான தன் தாய் குந்தியை இறைஞ்சி, தம்முன்னோனாகிய தருமனைக் கும்பிட்டு, மனமார விளக்கமாகத் தம்பிமார்கள் தன்னை வணங்க, முறைப்படி களிப்போடு இளைஞர்களைத் தழுவிக் கொண்டான்,

**விளக்கம் :** வாசம்: மணம். நேசம்: அன்பு. அருள் : கருணை. தம்முன்: தனக்கு மூத்தோனாகிய தருமன். தேசு: விளக்கம். இளைஞர் : பார்த்தன், நகுலன், சகாதேவன் ஆகிய தம்பியர் மூவர்.

(ஆதி. வேத்திரகீயம். வீமன் பகனைக் கொன்று, நகரத்தார் மணிவிளக்கு எடுத்து வரவேற்ப வீடு புகுதல்.)

## அரன் இருந்த கயிலைமலை

17 கலைவருத்தம் அறக்கற்ற கன்னன் என்னும்
கழற்காளை, அரன்இருந்த கயிலை என்னும்

மலைவருத்தம் அறஎடுத்த நிருதன் என்ன,
மன்அவையில் வலியுடனே வந்து தோன்றி,

நிலைவருத்தம் அறநின்று பரிய கோல
நீள்வரிநாண் மயிர்க்கிடைக்கீழ் நின்றது என்ன,

சிலைவருத்தம் அறவளைந்து, வளைந்த வண்ணச்
சிலைக்கால்தன் முடித்தலையைச் சிந்த வீழ்ந்தான்.

**பொழிப்பு :** கலைகளை வருத்தம் இன்றி எளிமையாகக் கற்றுக் கொண்ட கன்னன் என்ற வீரக்கழல் அணிந்த காளையானவன், சிவன் இருந்த கயிலை என்ற மலையை வருந்துதல் இன்றித் தூக்கிய இராவணன் என்ற அரக்கனைப் போல, மன்னவர் சபையில் ஆற்றலைக்காட்டி எழுந்து வந்து, கம்பீரமாக நின்று, பெரிய அழகிய நீண்ட கட்டமைந்த நாண், மயிர் அளவு என்று சொல்லத்தக்கவாறு வில்லை வருத்தமின்றி வளைத்து, வளைந்த அழகிய அந்த வில்லின் நுனி, தன் மகுடமணிந்த தலையை இடறிவிட வீழ்ச்சி அடைந்தான்.

**விளக்கம் :** காளை: கன்னன். அரன்: சிவன். நிருதன்: இராவணன். பரிய: பருத்த. கோலம்: அழகு. நாண்: வில்லிற் பூட்டும் கயிறு. சிலை: வில். கன்னன் துரோபதை திருமணத்துக்குப் பணயம் வைத்திருந்த வில்லை எடுத்து வளைத்து மயிரளவுதான் மிச்சம் என்று சொல்லத்தக்க வகையில் நாணை இழுத்துவிட்டான். பிறகு வில்லின் நுனியால்

இடரப்பட்டு வீழ்ந்தான் என்க. அரன் இருந்த கயிலையை அரக்கன் தூக்கியது பெரிதே எனினும் அவன் அங்கு அடைந்தது தோல்வியாதலின், இங்கும் தோல்வியடைந்த கன்னனுக்கு அவன் உவமன் ஆயினன்.

(ஆதி. துரோபதை மாலையிட்ட சருக்கம். வில்வளைத்த கன்னனின் தோல்வி.)

## மேருகிரி எடுத்த ஈசன்

18 'மன்மரபில் பிறந்துஇருதோள் வலியால் இந்த
மண்ஆளும் அவர்க்குஅன்றி, மறைநூல் வாணர்
தொல்மரபில் பிறந்தவரும் இலக்கு வீழ்த்தால்,
சூட்டுமோ தொடையில்இளம் தோகை?' என்ன,
தன்மரபுக்கு அணிதிலகம் ஆன வீரன்,
'தகவுஅன்றே? மன்றலுக்குத் தாழ்வோ?' என்றான்;
வில்மரபில் சிறந்தநெடு வில்லை, ஈசன்
மேருகிரி எடுத்ததென விரைவில் கொண்டான்.

**பொழிப்பு :** 'அரசர்கள் குலத்தில் தோன்றி இரண்டு தோள்களின் ஆற்றலால் இந்த உலகத்தை ஆளுகின்ற அரசர்கள் அல்லாமல், வேதநூலால் வாழ்கின்ற பழைய குலத்தில் தோன்றியவரும், இலக்கை எய்தால், மயிலனைய சாயல்உடைய இவ்விளம் பெண் மாலை இடுவாளா?' என்ன (அந்தணர் நடுவுள் இருந்த ஒருவன் கேட்ப), தன் குலத்துக்கு அழகிய திலகம்போல ஒளிரும் வீரனாகிய திட்டத்துய்மன், தகுதிதானே, திருமணத்துக்கு அது எப்படித் தாழ்வு ஆகும்' என்று இயம்பினன். (உடனே) வில் கூட்டத்துக்குள்ளே சிறந்ததாகிய நீண்டவில்லை, சிவபிரான் மேரு மலையைத் தூக்கியதுபோல, விரைந்து பற்றி எடுத்தான் (அந்தணர் வடிவத்தில் மறைந்திருந்த பார்த்தன்.)

**விளக்கம்:** இலக்கு: குறி. சூட்டுதல்: அணிதல். தொடையல்: மாலை. இளந்தோகை : துரோபதை. வீரன்: துரோபதையினுடன் பிறந்த திட்டத்துய்மன். மன்றல் : மணம். ஈசன் : சிவபிரான். விசயன் வெற்றிகொண்டவன் ஆதலின், வெற்றிகொண்ட சிவனோடு உவமை உரைக்கப் பெற்றான்.

(ஆதி: துரோபதை மாலையிட்ட சருக்கம். ஐயத்தைத் தெளித்து அருச்சுனன் வில் எடுத்தல்.)

## புரவிசயன்

19 ஆடம்பர மன்வேடம்
அகற்றித்தொழு தகுதொல்
வேடம்பெறு மறையோருடன்
விசயன்,புர விசயன்
சூடம்தரு பாகீரதி
தோய்காலையில், அவணே
சேடன்தல மடவார்புனல்
அயர்வான்எதிர் சென்றார்.

**பொழிப்பு:** ஆரவாரமான அரச வேடத்தை அகற்றி, தொழத்தக்க பழைமையான வேடம் பெற்ற மறையவரோருடன் பார்த்தனுனவன், முப்புரத்தை வென்ற சிவன் முடியினின்றும் தோன்றிய கங்கையில் நீராடிய பொழுது, அவ்விடத்து நாகலோகத்துப் பெண்கள் கங்கையாட எதிர் சென்றார்கள்.

**விளக்கம்:** விசயன்: பார்த்தன். புரவிசயன்: திரிபுரங்களை வென்ற சிவன். சூடம்: சடைமுடி. பாகீரதி: கங்கை. தோய்தல்: ஆடுதல். சேடன்தலம்: நாகலோகம்.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம். பார்த்தன் கங்கை ஆடுதலும், நாகலோகத்துப் பெண்கள் எதிர்ப்படலும்)

## விடையோன் பாகம் திறைகொண்டவள்

20 இச்சைப்படி தன்பேர்அறம்
எண்நான்கும் வளர்க்கும்
பச்சைக்கொடி, விடையோன்ஒரு
பாகம்திறை கொண்டாள்,

செச்சைத்தொடை இளையோன்நுகர்
தீம்பால்மணம் நாறும்

கச்சைப்பொரு முலையாள்உறை
கச்சிப்பதி கண்டான்.

பொழிப்பு: விருப்பப்படி தனக்கு உரிய பெரிய அறம் முப்பத்து இரண்டையும் வளர்க்கின்ற மரகதவல்லி, ஏறூர்ந்த செல்வனின் உடம்பில் ஒரு பகுதியைக் கப்பமாகப் பெற்றவள், சிவந்த மாலையை அணிந்த இளையோனாகிய முருகக் கடவுள் அருந்திய இனிய பால்மணம் கமழும் இரவுக்கையை மோதுகின்ற முலையைஉடைய காமாட்சி, வாழுகின்ற கச்சி நகரைக் கண்டான் (பார்த்தன்).

விளக்கம்: திறை: கப்பம். செச்சை: சிவப்பு. பொருதல்: போர்செய்தல். கச்சிப்பதி: காஞ்சி நகரம். பார்த்தன் காஞ்சிக்குள் நுழைந்தவுடன் விடையோன் பங்கில் உறை அறம் வளர்த்த நாயகியின் நினைவுதான் வில்லிபுத்தூர் ஆழ்வாருக்குத் தோன்றுகிறது.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. அருச்சுனன் காஞ்சி நகரத்தைக் காண்டல்).

## எண் புயனார்

21 அயனார்புரி மகசாலையும்,
அணிஅத்தி கிரிக்கே

மயனார்செய் திருக்கோயிலும்,
மாநீழலின் வைகு,எண்

புயனார்உறை மெய்க்கோலமும்,
உள்அன்பொடு போற்றி,

பயன்ஆர்புனல் நதிஏழும்அந்
நகரூடு படிந்தான்.

பொழிப்பு: பிரமதேவன் செய்த வேள்விச் சாலையையும், அழகிய அத்திகிரித் தலத்தில் மயன் என்னும் தெய்வத் தச்சன் கட்டிய கோயிலையும், மாமரத்தின் நீழலின் கீழ் உறைகின்ற எண்தோள் கொண்டவர் உண்மைக் கோலத்தையும்

உள்ளன்போடு வணங்கி, பயன்தருகின்ற நீருள்ள ஏழு ஆற்றிலும் அக்காஞ்சி நகரத்திலே ஆடினுன்.

**விளக்கம் :** அத்திகிரி: காஞ்சியிலுள்ள வரதராஜப் பெருமாள் கோயில். மாநீழலில் வைகு எண்புயனுர்: ஏகாம்பரநாதர். படிதல் : குடைந்து ஆடுதல். பார்த்தன் காஞ்சியில் காமாட்சிஅம்மனை வணங்கினுன், திருமால் கோயிலில் கும்பிட்டான், சிவன்கோயிலைத் தொழுதான் என்க.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. அருச்சுனன் காஞ்சிக் கோயில்களை வணங்கல்.)

## கற்ருர் தொழும் அருணுசலம்

22 பெற்ருள்பகந்து அண்டங்கள்
அனைத்தும், அவை பெற்றும்
முற்ருமுகிழ் முலையாளொடு
முக்கண்ணர் விரும்பும்,
பற்றும்என, மிக்கோர்இகழ்
பற்றுஒன்றினும், உண்மை
கற்ருர்தொழும் அருணுசலம்
அன்போடுகை தொழுதான்.

**பொழிப்பு :** உலக அண்டங்களையெல்லாம் ஈன்ருள் ; அவை அனைத்தையும் ஈன்றும் முதிர்ச்சி அடையாத முகிழ்த்த உண்ணுமுலையாளோடு மூன்று கண்படைத்த அண்ணுமலையார் விரும்பி உறைகின்ற, பற்றிக் கொள்ளுதற்குரிய இடம் ஆம் என்று, மேலோர்கள் வெறுக்கின்ற பற்று, தம்மைச் சேர்ந்தாலும் உண்மை உணர்ந்த அறிஞர்கள் வணங்கும் திருவண்ணுமலையை அன்போடு கும்பிட்டான் (அருச்சுனன்.)

**விளக்கம் :** பற்றை விட்டவர்களும் பற்றிக் கொள்ளுதற்கு உரிய இடம் என்று கருதி உண்மை கற்றவர்கள் கைதொழும் அருணுசலம் என்க.

(ஆதி. அருச்சுனன் தீர்த்தயாத்திரை. அருச்சுனன் அண்ணுமலையை வணங்குதல்.)

## கவிஞானியர் பருகும் சுவை அமுதர்

23 உருகும்கமழ் நெய்பால்இரு
பாலும்கரை ஒத்துப்

பெருகும்துறை ஏழ்ஏழு
பிறப்பும்கெட மூழ்கி,

கருகும்கரு முகில்மேனியர்,
கவிஞானியர் கண்ணில்

பருகும்சுவை அமுதுஆனவர்
பாதம்தலை வைத்தான்.

**பொழிப்பு :** உருகிவருகின்ற மணமுள்ள நெய்யும் பாலும் இரண்டு பக்கமும் கரையை மோதிப் பெருக்கெடுத்து வருகின்ற துறையிலே ஏழேழு பிறப்பும் நீங்கக் குளித்து, கருமை நிறம்கொண்ட பெரியமேகம் போன்ற நிறத்தை உடையவர் ஆகிய திருமால், கவிஞானியராகிய தேவார ஆசிரியர்கள் கண்ணினுல் உண்ணும் சுவைமிக்க அமுதம் போன்றவராகிய சிவன், ஆகியோர் திருவடிகளைத் தலைமீது கொண்டான் (பார்த்தன்.)

**விளக்கம் :** நெய்யும், பாலும் பெருகிய துறை என்றமையால் பெண்ணை நதி என்றும், கருகும் கருமுகில் மேனியர் பெண்ணையாற்றின் கரையிலுள்ள திருக்கோவலூர் உலகளந்த பெருமாள் என்றும், பருகும் சுவை அமுதானவர் கோவல் வீரட்டச்சிவபிரான் என்றும் கொள்க. கவிஞானியர் அப்பர், சம்பந்தர் என்க.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. திருக்கோவலூர் வணங்கல்.)

## இயல்வாணனை அடிமைகொண்ட ஐஆனனன்

24 ஐஆனனன் இயல்வாணனை
அடிமைகொள, மெய்யே

பொய்ஆவணம் எழுதும்பதி
பொற்போடு வணங்கா,

மெய்ஆகம அதிகைத்திரு
வீரட்டமும், நேமிக்

கையாளன்அ கீந்திரபுர -
-மும்கண்டுகை தொழுதான்.

**பொழிப்பு :** ஐந்துமுகம் படைத்த சிவபெருமான் இயல் வாணராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை அடிமையாக்கிக் கொள்ளுவதற்காக உண்மையாகவே பொய்யோலையை எழுதிய ஊராகிய திருவெண்ணெய்நல்லூரை அன்போடு கும்பிட்டு, உண்மையான ஆகமத்திற்கு உரிய திருஅதிகை வீரட்டக் கோயிலையும், சக்கரத்தைக் கையில் தாங்கிய திருமாலுக்குரிய அகீந்திரபுரக் கோயிலையும் கண்டு கும்பிட்டான் (அருச்சுனன்.)

**விளக்கம் :** ஆனனம் : முகம். இயல்வாணன் : தமிழில் வல்லவராகிய சுந்தர மூர்த்திகள். ஆவணம் : ஓலை. பொய் யோலை எழுதிய ஊர்: திருவெண்ணெய்நல்லூர். திருவெண்ணெய்நல்லூர் சுந்தரரை ஆட்கொண்டதலம். திருஅதிகை வீரட்டம் அப்பரை ஆட்கொண்ட தலம். அகீந்திரபுரம் நடு நாட்டிலுள்ள பிரபந்தம் பெற்ற திருமால் தலங்கள் இரண்டனுள் ஒன்று. மற்றொன்று மேலேசொன்ன திருக்கோவலூர்.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. பார்த்தன் வெண்ணெய்நல்லூர், அதிகை, அகீந்திரபுரம் வணங்குதல்.)

## பொன்னம்பல நாதன்

25 இன்னம்பல பலயோனியில்
எய்தாநெறி பெறவே,

முன்னம்பலர் அடிதேடவும்
முடிதேடவும் எட்டா,

அன்னம்பல பயில்வார்புனல்
அணிதில்லையுள் ஆடும்

பொன்னம்பல நாதன்கழல்
பொற்போடு பணிந்தான்.

**பொழிப்பு :** இன்னும் பலபல பிறவியில் பொருந்தாத வழியை எய்துதற்கு, முன்னே மால், பிரமன் ஆகிய இருவரும் அடியையும் முடியையும் தேட எட்டாமல் ஓங்கிய, அன்னங்கள் பல திரிகின்ற நிறைந்த நீர்சூழ்ந்த அழகிய தில்லைநகரிலே கூத்தாடுகின்ற பொன்னம்பல நாதனின் திருவடியை அன்போடு வணங்கினன் (அருச்சுனன்.)

**விளக்கம் :** திருமால், பிரமன் ஆகிய இருவரைப் பலர் என்றது தமிழ் வழக்கு. பொன்னம்பலநாதன் கழல் பணிந்தால், பிறவிப் பெருங்கடல் நீந்துவர் என்க.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. பார்த்தன் தில்லையை வணங்கல்.)

## இறையோனும் உமையும்

26 இந்திரனும் சசியும்என, இறையோனும்
உமையும்என, எம்பி ரானும்
செந்திருவும் என,காம தேவும்இர-
-தியும்என,வெஞ் சிலைவ லோனும்
சந்துஅணிபூண் முலையாளும், சதுர்மறையோர்
சடங்குஇயற்ற, தழல்சான்று ஆக,
துந்துபியின் குலம்முழங்க, சுரிசங்கின்
குழாம்தழங்க, துலங்க வேட்டார்.

**பொழிப்பு :** தேவேந்திரனும் இந்திராணியும் என்று சொல்லுமாறு, சிவபிரானும் உமையவளும் என்னும்படி, திருமாலும் திருமகளும் எனக் கூறுமாறு, மன்மதனும் இரதியும் என்னுமாப்போல, கொடிய வில்லில் வல்லவனை அருச்சுனனும், சந்தனம் அணிந்த ஆபரணம் பூண்ட தனங்களை உடையாளாகிய சித்திராங்கதையும், நான்கு வேதங்களிலும் வல்லவர்கள் சடங்கு செய்ய, நெருப்புச் சாட்சியாக, இசைக் கருவிகளின் கூட்டம் ஒலிக்க, வளைந்த சங்குக் குலங்கள் முழங்க, நல்வாழ்வு பெறத் திருமணம் செய்து கொண்டார்கள்.

**விளக்கம் :** சசி: இந்திராணி. இறையோன்: சிவபெருமான். எம்பிரான்: திருமால். செந்திரு: இலக்குமி. சிலைவலோன்: பார்த்தன். முலையாள்: சித்திராங்கதை. குலம்: கூட்டம். சுரி: வளைந்த. துலங்க: வாழ்வுபெற. வேட்டல்: மணம் புரிதல்.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. பாண்டு மைந்தனுக்கும் பாண்டியன் மகளுக்கும் திருமணம்.)

## திங்களுடன் அரவு உறவுசெய்யும் வேணி

27 அந்தநெடும் திசைப்புனல்கள் ஆடும் நாளில்
ஐந்துதடத்து அரம்பையர்ஓர் ஐவர் சேர,
இந்திரன்வெஞ் சாபத்தால் இடங்கர் ஆகி,
இடர்உழந்தோர் பழையவடிவு எய்த நல்கி,
சிந்துதிரை நதிபலவும் சென்று தோய்ந்து,
திங்களுடன் அரவுஉறவு செய்யும் வேணிக்
கொந்துஅவிழும் மலர்இதழித் தொடையோன் வைகும்
கொடிமதில்சூழ் கோகன்னம் குறுகி னனே.

**பொழிப்பு :** அந்த நீண்ட திக்குகளிலுள்ள தீர்த்தங்களிலெல்லாம் ஆடுகின்ற காலத்து, ஐந்து தடாகங்களில் தேவமாதர்கள் ஐவர்கள் ஒருசேர, தேவேந்திரனால் ஏற்பட்ட கொடிய சாபத்தால் முதலைகளாகித் துன்பத்தை நுகர்ந்து கொண்டிருந்தவர், பழைய உருவத்தை அடையுமாறு அருளி, அலைவீசுகின்ற ஆறுகள் பலவற்றிலும் சென்று ஆடி, மதியுடன் பாம்பு கலந்து உறவாடும் சடாமகுடத்தில், கொத்துக்கள் விரிந்த கொன்றைப் பூமாலையை அணிந்திருக்கின்ற சிவபெருமான் உறைகின்ற, கொடிகட்டிய மதில் சூழ்ந்த திருக்கோகன்னம் என்னும் தலத்தை அடைந்தான் (அருச்சுனன்.)

**விளக்கம் :** இடங்கர் : முதலை. சிந்துதல் : வீசுதல். திரை : அலை: தோய்ந்து : ஆடி. கொந்து : கொத்து. இதழி : கொன்றை. தொடை : மாலை. கோகன்னம் : மேற்குக்கடற்

கரையிலுள்ள, அப்பர், சம்பந்தர் இருவரும் பாடி அருளிய தேவாரத் தலம்.

*'மாகடல்சூழ் கோகன்னம் மன்னி னானே'*

என்பர் அப்பர் சுவாமிகள். சிவபெருமான் சடாமுடியில் ஒன்றுக்கொன்று பகையாகிய திங்களும் அரவும் உறவுசெய்யும் செய்தியை,

*'இந்துவும் அரவும் உறவுசெய் முடி'*

என மற்ருேரிடத்தும் கூறுவர் வில்லி.

(ஆதி. அருச்சுனன் தீர்த்தயாத்திரை. அருச்சுனன் திருக்கோகன்னம் சேர்தல்)

## கோகன்ன வளம்பதி

28 ஆகன்னம் உறச்செம்பொன் வரைவில் வாங்கி
அவுணர்புரம் கட்டழித்தோன் அடியில் வீழ்ந்து,
கோகன்ன வளம்பதியில் தன்பின் வந்த
குலமுனிவர் தமைஇருத்தி, கோட்டுக் கோட்டு
நாகுஅன்னப் பெடையுடனே ஆடும் கஞ்ச
நறைவாவி வண்துவரை நண்ணி, ஆங்கண்
பாகுஅன்ன மொழிக்கனிவாய் முத்த மூரல்
பாவைநலம் பெற,முக்கோல் பகவன் ஆனுன்.

**பொழிப்பு:** காதளவு பொருந்துமாறு செவ்விய பொன் மலையை வில்லாக வளைத்து, அவுணர்களின் திரிபுரத்தை அடியோடு அழித்தவனுகிய சிவபெருமானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, வளமை வாய்ந்த கோகன்ன நகரத்தில் தன்னுடன் வந்த முனிவர் குழாத்தை விட்டுவிட்டு, நீர்க் கரையில் இளம் சங்குகள் பெட்டை அன்னத்துடன் விளையாடும் தேன் பொருந்திய தாமரைத் தடாகம் கொண்ட துவாரகை நகரத்தை அடைந்து, அங்கு வெல்லப்பாகு போன்ற பேச்சினையும், கனிந்த வாயையும், முத்துப்போன்ற பற்களையும் பெற்ற பாவையாகிய சுபத்திரையின் இன்பத்தை நுகர, திரிதண்டம் தூக்கிய துறவியாக ஆனுன் (பார்த்தன்.)

விளக்கம்: ஆகன்னம்: காதளவு. உற: பொருந்த. பொன்மலை: மேருமலை. முதல்கோடு கரை. இரண்டாவது கோடு வளைந்த சங்கம். நாகு: இளமை. கஞ்சம்: தாமரை. நறை: தேன். துவரை: துவாரகாபுரி. மூரல்: பல். பாவை: சுபத்திரை. முக்கோல்: திரிதண்டம். பார்த்தன் சுபத்திரையை மணக்கத் துறவுக் கோலம் பூண்டான்.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. பார்த்தன் கோகன்னத்தை நீங்கித் துவாரகையை அடைந்து துறவு பூணல்.)

## மதிஆர் செஞ்சடை முடியோன்

29 யதிஆகி அவண்இருந்த தோழன் தன்னை,
யதுகுலநா யகன்பரிவோடு இறைஞ்ச, அன்பால்
அதியான நெடுஞ்சுருதி ஆசி கூறி,
ஆகம்உறத் தழீமகிழ்வுற்று, ஆல நீழல்
மதிஆர்செஞ் சடைமுடியோன் என்ன வைகி,
வந்தவாறு உரைப்ப,நெடு மாலும் கேட்டு,
துதியாடி, 'காலையிலே வருதும்' என்று,
சொற்று,இமைப்பில் மீளவும்போய்த் துவரை சேர்ந்தான்.

**பொழிப்பு:** துறவி ஆகி அங்கு வீற்றிருந்த தோழனாகிய அருச்சுனனை, இடையர் குலத்துத் தலைவனாகிய கண்ணன், அன்புடன் வணங்க, அன்பினால் மேம்பட்ட நீண்ட மறை முறைப்படி வாழ்த்துக் கூறி, மெய்பொருந்தத் தழுவிக் களித்து, ஆலமரத்தின் நிழலில் அறம் நால்வர்க்கு உரை செய்ய வீற்றிருந்த திங்கள் சூடிய செஞ்சடை வானவனைப் போல (விசயன்) வீற்றிருந்து, தான் வந்த வரலாற்றைக் கூற, அதனைக் கண்ணன் கேட்டுத் துதி செய்து, 'காலையில் வருகின்றோம்' என்று சொல்லிவிட்டு இமைப்பொழுதில் மீண்டு துவரை நகரை அடைந்தான்.

**விளக்கம்:** யதி: துறவி. தோழன்: விசயன். யதுகுல நாயகன்: கண்ணன். பரிவு: அன்பு. அதியான: மிகுதியான.

சுருதி: மறை. ஆசி: வாழ்த்து. ஆகம்: உடம்பு. மதி: சந்திரன். சொற்று: சொல்லி. பார்த்தன் துறவு வேடத்தில் இருந்தமையின் கண்ணன் அவனை இறைஞ்ச, அவன் கண்ணனுக்கு வாழ்த்துக் கூறினன் என்க.

(ஆதி. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. துவாரகையில் பார்த்தனைக் கண்ணன் காண்டல்.)

## காலாந்தகன்

30 சேலாம் பிறப்பின் திருமால்இது
செப்பும் முன்னே,

காலாந் தகனும் வெருவும்திறல்
காளை தன்னை,

நீலாம் பரனும், யதுவீர
நிருபர் யாரும்,

நாலாம் படையோடு எதிர்சூழ்ந்து,அமர்
நாடி னரே.

**பொழிப்பு:** மீனாகப் பிறந்த கண்ணன் இவ்வாறு சொல்லும் முன்னமே, காலனுக்குக் காலனான சிவபெருமானும் அஞ்சத்தக்க ஆற்றல் பெற்ற காளையாகிய பார்த்தனை, நீல ஆடை அணிந்த பலராமனும், இடைக்குலத்து வீரராகிய நிருபர் பலரும் நால்வகைப் படையோடு எதிர்த்துப் போர் விளைத்தார்கள்.

**விளக்கம்:** சேல்: மீன். காலாந்தகன்: எமனை முடித்தவன். நீலாம்பரன்: நீல ஆடையை அணிந்த பலராமன்.

(ஆதி. அருச்சுனன் தீர்த்தயாத்திரை. பலராமன் வீரருடனும் படையுடனும் பார்த்தனை எதிர்த்தல்.)

## அரனார் விழியால் அழிந்தோன்

31 உரனால், அழகால், உரையால்மற்று
உவமை இல்லா

நரநா ரணர்க்கு நலம்கூர்தரு
நண்பு போல்,வான்,

அரனர் விழியால் அழிந்துஅங்கம்
அநங்கம் ஆன
மரனு ருடன்நண்பு இசைந்தன்று
வசந்த காலம்.

**பொழிப்பு :** ஆற்றலால், எழிலால், சொல்லால் பிற வற்ருல் எவரையும் ஈடுசொல்ல முடியாத பார்த்தனுக்கும் கண்ணனுக்கும் நன்மை மிக்க நட்புப் போல, சிறந்த சிவ பிரான் நெற்றிக் கண்ணுல் உடம்பு வெந்து, உடல் அற்றுப் போன மன்மதனுக்குத் தோழமை பூண்டு வசந்த காலம் வந்தது.

**விளக்கம் :** உரன்: வலிமை. நரன்: அருச்சுனன். நாரணன்: கண்ணன். கூர்தருதல்: மிகுதல். வான்: பெருமை. அரனர்: சிவபிரான். அங்கம்: உடம்பு: அநங்கம் உடம்பு அற்றது. மரனர்: மாரனர் என்பதன் குறுக்கல் விகாரம். எதுகை நோக்கிக் குறுகியது. இசைந்தன்று: பொருந்தியது. வசந்தகாலம்: வேனிற்காலம்.

(ஆதி. அருச்சுனன் தீர்த்தயாத்திரை. வசந்தகாலத்தின் வரவு.)

## முப்புரங்களை முனிந்த முக்கணன்

32 முப்பு ரங்களை முக்கணன் முனிந்தநாள்
மூவர் அம்முழுத் தீயில்
தப்பி னர்உளர்; காண்டவ அடவிவாழ்
தான வர்யார் உய்ந்தார்?
பைப்பு றந்துஅணி மணிஒளி பரந்தெனப்
பல்த லைகளில் பற்றி
வெப்புஉ றுத்தலின், உரகரும் தங்கள்வாய்
விடங்கள் கொன்றென வீழ்ந்தார்.

**பொழிப்பு;** மூன்று நகரங்களை முக்கண் பெற்ற சிவ பிரான் அழித்த காலத்து அந்த முழு நெருப்புக்கு இடையே தப்பிப் பிழைத்தவர் மூவர் உளர். காண்டவக் காடு (எரிந்த காலத்து) அங்கு வாழ்ந்த அசுரர்களில் தப்பிப் பிழைத்தார்

யாரும் இலர். படத்தின் புறத்திலே விளங்குகின்ற அழகிய மணிகளின் ஒளி பரந்ததைப் போல, பல தலைகளிலும் பிடித்து வெம்மை தாக்குதலின் பாம்புகளும் தங்கள் வாயினின்றும் தோன்றும் நஞ்சுகள் கொன்று விட்டன என்று சொல்லுமாறு அழிந்தன.

**விளக்கம்:** முப்புரம் எரிந்த காலத்து மூவர் அதில் தப்பினர் என்பது கதை. பை: பாம்புப்படம். உரகர்: பாம்பு இனங்கள்.

(ஆதி. காண்டவ தகனச் சருக்கம். காண்டவ வனம் எரிந்தபோது யாரும் தப்பவில்லை)

## தமனியச் சிலைக்கை வெள் ஊர்தி

33 தானவர் புரங்கள் நீறுஎழ முனிந்த
தமனியச் சிலைக்கைவெள் ஊர்தி

ஆனவன், நமது புரத்தையும் சுடுவான்
அழன்றனன் போலும்என்று அஞ்சி,

வானவர் நடுங்க, வானவர்க்கு அரசாம்
வலாரியும் மனன்உறத் தளர்ந்து,

'கானவ ருடனே தக்ககன் என்னும்
கட்செவி கெடும்'எனக் கரைந்தான்.

**பொழிப்பு:** அசுரர்களின் மூன்று நகரங்களும் தீப்பற்றி எரியுமாறு சினந்த பொன்மலையை வில்லாகக் கையில் ஏந்திய வெள்ளை விடை ஏறும் சிவபெருமான், நமது நகரத்தையும் சுடுமாறு சினந்து விட்டனனே என்று பயந்து தேவர்கள் நடுக்கம் கொள்ள, அமரர்களுக்கு அரசனாகிய இந்திரனும் உள்ளம் பெரிதும் தளர்ந்து, அக்காண்டவக் காட்டில் வாழ்வாருடன் தக்ககன் என்னும் பாம்பும் அழிந்துவிடுமே என வருந்தினன்.

**விளக்கம்:** தமனியம்: பொன். அழலுதல்: கோபித்தல். வலாரி: தேவேந்திரன். கட்செவி: பாம்பு.

(ஆதி. காண்டவதகனம். வானவர் கவலை)

## பதினொரு உருத்திரர்

34 மாறுபட் டுழிஅப் பற்குனன் கணையால்
மழுக்களும் சூலமும் உடைய,

நீறுபட்டு உடலில் நீற்றுடன் படிய,
நெடுங்கொடி ஊர்தி,ஏ றுகளும்,

ஏறுபட்டு அழிய, சடையில்வார் நதியால்
ஏறிய துளிவான் நெறியும்

சேறுபட் டிடுமாறு ஓடினர் மீள,
பதினொரு திறல்உருத் திரரும்.

**பொழிப்பு:** மாறுபட்டபோது அந்தப் பார்த்தன் அம்புகளால் தாங்கள் கைக்கொண்ட மழுப்படைகளும் சூலப் படைகளும் உடைந்து போக, நெருப்பு அவிந்த பொடிபட்டு உடலில் இருந்த திருநீற்றுடன் பொருந்த, நீண்ட கொடியும் ஊர்தியாகிய ஏறுகளும் அம்புபட்டு அழிய, சடையிலுள்ள நீண்ட கங்கையால் தோன்றிய துளிகள் வானவெளியையும் சேறு ஆக்குமாறு திரும்ப ஓடினர் வலிமை உடைய பதினொரு உருத்திரரும்.

**விளக்கம்:** பற்குனன்: பார்த்தன். மழு: சூலம். நீறு, ஏறு, கங்கை இவைகள் உருத்திரருக்கு உரிய அங்கங்கள்.

(ஆதி. காண்டவதகனம். காண்டவம் எரித்தபோது உருத்திரர் பதினொருவர் பார்த்தனுக்குத் தோற்று ஓடுதல்)

## மதிமுடித்தவன்

35 அருணவெங் கனலோன் கனலொடு கலந்தான்;
ஆசுகன் அவற்குநண்பு ஆனான்;

கருணைஇல் யமனும் கானிடை மடியும்
கணத்திலே கவலைஉற் றனனால்;

வருணனும் கடல்கள் வறத்தல்கண்டு அழிந்தான்;
மதியும்,அம் மதிமுடித் தவனும்

இருள்நிற அரக்கன் தானும்'இங்கு இவரோடு
எங்ஙனம் பொருதும்'என்று இளைத்தார்.

**பொழிப்பு :** செவ்விய கொடிய அக்கினி தேவனும் நெருப்போடு சேர்ந்துகொண்டான். காற்றுக் கடவுள் அவனுக்கு நண்பன் ஆனான். கருணை அற்ற காலனும் கானகத்திலே மடிகின்ற அந்தப் பொழுதிலே கவலை அடைந் தனன். வருணதேவனும் கடல்கள் வற்றுவதைக் கண்டு மனம் உடைந்தான். குபேரனும் வடகீழ்த்திசைக்கு இறை வனாகிய ஈசானனும் நிருதியும் இங்கு இவர்களோடு எங்ஙனம் போர்புரிவது என்று இளைத்தனர்.

**விளக்கம் :** கனலோன்: அக்கினி தேவன். ஆசுகன். காற்றுக்கடவுள். மதி: குபேரன். மதிமுடித்தவன்: வடகீழ்த் திசைக்கு உரிய ஈசானனன். இருள்நிற அரக்கன்: நிருதி. எட்டுத் திக்குப்பாலகர்களில் இந்திரனைத் தவிர அக்கினி, காற்று, எமன், வருணன், குபேரன், ஈசானன்ன், நிருதி ஆகிய எழுவரும் இச் செய்யுளிற் கூறப்பெறுகின்றனர்.

(ஆதி. காண்டவ தகனம். திக்குப்பாலகர்கள் செயல்)

## மாது இடத்தான்

36 மீதுஅடுக்கிப் பசும்பொன்னல் சுவர்செய்து,
மரகதத்தூண் வீதி போக்கி,

ஓதுஇடத்தில் சுருங்காமல் செழுந்துகிர்உத்-
-தரம்பரப்பி, உலகுஏழ் ஏழும்,

மாதுஇடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ
இது!என்ன, வரம்பில் கேள்விச்

சோதிடத்தார் நாள்உரைப்ப, சுதன்மையினும்
முதன்மைபெறத் தொடங்கி னனே.

**பொழிப்பு :** தங்கக்கட்டிகளை மேலும் மேலும் அடுக்கிச் சுவர்கட்டி, மரகத மணிகளால் வரிசையாகத் தூண் நிறுத்தி, சிற்ப நூலில் சொன்னவற்றிலிருந்து குறைவுபடாமல் செழுமையான பவளத்தால் உத்தரம் போட்டு, ஏழு உலகத் திலும், மங்கையை இடப்பக்கத்திலே உடைய சிவபெருமான் தங்குதற்கு இத்தகைய மண்டபம் கிட்டுமோ என்று

சொல்லத்தக்கவாறு, அளவற்ற கேள்வி அறிவுடைய சோதி டக்கலை வல்லார் நல்ல நாள் பார்த்துச் சொல்ல, இந்திரனின் கொலுமண்டபமாகிய சுதன்மை என்ற மாளிகையைவிட மேம்படுமாறு மண்டபத்தைக் கட்டத் தொடங்கினுன் (மயன்)

**விளக்கம்:** மீது: மேலும். மரகதம்: பச்சை. வீதி: வரிசை. துகிர்: பவளம். மாது இடத்தான்: மாதை இடப்பக்கம் உடையவன். வரம்பு: எல்லை. சுதன்மை: இந்திரன் கொலு மண்டபம்.

(சபா பருவம். இராச சூயச் சருக்கம், மயன் மண்டபம் தொடங்கல்.)

## பிஞ்ஞகன் கிரி

37 **பாரதப்பெயர்கொள் வருடம் ஆதி,பல**
**பாரின் உள்ளநர பாலரை,**
**பேர்அ றக்குலமும் வேர றப்பொருது,**
**பிஞ்ஞ கன்கிரியும் இமயமும்**

**சேர மோத்தி,அவண் உள்ள கந்தருவர்**
**கின்ன ரேசர்பலர் திறைஇட,**
**போர்அ டர்த்து,உகம் முடிந்த காலைஎழு**
**புணரி என்னநனி பொங்கியே.**

**பொழிப்பு:** பாரத வருடம் என்று பெயர் கொண்ட நாடு முதலிய பலநாட்டிலும் உள்ள மன்னர்களை, பேர் அற்றுக் குலமும் வேர் அற்றுப் போமாறு போர் செய்து, சிவபிரான் வெள்ளி மலையும் இமயமலையும் ஒரு சேர மோதி, அங்குள்ள கந்தருவர், கின்னரர் முதலிய பல்லோர் கப்பம் கொடுக்க, பெற்று, யாண்டும் போர் புரிந்து, உக முடிவுக் காலத்தில் எழுகின்ற கடலைப் போல நன்கு பொங்கி.

**விளக்கம்:** இப்பாடல் குளகம். பாரதப் பெயர்கொள் வருடம்: பாரத வருடம். நரபாலர்: மன்னர். பிஞ்ஞகன்: தலை அலங்காரம் உடைய சிவபெருமான். கிரி: கைலைமலை. திறை: கப்பம்: புணரி: கடல்.

(சபா. இராசசூயம். வேள்வியின் பொருட்டுப் பாண்டவர் திக்கு விசயம்.)

## பிறை தவழ் கடுக்கைக் காட்டு நதி

38 கதியொடு பிறைதவழ்
கடுக்கைக் காட்டுநதி

நதிதரு புனல்கொடு
நானம் ஆட்டினர்;

விதிமுறை அறிந்தவர்
வேள்விக்கு ஏற்பன

பதியுடன் அணிந்தனர்
பாவை தன்னையும்.

**பொழிப்பு:** திங்கள் உலவுகின்ற கொன்றைக் காடாகிய சிவபெருமான் சடையினின்றும் விரைந்து வருகின்ற நல்ல ஆருகிய கங்கையின் நீர் கொண்டு, தருமனுக்கும், துரோபதைக்கும் குளிப்பாட்டினார்கள். சடங்கு வழியை அறிந்தவர்கள் அதற்குரிய கோலத்தை அவ்விருவருக்கும் செய்தனர்.

**விளக்கம்:** கதி: விரைவு. பிறை: திங்கள். கடுக்கை: கொன்றை. நதி: கங்கை. நானம்: குளித்தல். பதி: தருமன். அணிதல்: அழகு செய்தல். பாவை: துரோபதை.

(சபா. இராசசூயம். தருமனையும், துரோபதையையும் அலங்கரித்தல்.)

## கண்ணுதற் கடவுள்

39 கடகரி உரிவை போர்த்த
கண்ணுதற் கடவுள், மாறி

இடம்வலம் ஆகப் பாகத்து
இறைவியோடு இருந்த வாபோல்,

உடல்கலை உறுப்புத் தோலின்
ஒளித்திடப் போர்த்து, வேள்விக்

கடனினுக்கு உரிய எல்லாம்
கவினுறச் சாத்தி னனே.

**பொழிப்பு:** மதம் பொழிகின்ற யானைத் தோலைப் போர்த்துக்கொண்ட நெற்றிக்கண் பெற்ற கடவுள் மாறுதல் பெற்று, இடப்பக்கத்து உள்ள அம்பிகையை வலப்பக்கத்தில் வைத்துக் கொண்டு இருந்ததுபோல, கருமானின் உறுப்புக்கள் தோன்றுமாறு உரிக்கப்பட்ட தோலினாலே உடல் மூடுமாறு போர்த்து, வேள்விக் கடமைக்குஉரிய அனைத்தையும் அழகாக அணிந்து கொண்டான் (தருமன்.)

**விளக்கம்:** கடகரி: மதயானை. உரிவை: தோல். கண்ணுதற் கடவுள்: சிவபெருமான். உடல்: தருமனின் உடம்பு. கலை: கருமான். உறுப்புத் தோல்: கால்கள், தலை முதலிய அங்கங்கள் தெரியுமாறு உரிக்கப்பெற்ற தோல். கவின்: அழகு. கருமானின் தோல் வேள்வி செய்வோர் அணியும் சிறப்புடையது. வேள்விக்குரிய தலைவன் தலைவியை வலப்பக்கத்தே இருத்திக்கொள்ளுதல் மரபு ஆதலின், துரோபதையை வலத்தில் வைத்துத் தருமன் இருந்த காட்சி, சிவபெருமான் உமையவளை இடம்மாற்றி வலத்தில் வைத்துக்கொண்டு இருந்ததை ஒத்தது என்க.

(சபா. இராசசூயம். தருமனும் துரோபதையும் வேள்வியில் இருந்த காட்சி)

## காபாலி முனியாத வெங்காமன்

40 'பூபாலர் அவையத்து முற்பூசை
பெறுவார், புறங்கானில்வாழ்
கோபால ரோ?'என்று உருத்துஅங்கு
அதிர்த்துக், கொதித்துஓதினன்;
காபாலி முனியாத வெங்காமன்
நிகரான கவின்எய்தி,ஏழ்
தீபால்அ டங்காத புகழ்வீர
கயம்அன்ன சிசுபாலனே.

**பொழிப்பு:** பூவுலகத்து அரசர்கள் சபையிலே முதல் மரியாதை பெறத் தக்கவர் முல்லைநிலக் காட்டில் வாழ்கின்ற இடைக்குலத்தாரோ? எனச் சினங் கொண்டு அதிர்ந்து கொதித்துக் கூறினன்; (கூறினவன் யார்?) சிவபிரானின்

சினத்துக்கு உட்படுவதற்கு முன்னே இருந்த விரும்பத் தக்க மன்மதனை ஒத்த வடிவழகு அடைந்த, ஏழு தீவிலும் அடங்காத புகழ் பெற்ற, வீரனாகிய யானையை ஒத்த சிசுபாலன் என்பவன்.

விளக்கம்: பூபாலர்: பூமியை ஆளும் அரசர்கள். புறங் கான்: முல்லைநிலம். கோபாலர்: பசுக்களைப் பரிபாலிக்கும் இடையர். காபாலி: சிவபெருமான். முனிதல்: கோபித்தல். கயம்: யானை. காபாலி முனியாத காமன்: சிவன் நெருப்புக் கண்ணால் வெந்து அழியாத மன்மதன். இக்கருத்தை, "ஈசன் கண்ணின் நெருப்புரு அனங்கன்" என்பார் கவிச் சக்கரவர்த்தி.

'நின்மலனார் வெண்ணீற்று நெற்றிக்கண் காணாத
மன்மதன்காண் என்னும் வடிவினான்'

என்பர் விறலிவிடுதூது ஆசிரியர்.

(சபா. இராசசூயம். கண்ணன் மீது சிசுபாலன் சினம் கொள்ளுதல்.)

## மாது ஒரு பாகன்

41 'ஈதுஒரு புதுமை, இருந்தவா!' என்பார்;
'இந்திர சாலமோ?' என்பார்;
'மாதுஒரு பாகன் அல்லதுஇக் கண்ணன்
மதிகுலத் தவன்அலன்!' என்பார்;
'கோதுஒரு வடிவாம் புன்மொழி கிளைஞர்
கூறினும் பொறுப்பரோ? என்பார்;
காதுஒரு குழையோன் இளவலைத் தேர்மேல்
கண்டுதம் கண்இணை களிப்பார்.

பொழிப்பு: இஃது ஒரு புதுமையாக இருக்கின்றதே! என்பார் சிலர். இஃது இந்திர சாலமோ? என்பார் வேறுசிலர். இந்தக் கண்ணன் உமையவளைப் பங்கிலே கொண்ட சிவ பெருமான் அல்லாது திங்கட் குலத்தில் தோன்றியவன் ஆகமாட்டான் என்பார் இன்னும் சிலர். குற்றமே ஒரு வடிவ

மாகக் கொண்டு இழிந்த பேச்சுக்களைப் பேசுகின்றவர்கள் உறவினர்களே ஆனாலும் பொறுத்துக் கொள்வார்களா? என்பார் மற்றும் சிலர். காதிலே ஒப்பற்ற தோட்டை அணிந்தவனுடைய தம்பியைத் தேரின்மீது கண்டு தங்கள் இரண்டு கண்களும் களிப்படைவார்கள்.

**விளக்கம்:** கோது: குற்றம். கிளைஞர்: உறவினர். இணை: இரண்டு. காதொரு குழையோன்: பலராமன்.

(சபா. இராசசூயம். சிசுபாலன் ஆவி கண்ணன் திருவடி அடைந்ததைக் கண்டு வியத்தல்)

## உம்பர் நாயகன்

42 சாரணர், இயக்கர், விச்சா-
-தரர்,முதல் பலரும் செஞ்சொல்
ஆரணப் படியே, சூழ்ந்த
அடவிகள் தோறும் வைகி,
நாரணன், மலரோன், உம்பர்
நாயகன் பதங்கள் நச்சி,
காரணத் தவம்செய் வோரைக்
கண்டுகண்டு உவகை கூர்ந்தான்.

**பொழிப்பு:** சாரணர்கள், இயக்கர்கள், வித்தியாதரர்கள் முதலிய பலரும் சிறந்த சொல்லை உடைய மறைகளிற் கூறிய படி பொருந்திய காடுகள் தோறும் தங்கி, திருமால், பிரமன், சிவன் பதவிகளை விரும்பி, ஒவ்வோர் காரணம் பற்றித் தவம் செய்கின்ற பலரையும் பார்த்துப் பார்த்துக் களிப்படைந்தான் பார்த்தன்.

**விளக்கம்:** ஆரணம்: மறை. அடவி: காடு. உம்பர் நாயகன்: சிவன். பதங்கள்: பதவிகள். நச்சி: விரும்பி. உவகை: மகிழ்ச்சி.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலைச் சருக்கம். அருச்சுனன் இமயமலையில் தவம் செய்வோரைக் காண்டல்)

## புண்ணியப் பொருப்பு

43 அரியும்வெங் கரியும் தம்மில்
அமர்புரி முழக்கம் கேட்டும்,
கிரியினின் முழக்கம் கேட்டும்,
கிராதர்போர் முழக்கம் கேட்டும்,
எரிகிளர் முழக்கம் கேட்டும்,
எம்பிரான் இமவான் தந்த
புரிகுழ லோடும் வைகும்
புண்ணியப் பொருப்பைச் சேர்ந்தான்.

**பொழிப்பு:** சிங்கமும், கொடிய யானையும் தங்களுக்குள் போர்செய்கின்ற ஓசையைக் கேட்டும், மலையில் தோன்றும் எதிரொலியைக் கேட்டும், வேடர்கள் போர் செய்து எழுப்பும் ஓசையைக் கேட்டும், நெருப்பு வெடிக்கும் சத்தம் கேட்டும், எங்கள் தலைவனாகிய சிவபெருமான் மலையரையன் பெற்றெடுத்த முறுக்கிய கூந்தலை உடைய உமையவளோடும் வீற்றிருக்கின்ற புண்ணிய மலையை நண்ணினான்(பார்த்தன் )

**விளக்கம் :** கிரி: மலை. கிராதர்: வேடர். எரி: நெருப்பு. எம்பிரான்: சிவன். புண்ணியப் பொருப்பு: கைலைமலை. 'இமவான் தந்த புரிகுழல்' என்பதை "மலையரையன் பொற்பாவை" என்பார் மணிவாசகர். புரிகுழலை, "திருக்குழல் உமை நங்கை" என்பார் திருநாவுக்கரசர்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் கைலையை அடைதல்.)

## கட்செவிக் கச்சுச் சாத்தும் செம்மல்

44 கைம்மலை உரிவை யோடு
கட்செவிக் கச்சும் சாத்தும்
செம்மலை, விழியின் காணான்,
சிந்தையால் கண்டு போற்றி,
அம்மலைச் சாரல் தோறும்
அருந்தவம் புரிகர் கூற,
விம்மலை நீங்கி, ஆங்கண்
மெய்த்தவ விரதன் ஆனான்.

**பொழிப்பு:** கையுள்ள மலையாகிய யானைத்தோல் போர்த்துப் பாம்பைக் கச்சாக அணிந்துகொண்ட சிவபெருமானைக் கண்ணால் காணாதவனாகி, மனத்தால் கண்டு வணங்கி, அந்த மலைச் சாரலிலே அரிய தவம் புரிகின்ற ஏனையோர் கூறக்கேட்டு, விம்முதல் ஒழித்து, அங்கு உண்மையான தவ விரதம் உடையவனாக ஆனான் (அருச்சுனன்.)

**விளக்கம்:** கைமலை: யானை. கட்செவி: பாம்பு. செம்மல்: சிவபெருமான். புரிநர்: செய்கின்றவர்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் தவ விரதன் ஆதல்.)

## கயிலையின் பெருமை

45 எயில்ஒரு மூன்றும் செற்றோன்,
ஏந்திழை யுடனே வைகும்

கயிலையின் பெருமை தன்னைக்
கட்டுரை செய்வது எங்ஙன்?

வெயிலவன் முதலோர் நாளும்
மேம்பட வலம்செய் வார்கள்;

அயிலும்நல் அமுதோர் சூழ்வந்து
அன்புடன் போற்று வாரே.

**பொழிப்பு:** மூன்று கோட்டைகளையும் ஒருங்கே அழித்த சிவபெருமான் உமையவளோடு தங்கி இருக்கின்ற கைலைமலையின் பெருமையை விரித்துச் சொல்வது எவ்வாறு? ஆதவன் முதலியோர் நாள்தோறும் தாங்கள் மேல்நிலை அடைய அம்மலையை வலம் வருவார்கள். நல்ல அமுதத்தை உண்ட தேவர்கள் சூழ்ந்து வந்து அந்த மலையைப் போற்றுவார்கள்.

**விளக்கம்:** எயில்: கோட்டை. செறுதல்: அழித்தல். செற்றோன்: சிவபெருமான். ஏந்திழை: உமையவள். அயிலுதல்: உண்ணுதல். அயிலும்நல் அமுதோர்: தேவர்கள்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. கைலையின் சிறப்பு.)

## புனிதன் வேணி அமரும் மாநதி

46 உருகிய வெள்ளி போல
உயர்முழை தோறும் விழும்
அருவிநீர், புனிதன் வேணி
அமரும்மா நதியின் தோன்ற,
உருகிய பனி,வான் குன்றில்
ஒண்பனிக் கடவுள் வந்து
மருவியது என்னத் தோன்றும்;
வருணமால் வரையின் தென்பால்.

**பொழிப்பு :** உருக்கி வார்த்த வெள்ளிக் கம்பியைப் போல உயர்ந்த சிகரங்கள் தோறும் விழுகின்ற அருவிப் புனல், தூயவனுன சிவபிரானின் சடையில் தங்கியிருக்கும் சிறந்த கங்கையைப்போல் காட்சி அளிக்க, அம்மலையினின் றும் உருகி ஊற்றும் பனி, சிறந்த மலையில் ஒளியுள்ள பனிக் கடவுள் வந்து பொருந்தியதை ஒத்துத் தோன்றும், நிற முள்ள சிறந்த மலையின் தென்பக்கத்தில்.

**விளக்கம் :** முழை: ஈண்டுச் சிகரம். புனிதன்: சிவபெரு மான். வேணி: சடை. மாநதி: சிறந்த கங்கை. வான்குன்று: பெரிய குன்று. வருணம்: நிறம். தென்பால்: தெற்குப்பக்கம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. கைலையின் அருவிக் காட்சி.)

## பூசினன் வடிவம் எலாம் விபூதியால்

47 ஆசில்கான் மறைப்படியும், எண்ணில் கோடி
ஆகமத்தின் படியும்,எழுத்து ஐந்தும் கூறி,
பூசினன் வடிவம்எலாம் விபூதி யால்;அப்
பூதியினைப் புரிந்தசடைப் புறத்தே சேர்த்தான்;
'தேசினல், அப்பொருப்பின் சிகரம் மேவும்
சிவன்இவனே போலும்'எனத் தேவர் எல்லாம்
பேசினர்; வரிசிலைக்கை விசயன் பூண்ட
பெருந்தவத்தின் நிலைசிலர்க்குப் பேசல் ஆமோ?

**பொழிப்பு;** குற்றம் அற்ற நான்கு மறைகளிற் சொல்லிய படியும், கணக்கற்ற கோடி ஆகமத்தில் கூறியபடியும், எழுத்து ஐந்தையும் சொல்லி உடம்பு முழுதும் திருநீற்றை அணிந்து கொண்டான்; அந்தத் திருநீற்றை முறுக்கிய சடையின் பக்கத்திலே பொருத்தினன்; ஒளியினல் அந்த மலையின் உச்சியில் அமர்ந்திருக்கும் சிவபெருமான் இவன் தான் போலும் என்று அமரர்களெல்லாம் உரைத்தார்கள்; கட்டமைந்த வில்லைக் கையில் பிடித்த வெற்றி வீரனுகிய விசயன் மேற்கொண்ட பெரிய தவத்தின் சிறப்பைச் சிலரால் பேச முடியுமா?

**விளக்கம்:** ஆசு: குற்றம். ஆசுஇல்: குற்றம் அற்ற. எழுத்து ஐந்து: சிவாய நம. தேசு: ஒளி. பொருப்பு: மலை. சிகரம்: உச்சி.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனனின் ஐந்தெழுத்தும், திருநீறும்.)

## குலப்பாவையுடன் கயிலைவாழ்வோன்

48 வலப்பாகம் செழும்பவளச் சோதி என்ன,
வாள்நீலச் சோதிஎன்ன மற்றைப் பாகம்,
கலப்பான திருமேனி அணிந்த நீற்ருல்,
கதிர்முத்தின் சோதிஎன, மேனை ஈன்ற

குலப்பாவை யுடன்கயிலைக் குன்றில் வாழ்,விற்
குன்றுடையோன் திருக்கோலம் குறிப்பால் உன்னி,
புலப்பாடு புறம்பொசிய, மார்பும் தோளும்
பூரித்தான்; உடல்புளகம் பாரித் தானே.

**பொழிப்பு:** வலதுபக்கத்தில் செழுமையான பவள நிறம் என்று சொல்ல, ஒளி பொருந்திய நீலநிறம் இன்னொரு பக்கம் என்று இயம்ப, இரண்டும் கலந்த திருமேனியில் பூசப்பெற்ற திருநீற்ருல் முத்தின் ஒளி என்று ஓத, மேனை என்பவளால் பெறப் பெற்ற மேம்பட்ட உமையவளுடன் கைலை மலையில் வாழ்கின்ற மலையை வில்லாக வளைத்த சிவபிரானின் திருக்கோலத்தை உள்ளக் குறிப்பால் நினைத்து, அதற்கு ஏற்ற

தோற்றம் வெளியில் விளங்க, மார்பும் தோள்களும் விம்மினன்; உடல் புளகாங்கிதம் எய்தினன் (பார்த்தன்.)

**விளக்கம் :** இறைவனின் பகுதி செம்மை. இறைவியின் பகுதி பசுமை: இரண்டும் கலந்த திருநீறு அணிந்த முழுவடிவத்தின் பகுதி வெண்மை. எனவே பவளமும் நீலமும் முத்தும் உவமை ஆயின. மேனை, மலையரையன் மனைவி. **உன்னி:** நினைத்து.

(ஆரணியம். அருச்சுனன் தவ நிலை. அருச்சுனன் அம்மையப்பனை உள்ளத்து இருத்தல்.)

## ஆர்புரிந்தார் சிவசிவ என்று?

49 கருந்துறுகல் எனக்கருதிப் பிடியும் கன்றும்,
கனிற்றினமும் உடன்உரிஞ்ச, கறையான் ஏறி,

பொருந்துமுழைப் புற்றதுஎனப் புயங்கம் ஊர,
பூங்கொடிகள் மரன்என்று பாங்கே சுற்ற,

பரிந்து,வெயில் நாள்,மழைநாள், பனிநாள், என்று
பாராமல் நெடுங்காலம் பயின்றுன்; மண்ணில்

அருந்தவம்முன் புரிந்தோரில் இவனைப் போல்மற்று
ஆர்புரிந்தார் 'சிவசிவ'என்று அரிய வாறே,

**பொழிப்பு:** (அருச்சுனன் மீது) பெரிய உராயும் கல் என்று எண்ணிப் பெண் யானையும், யானைக் கன்றுகளும், ஆண் யானைக் கூட்டமும் ஒன்று சேர்ந்து உரச, கறையான் ஏறப்பெற்றுப் பொருந்திய துவாரத்தை உடைய புற்றுஎன்று எண்ணிப் பாம்பு ஊர்ந்து செல்ல, அழகிய கொடிகள் மரம் என்று எண்ணிப் பக்கத்திலே சுற்றிவர, விரும்பி, வெயில் காலம், மழைக் காலம், பனிக்காலம் என்று எண்ணமல் நீண்டகாலம் தவம்புரிந்தான் பார்த்தன்; உலகத்தில் முன்னே அரியதவம் செய்த எவரிலும் இவனைப் போல சிவ சிவ என்று சொல்லி அருமையாகத் தவம் செய்தவர் யார் உளர்? (யாரும் இலர் என்றவாறு.)

**விளக்கம் :** துறுகல்: மா உரிஞ்சு கல். பிடி: பெண் யானை. களிறு: ஆண் யானை. புயங்கம்: பாம்பு. பயிலுதல்: தவம் செய்தல்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் சிவ சிவ என்று சொல்லி அருந்தவம் புரிதல்.)

## கண்ணோட்டம் கருணை அன்றோ

50 **பண்ணுக்கு வாம்பரித்தேர் ஆதபனும்,**
**பணிந்துபசு பதியை நோக்கி,**

**மண்ணுக்குத் தவம்புரியும் தனஞ்சயற்குக்**
**கோடையினும் மதியம் போன்றான்;**

**எண்ணுக்கு வரும்புவனம் யாவினுக்கும்**
**கண்ஆவான் இவனே அன்றோ?**

**'கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்ணோட்டம்'**
**என்பதுஎல்லாம் கருணை அன்றோ?**

**பொழிப்பு :** இசைக்கு ஏற்பத் தாவி நடை போடுகின்ற குதிரை பூட்டிய தேரை உடைய சூரியனும் சிவபெருமானை எண்ணி, வணங்கி, மண்ணைப் பெறுவதற்குத் தவம் செய்கின்ற அருச்சுனனுக்குக் கோடை காலத்திலும் சந்திரனைப் போன்று குளிர்ச்சியை நல்கினான். எண்ணிக்கைக்கு வருகின்ற உலகம் யாவற்றிற்கும் கண்ணாக ஆகின்றவன் இந்தச் சூரியனே அல்லவா? கண்ணுக்கு அணிகின்ற, மணிகள் அழுத்திய ஆபரணம் கண்ணோட்டம் ஆகும். கண்ணோட்டம் என்று சொல்வதெல்லாம் கருணையைத் தானே?

**விளக்கம் :** பண்: இசை. வாம்: தாவுதல். பரி: குதிரை. இசைக்கு ஏற்பக் குதிரை நடைபோடும் என்க. பசுபதி: சிவபெருமான். மண்ணுக்கு: உலக அரசாட்சி பெறுவதற்கு. தனஞ்சயன்: அருச்சுனன். உலகத்துக்குக் கண்போன்றவன் சூரியன் ஆதலின் அவன் கண்ணோட்டமென்னும் கருணையைக் காட்டிக் குளிர்வித்தான் என்க.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. ஆதவனின் கருணை.)

## மதிமுடிப் புண்ணியன்

51 ஈண்டு,தன் கருத்திஞேடு
இயைந்த மாதவம்
பூண்டு,இள மதிமுடிப்
புண்ணி யன்தனே,
வேண்டிய வாறுஎலாம்
விருப்பொடு உன்னினுன்;
பாண்டியன் உயர்குலப்
பாவை கேள்வனே.

**பொழிப்பு:** இங்கு, தன் எண்ணத்திற்குப் பொருந்திய வாறு, சிறந்த தவக்கோலம் பூண்டு, குழவித் திங்களேச் சடையிற் சூடிய புண்ணியனுன சிவபெருமானேத் தான் எண்ணியபடி எல்லாம் காதலோடு நினேந்தான்; பாண்டிய மன்னனின் உயர்ந்த குலப் பாவையாகிய சித்திராங்கதையின் கணவனுகிய அருச்சுனன்.

**விளக்கம்:** பாண்டியன், சித்திரவாகனனென்னும் பாண்டியன். அருச்சுனன் தீர்த்த யாத்திரை வந்தபோது, மதுரையில் இப்பாண்டியன் மகள் சித்திராங்கதையை மணந்தான் என்பது வரலாறு.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலே. அருச்சுனன் தவக் கோலமும் எண்ணமும்.)

## கருமயில் பாகன்

52 குருவுடன் விரகுறக்
கூறி, ஈசனே,
மருவுறு கொன்றைநாள்
மாலே மௌலியை,
கருமயில் பாகனே,
காண்டல் வேண்டிய
திருமகன் தவநிலே
தெரிய, உன்னினுன்.

**பொழிப்பு:** வியாழ பகவானுடன் உணர்வுடன் சொல்லி, ஈசன் என்னும் சொல்லுக்கு உரிய (சிவனை), அன்று அலர்ந்த கொன்றை மாலையை உடைய சடைமுடியை உடையவனை, பச்சை மயில் போன்ற பார்வதியைப் பங்கில் உடையவனைக் காண விரும்பிய தன் அழகிய மகனாகிய அருச்சுனனின் தவத்தின் தன்மையை ஆராய எண்ணினான் (இந்திரன்).

**விளக்கம்:** குரு, தேவகுருவாகிய வியாழன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. மகன் தவத்தை இந்திரன் ஆய்தல்.)

## கற்றைஅம் சடையவன்

53 'நல்தவத்து உறுதியும்,
நரன்கருத்தும், நாம்
முற்றுஅறிகுவம்' என
முன்னும் சிந்தையான்,
கற்றைஅம் சடையவன்
கயிலை அங்கிரி
உற்றுஅறிவு உறுவதற்கு
உபாயம் உன்னினான்.

**பொழிப்பு:** நல்ல தவத்தின் உறுதிப்பாட்டையும் அருச்சுனனின் எண்ணத்தையும் நாம் முழுதும் தெரிந்து கொள்ளுவோம் என்று கருதியவனாய், கூட்டமான அழகிய சடையை உடைய சிவபெருமான் வாழும் எழில் வாய்ந்த கைலை மலையைப் பொருந்தித் தெரிந்து கொள்ளுவதற்கு வழியை நினைந்தான் (இந்திரன்).

**விளக்கம்:** நரன்: விசயன். முன்னுதல்: எண்ணுதல். கற்றை: கூட்டம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. மைந்தனைக் காண இந்திரன் கைலையை அடைய நினைத்தல்.)

## செந்தமிழ் உரைத்த குறுமுனி

54 கந்தனை அளித்த கன்னிஓர் பாகம்
கலந்தமெய்க் கண்ணுதற்கு எதிராய்,
செந்தமிழ் உரைத்த குறுமுனி இருந்த
தெய்வமால் வரையிடைத் தோன்றி,
இந்துவும் அரவும் உறவுசெய் முடிமேல்
இருந்த,மந் தாகினி அருவி
வந்துஇழி புனலும், சந்தனம் கமழ
வந்தது, மந்தமா ருதமே.

**பொழிப்பு:** கந்தக் கடவுளை ஈன்ற கன்னியாம் பார்வதியை ஒரு பகுதியிலே இருத்திக் கொண்ட உண்மை யான நெற்றிக் கண்பெற்ற கடவுளுக்கு எதிராக இருந்து, செந்தமிழைச் சொல்லிய அகத்திய முனிவன் வாழ்கின்ற கடவுள் தன்மை வாய்ந்த பெரியமலையாகிய பொதிகையில் பிறந்து, திங்களும் பாம்பும் உறவாடும் சடையின் மேல் தங்கி இருந்த, கங்கையின் அருவி வந்து விழுகின்ற நீரும் சந்தனம் மணக்க இளம் தென்றல் வந்தது.

**விளக்கம்:** கன்னி: அம்பிகை. உலகம் முழுவதையும் ஈன்றும் இறைவி கன்னியாகவே இருக்கின்றாள்.

*'சிவன்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும்*
*உவந்துஇரு வரும்பு ணர்ந்துஇவ் உலகுயிர் எல்லாம் ஈன்றும்*
*பவன்பிரம சாரி ஆகும்; பான்மொழி கன்னி ஆகும்;*
*தவந்தருஞானத்தோர்க்குஇத் தன்மைதான்தெரியும்அன்றே!'*

என்பது சிவஞான சித்தியார். குறுமுனி: குட்டை வடிவமுள்ள முனியாகிய அகத்தியன். சிவபெருமான் தமிழை உரைத்தான் அவனுக்கு எதிராக இருந்து அகத்தியனும் தமிழ் சொன்னான்.

*'தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்'*

என்பர் கம்பர். வரை: பொதிகை. இது அகத்தியன் இருந்து தமிழ் சொன்ன இடம்.

இந்து: சந்திரன், அரவு: பாம்பு.

*'இந்துவும் அரவும் உறவுசெய் முடி'*

என்பதை,

*'திங்களுடன் அரவுஉறவு செய்யும் வேணி'*

என்று முன்னரும் கூறினுர். மந்தாகினி: கங்கை. மந்தமாருதம்: இளங்காற்று. (தென்றல்) பொதிகையிற் பிறந்த தென்றல் சிவன் முடியிலிருக்கும் கங்கையிற் கலந்து பொதிகை மலையில் மிகுந்திருக்கும் சந்தன மரத்தின் மணத்தைக் கமழச் செய்தது என்க.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. தென்றலின் சிறப்பு)

## புள்ளுடைக் கொடியோர் இருவரும் காணுப் புண்ணியன்

55 உள்உறக் கலக்கம் அறத்தெளிந்து, அசலத்து
உயர்தலை முழையில்நின்று அருவி
வெள்ளம்ஒத்து அமுதம் கரைஅறப் பொழிய,
வெம்மைஅற்று, அளியுடன் குளிர்ந்து,
புள்ளுடைக் கொடியோர் இருவரும் காணுப்
புண்ணியன் பொருப்பிடைத் தவம்செய்
வள்ளல்ஒத் தன;அச் சாரலைச் சூழ்ந்து
வயங்குநீள் வாவியும் சுனையும்.

**பொழிப்பு:** உள்ளே கலக்கம் இல்லாமல் தெளிந்து மலையின் உயர்ந்த சிகரத்தின் குகையினின்றும் வீழும் நீர்ப் பெருக்கை ஒத்து அமுதமானது கரைகடந்து கொட்ட, வெம்மை இன்றிக் கருணையுடன் குளிர்ச்சி பெற்று, அந்த மலைச் சாரலைச் சூழ்ந்து விளங்குகின்ற நீண்ட தடாகம், சுனைகள் ஆகிய நீர்நிலைகள், கருடன், அன்னம் ஆகிய பறவைகளைக் கொடியில் எழுதிக்கொண்ட அரி,அயன் ஆகிய இருவரும் தேடிக் காணமுடியாத புண்ணியனுகிய சிவபிரானின் கைலை மலையிலே தவம் செய்கின்ற வள்ளலாகிய பார்த்தனை ஒத்தன.

**விளக்கம் :** அச்சாரலைச் சூழ்ந்து என்பதை முதலில் எடுத்துக் கொள்க. அசலம்: மலை. முழை: குகை. புள்: பறவை. ஈண்டுக் கருடன், அன்னம். புண்ணியன்: சிவன். வள்ளல்: பார்த்தன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தன் தவம் செய்யும் இடத்தின் சிறப்பு.)

## உமையோடு ஒருவடிவு ஆனேன்

56 நீறுபட்டு இலங்கும் மெய்ந்நிலவு ஒளியால்,
நெஞ்சினில் இருளினை அகற்றி,

மாறுபட் டிடும்ஐம் புலன்களும் ஒடுக்கும்
மாதவன் வளர்த்தசெந் தழலால்,

கூறுபட்டு உமையோடு ஒருவடிவு ஆனேன்
குன்றுசூழ் அறைபொறை அனைத்தும்

ஆறுபட்டு உருகிப் பெருகிஓ டினவால்;
அம்மலை வெள்ளிஆ தலினால்.

**பொழிப்பு :** திருநீறுபட்டு விளங்கும் உடம்பின் நிலவு போன்ற ஒளியினால் உள்ளத்தே தோன்றும் மயக்கத்தை ஒழித்துத், தன்னோடு எப்பொழுதும் மாறுபடும் ஐந்து பொறிகளையும் அடக்கிய, சிறந்த தவத்தை உடையானாகிய பார்த்தன் வளர்த்த சிவந்த நெருப்பினால், பிளவுபட்டு உமையவளோடு ஒருருவமாக ஆன சிவபெருமானின் மலையைச் சுற்றிலும் உள்ள பாறைகள் துறுகல் முழுதும் ஆறாக உருகிப் பெருகி ஓடின, அந்த மலை வெள்ளி ஆக இருத்தலினால்.

**விளக்கம் :** மாறுபட்டிடும் ஐம்புலன்களும் ஒடுக்கும் என்பதை

*'மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப் புலன்ஐந்தின் வழியடைத்து'*

என்பார் மணிவாசகப் பெருமான்.

மாதவன், ஈண்டு அருச்சுனன். அறை: பாறை. பொறை: துறுகல். ஆல்: அசை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை, வெள்ளிமலைக் காட்சி.)

## கூற்றினை உதைத்த பாதம்

57 கூற்றினை உதைத்த பாதமும், உடுத்த
குஞ்சரத்து உரிவையும், அணிந்த

நீற்றுஒளி பரந்து நிலவுஎழு வடிவும்,
நிலா,வெயில், அனல்உமிழ் விழியும்,

ஆற்றுஅறல் பரந்த கொன்றைவார் சடையும்,
அல்லதை யாவையும் கருதான்;

மாற்றம்ஒன்று இன்றி நின்றனன், வரைபோல்
வச்சிரா யுதன்திரு மகனும்.

**பொழிப்பு :** காலனை உதைத்த திருவடியும், அணிந்து கொண்ட யானையின் தோலும், பூசிய திருநீற்றின் ஒளி மிக்கு அதனால் நிலவு தோன்றுகின்ற உருவமும், மதி, கதிர், நெருப்புக் கக்கும் மூன்று கண்களும், கங்கைநீர் பரவிய கொன்றை மாலை சூடிய நீண்ட சடையும் அல்லாமல் வேறு எதையும் நினைந்தான் அல்லன், வச்சிரப்படையை உடைய இந்திரன் மைந்தனாகிய பார்த்தன்; மலைபோல மாற்றம் எதுவும் இன்றி நின்றான்.

**விளக்கம் :** கூற்று: எமன். குஞ்சரம்: யானை. உரிவை: தோல். சிவபெருமானுக்கு இடக்கண் மதியும், வலக்கண் கதிரும், நெற்றிக்கண் நெருப்பும் ஆதலின் நிலா, வெயில், அனல் உமிழ் விழி என்றார். அறல்: நீர். சிவபிரான் வடிவத்தை இப் பாடல் படம் பிடித்துக் காட்டுகின்றது.

*'நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன் நீயலால்*
*பிறிது மற்று இன்மை'*

என்று திருவாசகம் கூறுமாப் போல, வேறு நினைப்பு அற்றுச் சிவனைத் தவிர வேறு இன்மையை விசயன் கருதினான் என்க.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனின் ஒருமைப்பாடு.)

## மன்மதன் அநங்கனு வெந்த குன்று இது

58 'அன்று அரன் இருந்த யோகினை அகற்றி,
அறிவுஇலாது அநங்கனு வெந்த

குன்றுஇது; தடங்கண் ஆயிரம் உடையோன்
கூறிய கூற்றினைத் தேறி,

இன்று,அவன் மதலை புரிதவம் குலைத்தால்,
என்வினை் திடும்?'என அஞ்சி,

நின்றிலன், மதனன்; நிற்குமோ, நெற்றி
நெருப்பினுல் நீறுபட் டுள்ளான்?

**பொழிப்பு:** அன்று சிவபெருமான் மேற்கொண்டிருந்த யோகத்தினை நீக்கி, அறிவு இல்லாமல், உடம்பு அற்றவனுக மன்மதன் வெந்து ஒழிந்த மலை இதுவாகும்.(எனவே) விரிந்த ஆயிரம் கண் உடையோனுகிய இந்திரன் சொல்லிய பேச்சைக் கேட்டு, இன்று அவன் மகன் செய்யும் தவத்தைக்கலைத்தால் என்னவருமோ, என்று அஞ்சினவனுய் அவ்விடத்தை விட்டுச் சென்று விட்டான் காமன். நெற்றிக்கண் தீயில் (முன்னர்) நீருக ஆன அவன் (இனி) நிற்பானு? நிற்கமாட்டான் என்றவாறு.

**விளக்கம்:** தடங்கண் ஆயிரம் உடையோன், இந்திரன். அவன் மதலை, அருச்சுனன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. இந்திரன் ஏவலை நிறைவேற்ருமல் மன்மதன் ஓட்டம்.)

## மங்கை பாகத்து ஈசன்

59 'மாசுஅறு மதியம் அன்ன
வாள்முக மங்கை பாகத்து

ஈசன்வந்து எய்து காறும்,
இத்தவம் புரிவேன்' என்ன

'ஆசுஅறு கடவு ளோர்க்கும்,
அருமறை தனக்கும், எட்டாத்

தேசவன் வருமோ?' என்று
சிரித்தனன் தேவர் கோமான்,

பொழிப்பு: "குற்றமற்ற திங்களைப் போன்ற ஒளியுள்ள முகத்தை உடைய உமையவளைப் பங்கிற்கொண்ட சிவபெருமான் எதிர்வரும்வரை இந்தத் தவத்தை நான் செய்வேன்," என்று அருச்சுனன் இயம்ப, "குறையற்ற தேவர்களுக்கும், அருமையான வேதங்களுக்கும் எட்டாதவனாகிய ஒளியுள்ள சிவபெருமான் (உன்முன்) வருவானோ," என்று சொல்லித் தேவர்கள் தலைவன் இந்திரன் சிரித்தான்.

விளக்கம்: இதற்குப் பார்த்தன் கூறும் மறுமொழி மிக்க சிறப்புடையது. அப்பாடலில் சிவன் தொடர்பு இல்லை யாதலின் இந்நூலின் கணக்கில் சேர்க்கவில்லை.

*'உயிர் இறும் அளவும்இந்தக் கருத்துநான் வீடேன் என்றான்*
*கடுங்கனல் ஊடு நின்றான்'*

என்பது அப்பாடற்பகுதி. பெரியபுராணத்தில் அப்பர் கைலைக்குச் சென்றபோது சேக்கிழார் கூறும் கருத்து இதனோடு ஒத்தது.

*'கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு*
*பயிலும் மானிடப் பான்மையோர் அடைவதற்கு எளிதோ?'*

என்பது வினா.

*'ஆளும் நாயகன் கயிலையின் இருக்கைகண்டு அல்லால்*
*மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன்'*

என்பது அப்பரடிகள் விடை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. இந்திரன் ஏளனச் சிரிப்பு.)

## வெள்ளிக் குன்றுடைப் புனிதன்

60 என்றுஉரைத்து அமரர் கோமான்
ஏகிய பின்னர், வெள்ளிக்
குன்றுடைப் புனிதன் பாதம்
குறிப்புறு மனத்தன் ஆகி,
நின்றுநல் தவம்செய் கின்ற
நெடுந்தகை நீர்மை எல்லாம்
சென்று,உமைக்கு உரியர் ஆன
சேடியர் செப்பி னரே.

பொழிப்பு: என்று சொல்லி, தேவர் தலைவன் சென்ற பிறகு, வெள்ளிமலைக்கு உரிய தூயவனின் திருவடியைக் கருதிய உளத்தன் ஆகி, நின்று நல்ல தவம் புரிகின்ற பெருந்தகையாகிய பார்த்தனின் தன்மைகளை எல்லாம், உமையவட்கு உரியவரான தாதியர் சென்று அவளுக்குச் சாற்றினர்.

விளக்கம்: புனிதன்: சிவன். நெடுந்தகை: விசயன். நீர்மை: தன்மை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. உமைக்கு அருச்சுனன் தவத்தை அறிவித்தல்.)

## ஆனை அன்று உரித்த நக்கன்

61 மேனை முன் பெற்ற கிள்ளை,
வேலையும் சேலி னோடு
மானையும் பொருத செங்கண்
மரகத வல்லி, கேட்டு,
தானையும், கரிய பேர்உத்-
-தரியமும் ஆகச் சாத்த
ஆனைஅன்று உரித்த நக்கற்கு
அடிபணிந்து அருளிச் செய்தாள்.

பொழிப்பு: மேனை என்பவள் முன்னே ஈன்ற கிளியை ஒத்தவளான, வேற்படையையும், மீனையும், மானையும் போர் செய்து வென்ற செவ்விய கண்ணை உடைய பச்சைக் கொடி கேட்டு, ஆடையாகவும் கருமையான பெரிய மேலாடையாகவும் அணிந்து கொள்ள அந்த நாளில் ஆனையை உரித்த சிவபிரானுக்கு அடிபணிந்து சொல்லி அருளினள்.

விளக்கம்: மேனை: அம்பிகையின் தாய். கிள்ளை: கிளி. சேல்: மீன். மான்: ஈண்டு மானின் கண். தானை: ஆடை. நக்கன்: சிவன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அம்பிகை அரனுக்கு அருச்சுனன் தவம் பற்றி அருளுதல்.)

## நீலம்உண்டு இருண்ட கண்டன்

62 ஆலம்உண்டு அமுதம் பொழிதரு நெடுங்கண்
அம்பிகை அருள்மொழி கேட்டு,

நீலம்உண்டு இருண்ட கண்டனும் இரங்கி,
'நிரைவளைச் செங்கையாய்!' நெடிது

காலம்உண்டு; அருள்கூர் அறத்தின்மைந் தனுக்கும்
காற்றின்மைந் தனுக்கும்நேர் இளையான்;

ஞாலம்உண் டவனுக்கு உயிர்எனச் சிறந்தோன்;
"நரன்"எனும் நாமமும் படைத்தோன்.

பொழிப்பு: நஞ்சைக் குடித்து அமுதத்தைப் பொழி கின்ற நீண்ட கண்ணை உடைய தேவியின் கருணைப் பேச்சைக் கேட்டு, நஞ்சு குடித்துக் கறுத்த கழுத்தை உடையவனாகிய சிவபிரான், இரக்கம் காட்டியவனாய், வரிசையாக வளையல்களை அணிந்த செம்மையான கையை உடையவளே! நெடுநாட்க ளாக இவன் தவம் செய்கின்றான்; இவன், கருணைமிக்க எம தருமனின் மைந்தனாகிய தருமனுக்கும், காற்றின் மகனாகிய வீமனுக்கும் நேரே இளையவன்; உலகத்தை உண்டவனாகிய கண்ணனுக்கு உயிர்போன்ற சிறப்பான தோழன்; நரன் என்ற பெயரை உடையவன், (என்று இயம்பினான்.)

**விளக்கம்:** ஆலம், நீலம் இரண்டும் விடம். ஞாலம்: உலகம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபிரான் உமைக்குப் பார்த்தனைப்பற்றிப் பகர்தல்.)

## பாகமாய் விளங்கும் பைந்தொடி

63 போகமாய் விரிந்தும், போகியாய்ப் பரந்தும்,
புலன்களின் வழிமனம் செலுத்தா

யோகியாய் இருந்தும், யோகிகள் முதலா
உரைப்பஅரும் பலபொரு ளாயும்,

ஏகமாய் நின்றாா், தத்துவ மறைக்கும்
எட்டுதற்கு அரியதன் வடிவில்

பாகமாய் விளங்கும் பைந்தொடி யுடனே
பரிவுடன் சில்மொழி பகர்வான்.

**பொழிப்பு:** இன்பமாக விரிவடைந்தும், இன்பத்தை நுகர்பவனுக விளங்கியும், ஐம்புலன்களின் வழியே உள்ளத்தை ஓட விடாத யோகியாக இருந்தும், யோகிகள் முதலான் சொல்லுதற்கு அரிதான பலபொருளாக அமைந்தும், ஒருவனுக நின்றும் (ஆடல்புரியும் இறைவன்) உண்மையான வேதங்களுக்கும் எட்டமுடியாத அருமையுள்ள தன் உடம்பிலே பகுதியாக விளங்கும் அம்பிகையுடனே அன்போடு சில சொற்களைச் சொல்லுவான்.

**விளக்கம்:** போகம்: இன்பம். போகி: இன்பம் துய்ப்போன். ஏகம்: ஒன்று. தத்துவம்: உண்மை. பாகம்: பகுதி. பைந்தொடி: உமை. பரிவு: அன்பு.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபிரான் தன்மையும், அவன் உமையோடு பேசுவதும்.)

## கற்றவர் கருத்திஞல் காண்போன்

64 'மற்றுஅவன் விரைவின் உடன்அமர் மலைந்து,
வாசவன் மதலையை வதைத்து,

நல்தவம் அகற்றும் முன்னமே, விரைந்து,
நாம்உயிர் கவருதல் வேண்டும்;

கொற்றவன் மதலை கேட்டன வரங்கள்
கொடுத்தலும் வேண்டும்'என்று எழுந்தான்;

கல்தவர் வலைத்துத் திரிபுரம் எரித்தோன்,
கற்றவர் கருத்திஞல் காண்போன்.

**பொழிப்பு:** மற்ற அவன் விரைந்து போர் செய்து, இந்திரன் மைந்தனை அழித்து, அவனது நல்ல தவத்தைக் கெடுப்பதற்கு முன்னரே, விரைந்து சென்று, நாம் (மாற்றுனின்) உயிரைப் போக்குதல் வேண்டும்; மன்னவன்

மைந்தனுகிய பார்த்தன் கேட்கின்ற வரங்களைக் கொடுக்கவும் வேண்டும் என்று புறப்பட்டான், கல்லை வில்லாக வளைத்து முப்புரத்தை அழித்தவனும், கற்றவர்கள் உள்ளத்தினுல் காணக் கூடியவனும் ஆன சிவபெருமான்.

**விளக்கம்:** மற்றவன்: அருச்சுனன் தவத்தை அழிக்க வந்த மூகன் என்ற தானவன். கொற்றவன்: பாண்டு. கல்: மேருமலை. தவர்: வில். கற்றவர் கருத்தினுல் காண்போன் என்பதை,

*'கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை,*
*கரையிலாக் கருணைமா கடலை,*
*மற்றவர் அறியா மாணிக்க மலையை,*
*மதிப்பவர் மனமணி விளக்கை'*

என்று பெருமிதத்தோடு பேசுவார் திருவிசைப்பா ஆசிரியர்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனுக்கு அருள் புரிய ஈசன் எழுதல்.)

## கிராதர்குல மகிழ்நனும் வனிதையும் ஆனர்

65 'நனைமலர் சிதறித் தொழுது,முன் நின்ற
நந்திமேல் நயனம்வைத்து அருளி,
'வினைபடு கேழல் வேட்டைநாம் இன்றே
வேடராய் ஆடுதல் வேண்டும்';
'நினைவுஉற எமது கணத்தொடு,இக் கணத்தே
நீயும்அவ் உருக்கொளுக' என்று
மனைவியும் தானும் கிராதர்தம் குலத்து
மகிழ்நனும் வனிதையும் ஆனர்.

**பொழிப்பு:** தேன் பொருந்திய மலர் இட்டு வணங்கி முன்னே நின்ற நந்தி தேவர்மீது கண்செலுத்தி அருளி, காரியம் கருதி வந்த பன்றி வேட்டையை நாம் இன்று வேடராகச் சென்று ஆடவேண்டும். 'நினைப்போடுகூட எமது கூட்டத்தோடு இப்பொழுதே அவ்வேடவடிவத்தை எடுத்துக் கொள்க' என்று இயம்பி, தேவியும் தானும் வேடர் குலத்துக் கணவனும் மனைவியுமாக உருக் கொண்டார்கள்.

**விளக்கம்:** நனை: தேன். நயனம்: கண். வினை: செயல். கேழல்: பன்றி. கணம்: கூட்டம். இக்கணத்தே: இப்பொழுதே. கிராதர்: வேடர். மகிழ்நன்: கணவன். வனிதை, ஈண்டு மனைவி.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. இறைவனும் இறைவியும் வேடர் வடிவு எடுத்தல்.)

## கொன்றை கமழ் முடியோன்

66 என்றபொழு தினில்நந்தி முந்திமுதல்
கூற்றுஉதைத்த இருதாள் போற்றி,
வென்றிவினை கணநாதர்க்கு உரைசெய்தான்;
அவர்களும்அவ் வேடம் கொண்டார்;
கொன்றைகமழ் முடியோனும் வேணியினைப்
பின்னல்படு குஞ்சி ஆக்கி,
துன்றும்மயில் பீலிநெடும் கண்ணிதிரு
நெற்றிஉறச் சுற்றி னானே.

**பொழிப்பு:** என்று சொன்னவுடன் நந்தி தேவன் விரைந்து முன்னே காலனை உதைத்த இரண்டு திருவடிகளையும் வணங்கி, வெற்றி சூடும் கூட்டத் தலைவர்களுக்குச் சொன்னான்; அவர்களும் அந்த வேடத்தை எடுத்துக் கொண்டார்கள்; கொன்றை மணக்கும் சடை முடியை உடைய சிவபிரானும் தன் சடையைப் பின்னலோடு கூடிய குடுமியாக முடித்துப் பொருந்திய மயில் தோகையாலான நீண்ட கண்ணியை அழகிய நெற்றியில் சேர அணிந்தான்.

**விளக்கம்:** முந்தி: விரைந்து. கணநாதர்: சிவகணத் தலைவர். அவ்வேடம்: வேடவடிவம். குஞ்சி: ஆண் மயிர்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. கணநாதர்களும் சிவபிரானும் வேடவடிவு எடுத்தல்)

## செய்ய திருவடிவு மிகக் கரியன் ஆனான்

67 நீலமணித் திருக்கண்டம் நிலவுஎழவே
பலகறைப்பூண் நிறையக் கட்டி,

கோலமணிக் குழைகளினும் குழையாகப்
பிணையல்மலர் கொண்டு சாத்தி,

சேலைஎனப் புலிஅதளும் திருமருங்கில்
உறச்சேர்த்தி, செய்ய பைம்பொன்

கால்இணையில் செருப்புஅணிந்து, செய்யதிரு
வடிவுமிகக் கரியன் ஆனான்.

**பொழிப்பு:** நீலநிறம் பொருந்திய அழகிய கழுத்தில் நிலவு தோன்ற ஒளி வடிவுள்ள அணிகளை நிறையக் கட்டி, அழகிய காது அணிகளாகப் பின்னப்பட்ட பூக்களைச் சேர்த்தி, ஆடையாகப் புலித்தோலை அழகிய இடுப்பில் பொருந்துமாறு அணிந்து, சிவந்த பசிய பொன்னார் திருவடி இரண்டிலும் நடையன் அணிந்து, தன்னுடைய சிவந்த திருமேனி பெரிதும் கருமை நிறம் உடையவனாகத் தோற்றம் அளித்தான்.

**விளக்கம்:** பலகறை: ஒளி. பூண், ஈண்டு. வெள்ளை நிறமுள்ள சங்குகள். கோலம், மணி, இரண்டும் அழகு என்னும் ஒரு பொருளன. குழை, முன்னது காது; பின்னது காது அணி. பிணையல் மலர்: பின்னிய பூங்கொத்து. அதள்: தோல். இணை: இரண்டு. வேடர்க்குரிய நிறம் கருமை ஆதலின் செம்மேனி எம்மான் கரிய நிறம் பெற்றதை, 'செய்யதிரு வடிவுமிகக் கரியன் ஆனான்' என்று அழகுபடக் கூறினார்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபிரானின் வேட்டுவக் கோலம்.)

## கடக்களிறு அன்று உரித்த பிரான்

68 இடக்கைம்மலர் வரிசிலையும், வலக்கைம்மலர்ப்
பாணமும்,வெந் நிடையே பாணம்

அடக்கியவெங் கொடுவரித்தோல் ஆவநா-
-ழிகையும்,மிக அழகு கூர,

கடக்களிறுஅன்று உரித்தபிரான், கண்டவர்கள்
வெருவரமுன் கொண்ட கோலம்

தொடக்கி,உரை செயநினைக்கில், ஆயிரம்நா
உடையோர்க்கும் சொல்லல் ஆமோ?

**பொழிப்பு:** இடது கையாகிய மலரிலே கட்டமைந்த வில்லும், வலக்கையாகிய மலரிலே அம்புகளும், முதுகிலே கணைகள் பொதிந்த கொடிய புலித்தோலால் ஆய அம்பருத் தூணியும் பேரழகைக் காட்ட, மதயானையை அன்று உரித்த தலைவன், கண்டவர்கள் அஞ்ச முன் கொண்ட வடிவத்தை எடுத்து உரை செய்ய எண்ணினால், ஆயிரம் நாப்படைத்தவர்களாலும் ஆகுமா?

**விளக்கம்:** வெந்: முதுகு. கொடுவரித் தோல்: புலித் தோல். ஆவநாழிகை: அம்பருத் தூணி. வெருவர: அஞ்ச.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபிரானின் வேட்டுவ வேடப் பொலிவு.)

## செந்தனிச் சடைப் பொலிவு

69 குறைந்த சந்திர கிரணமும், பீலியும்,
கொன்றை அம்திருத் தாரும்,

புறந்த யங்கிட விழுந்தசெந் தனிச்சடைப்
பொலிவை யார்புகல் கிற்பார்?

சிறந்த பைம்பொலம் கிரிமுடி அடிஉறத்
தேவர் கோன்திருச் செங்கை

நிறந்த ரும்சிலை வளைவுஅற அழகுஉற
நிமிர்ந்து நின்றது போலும்!

**பொழிப்பு:** இளந்திங்களின் ஒளியும், மயிற்பீலியும், அழகிய கொன்றை மாலையும், புறத்தே தோன்ற, தொங்கும் சிவந்த ஒப்பற்ற சடையின் மலர்ச்சியை யாரால் சொல்ல முடியும்? சிறப்புப்பெற்ற பசிய பொன்மலை முடியினின்றும் அடிவரை, இந்திரனது அழகிய கையிலுள்ள பலநிறம் கொண்ட வானவில் வளைவு அற்று எழில்பெற நிமிர்ந்து நின்றது போன்றது. (விழுந்த சடைப் பொலிவு.)

**விளக்கம் :** புறம்: பின் பக்கம். பொலம் கிரி: தங்கமலை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபிரான் சடைப் பொலிவு.)

## ஓர் ஏனம் தேட ஒளித்த ஒருவன்

70 ஓர்ஏனம் தனைத்தேட, ஒளித்தருளும்
இருபாதத்து ஒருவன், அந்தப்
போர்ஏனம் தனைத்தேடி, கணங்களுடன்
புறப்பட்டான்; புனங்கள் எல்லாம்
சீர்ஏனல் விளைகிரிக்குத் தேவதைஆம்
குழவியையும் செங்கை ஏந்தி,
பார்,ஏனை உலகுஅனைத்தும் பரிவுடனே
ஈன்றருள்தன் பதிபின் வந்தாள்.

**பொழிப்பு :** ஒரு பன்றி தன்னைத் தேட, அது காணாத படி ஒளித்து அருளிய இரண்டு திருவடிகளை உடைய ஒப்பற்றவன், அந்தப் போர் செய்யும் பன்றியைத் தேடிக் கூட்டங்களுடன் புறப்பட்டான்; காடுகள் தோறும் சிறந்த தினைவிளைகின்ற குறிஞ்சிக்குக் கடவுளாகிய குழந்தையையும் செம்மையான கையிலே தூக்கிக்கொண்டு, இந்த உலகத்தையும் பிற உலகங்களையும் அன்புடன் ஈன்ற பெருமாட்டி, தன் தலைவனின் பின்னே தோன்றினாள்.

**விளக்கம் :** ஒரு பன்றி: திருமால். இரு பாதத்து ஒருவன்: சிவன். தேவதையாம் குழவி: முருகன். ஈன்றருள்: உமை. பதி: இறைவன். ஏனல்: தினை. கிரி: மலையும் மலை சார்ந்ததுமான குறிஞ்சி நிலம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. ஈசன் புறப்பாடும், அவன் பின் முருகனொடு அம்பிகையின் வரவும்.)

## இறைவன் அடிச்சுவடு நோக்கினன்

71 அனந்தவே தமும்இறைவன் ஏவலினால்,
ஞாளிகளாய் அருகு சூழ,
அனந்தகோ டியின்கோடி கணநாதர்
வேட்டுவராய் அருகு போத,
அனந்தனால் இனித்தரிக்க அரிதுஅரிது,இப்
பூதலம்!என்று அமரர் கூற,
அனந்தமா முகம்ஆகி, அடிச்சுவடு
நோக்கினன், அடவி எல்லாம்.

**பொழிப்பு:** அளவில்லாத மறைகளும் சிவபிரான் பணியினால் நாய்களாகப் பக்கத்தே சூழ்ந்து வர, எண்ணற்ற கோடி கோடிக் கணத்தலைவர்களும் வேடர்களாய் அணித்தே வர, ஆதிசேடனால் இனி இப்பூமியைத் தாங்குதல் அரிது அரிது என்று தேவர்கள் சொல்ல, அநேகம் சிறந்த முகத்தைக் கொண்டு, (பன்றியின்) அடிச்சுவட்டைத் தேடினன் காடு முழுதும்.

**விளக்கம் :** அனந்தம், மூன்று இடத்தும் அனேகம். ஞாளி: நாய். அனந்தன்: ஆதிசேடன். பூதலம்: உலகம். அடவி: காடு.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. வேடனாகிய சிவன் பன்றியைத் தேடுதல்.)

## வெண்ணீற்று ஆகன்

72 மூகதா னவன்அவன்மேல் முந்திஉயிர்
கவரும்எனும் சிந்தை யான்,அப்-
பாகசா தனிதவம்செய் பாக்கியபூ-
மியைநோக்கிப் பரிவி னோடும்

ஏகசா பமும்வணக்கி ஏகினுன்:
ஏருதலும் இலங்கு வெண்நீற்று

ஆகனுல் நோக்கப்பட்டு அணுகியதால்
அருந்தவன்மேல் அந்த ஏனம்.

**பொழிப்பு:** மூகன் என்னும் அசுரன் அந்த அருச்சுனன் மீது விரைந்து உயிரைக் கவர்வான் என்று எண்ணியவனுய், அந்த இந்திரன் மைந்தன் தவம் புரிகின்ற புண்ணிய பூமியை நோக்கி, அன்போடு ஒப்பற்ற வில்லை வளைத்துச் சென்றுன் (சிவவேடன்.) அவன் சென்றதைக் கண்டு விளங்குகின்ற திருநீற்றை அணிந்த உடம்பினனுன சிவன் பார்வை பட்டதால், அருந்தவனுகிய அருச்சுனன்மீது அந்தப் பன்றி நெருங்கியது.

**விளக்கம்:** பாக சாதனி: இந்திரன் மைந்தன் பார்த்தன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன்மீது பன்றியின் பாய்ச்சல்.)

## பன்றியைப் பார்த்தனும் சிவனும் எய்தனர்

73 அதிர்ந்துவரு கேழலைக்கண்டு, 'அருந்தவத்தை
அழிக்கும்'என அஞ்சி, நாளும்

உதிர்ந்தசருகு உணவுஒழிய உணவுஇலான்,
விரைவினில்தன் ஒருவில் வாங்கி,

முதிர்ந்தசினத் துடன்எய்தான், முகம்புதைய;
அங்கணுக்கு முன்னே, அண்டம்

பிதிர்ந்திட,வில் நாண்எறிந்து, வேடன்அதன்
அபராங்கம் பிளக்க எய்தான்.

**பொழிப்பு:** ஆரவாரத்தோடு வருகின்ற பன்றியைப் பார்த்து, அருமையான தவத்தை அழித்துவிடுமெனப் பயந்து, நாள்தோறும் உதிர்ந்த சருகை உணவாக அருந்துவதைத் தவிர, வேறு உண்டி கொள்ளாத விசயன் விரைந்து தன் ஒப்பற்ற வில்லை வளைத்துப் பெருங் கோபத்தோடு முகத்தில்

தைக்குமாறு அம்பு தொடுத்தான்; அந்த அம்புக்கு முன்னே, அண்டம் நடுங்குமாறு தன் வில்லை நாண் தெறித்து, வேடன் அப் பன்றியின் பின்புறம் பிளக்குமாறு அம்பைச் செலுத்தினான்.

**விளக்கம்:** கேழல்: பன்றி. அபராங்கம்: பிற்பகுதி.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பன்றியின்மீது அருச்சுனனும் சிவனும் அம்பு எய்தல்.)

## வேடன் சேனை பூசல் இட்டார்

74 இருவரும்த வியவாளி உடனேபட்டு,
உடல்உருவி, ஏனம் வீழ,
வெருவருமாறு, அடவிஎலாம் தடவிவரு
வெஞ்சிலைக்கை வேடன் சேனை,
'ஒருவன்முதல் எய்திருக்க அவ்இலக்கை
நீஎய்தது உரனே?' என்று
பொருஅருமா தவம்புரியும் புருகூதன்
மதலையுடன் பூசல் இட்டார்.

**பொழிப்பு:** இருவரும் தொடுத்த அம்புகள்பட்டு உடல் பிளந்து பன்றி கீழே விழ, அஞ்சுமாறு காடு முழுதும் தேடி வருகின்ற கொடிய வில்லைக் கையில் தாங்கிய வேடனுடைய படைகள், 'ஒருவன் முன்னே பாணம் தொடுத்திருக்க, அந்த இலக்கின்மீது நீ அம்புவிட்டது வலிமை ஆகுமா?' என்று சொல்லி, ஒப்பற்ற அரிய சிறந்த தவம் செய்கின்ற இந்திரன் மைந்தனாகிய பார்த்தனுடன் சண்டை தொடங்கினர்.

**விளக்கம்:** இருவர்: பார்த்தன், சிவன் ஆகிய இருவர். வாளி: அம்பு. உரன்: வலிமை. புருகூதன்: இந்திரன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனோடு வேடர் சேனையின் பூசல்.)

## கிராத வடிவுகொண்ட கிரீசன்

75 புராத னாகம வேத, கீத,
புராண ரூபம் ஒழித்துவெங்
கிராத னாகிய வடிவு கொண்ட
கிரீச னோடுஉரை செய்குவான்;
விராதன் ஆதி நிசாச ரேசரை
வென்று, முச்சிக ரத்தின்மேல்
இராத வாறுஅடல் அமர்பு ரிந்த
இராம னேநிகர் ஏவினன்.

**பொழிப்பு:** பழமையான ஆகம வேத கீத புராண வடிவத்தை நீக்கிக் கொடியவேட வேடங்கொண்ட சிவ பிரானோடு பேசுவான்; விராதன் முதலான அரக்கர்களை வென்று அவர்கள் திரிகோண மலையின்மீது தங்காதவாறு பெரிய போர் செய்த இராமபிரானை ஒப்ப அம்புவிடும் ஆற்றல் வாய்ந்த அருச்சுனன்.

**விளக்கம்:** கிரீசன்: மலையில் வாழும் ஈசனாகிய சிவன். நிசாசரர்: இரவில் உலவும் அரக்கர். முச்சிகரம்: திரிகோண மலை. இது இலங்கையில் உள்ள தேவாரத் தலம். ஏவு: அம்பு.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் சிவ னோடு வாதிடல்.)

## எயினர்க்கெல்லாம் இறைவன்

76 என்றமொழி செவிப்படலும் எயினர்க்கு எல்லாம்
இறைவன்ஆ கியஎயினன் இவனை நோக்கி,
'பன்றிபெரு மோகரத்தோடு இன்றுஉன் ஆவி
பருகியிடும் எனமிகவும் பயப்பட் டாயோ?
நின்றுபெருந் தவமுயல்வோர் தாங்கள் கொண்ட
நினைவுஒழியப் புறத்துஒன்று நினைவ ரோசொல்?
பொன்றிடினும், நீஅறியப் பசுத்தோல் போர்த்துப்
புலிப்பாய்ச்சல் பாய்வரோ? புரிவி லாதாய்!

**பொழிப்பு:** என்று சொன்ன சொல் காதில் விழலும், வேடர்கட்கெல்லாம் தலைவனாகிய வேடன் பார்த்தனைப் பார்த்து, "பன்றியானது பெரிய ஆரவாரத்தோடு இன்று உன் உயிரைக் குடித்துவிடும் என நீ மிக அஞ்சிவிட்டாய் போலும்? நின்று பெரிய தவத்தில் ஈடுபட்டிருப்போர் தாங்கள் கைக்கொண்ட அந்த எண்ணம்தவிர அதற்குப் புறம் பான வேறொன்றை எண்ணுவார்களா? சொல்வாயாக. இறந்தாலும் உனக்குத் தெரிய பசுத்தோலைப் போர்த்துக் கொண்டு புலிப்பாய்ச்சல் பாய்பவர் உண்டா?" (தவத்துக்கு ஏற்ற) செயல் இல்லாதவனே!

**விளக்கம்:** எயினர்: வேடர். இறைவன்: வேடர் தலைவனாகிய சிவன். மோகரம்: ஆரவாரம். பொன்றுதல்: அழிதல். புரிவு: செயல்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவன் பார்த்தனோடு பேசும் போர்ப் பேச்சு.)

## வேடன் எய்தான்

77 விட்டகொடுங் கணையைஒரு கணையால் வேடன்
விலக்கி,வரி சிலைக்குஉரிய விசயன் தன்மேல்

தொட்டனன்,ஓர் இரண்டுகணை; அவைபோய் மார்பும்,
தோளும்,உடன் துளைத்தனவால்; துளைத்த போது

கட்டுஅழலின் இடைநின்ற காளை, மீளக்
கடுங்கணைகள் ஒருமூன்று கடிதின் வாங்கி,

வட்டநெடும் பீலிஅணி முடியும், மார்பும்,
வாகுவுமே, இலக்காக வலிய எய்தான்.

**பொழிப்பு:** (பார்த்தன்) எய்த கொடிய அம்பை ஒரு அம்பினால் சிவன் விலக்கிவிட்டுக் கட்டமைந்த வில்லுக்கு உரிய விசயன்மீது ஒப்பற்ற இரண்டு அம்புகளை ஏவினான். அந்த அம்புகள் சென்று மார்பையும் தோள்களையும் துவாரம் உண்டாக்கிவிட்டன. அவை அப்படித் துளைத்தபோது நிறைந்த நெருப்பின்மீது நின்ற காளையாகிய பார்த்தன், திரும்பவும் கடுமையான அம்புகள் மூன்றை விரைந்து

எடுத்து வட்டமான நீண்ட மயிற்பீலி அணிந்த வேடனின் முடியையும் மார்பையும் தோள்களையும் குறிவைத்து வன்மையாகத் தொடுத்தான்.

**விளக்கம்:** வாகு: தோள் இலக்காக: குறியாக.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. வில்விசயனுக்கும் புரவிசயனுக்கும் போர்.)

## எயினன்முடி குலைய எய்தான்

78 எய்தகணை திருமேனி எய்தும் முன்னர்
இறகுதுணிந்து, ஒன்றுஇரண்டாய், இலக்குஉ றாமல்

வெய்தின்வலி யுடன்எய்தான் மூன்று வாளி;
விண்ணவர்கோன் மகன்மேலும் வேறுஒன்று எய்தான்;

'ஐதின்இவன் விநோதம்உறத் தொடுத்தான் என்பது
அறியாமல் எயினன்முடி அணிந்த பீலி

கொய்துநதி அறல்சிதற' பிறையும், மானும்
குலையஒரு கணைகுரக்குக் கொடியோன் எய்தான்.

**பொழிப்பு:** (பார்த்தன்) விட்ட அம்பு வேடன் மேனியிலே பொருந்துதற்குமுன் அந்த அம்பின் இறகு ஒடிந்து ஒன்று இரண்டாமாறு அவ்வம்புகள் குறியை அடையாமற்படி விரைந்து வலிமையுடன் மூன்று அம்புகள் தொடுத்தான் (வேடன்.) தேவேந்திரன் மகனாகிய பார்த்தன் மேலும் வேறொரு அம்பை விடுத்தான். அழகாக இந்த வேடன் வேடிக்கைக்காக அம்பு விடுத்தான் என்பதை உணராமல், வேடனாகிய சிவன் முடியில் அணிந்திருந்த மயிற்பீலியைக் கொய்து, கங்கையின் நீர் சிதறி ஓடத் திங்களும், மானும் நிலைகுலைய, ஒப்பற்ற அம்பை அனுமக் கொடியோனாகிய அருச்சுனன் விட்டான்.

**விளக்கம்:** இறகு: அம்பின் ஓரப்பகுதி. வெய்து: விரைவு. ஐது: அழகு. விநோதம்: வேடிக்கை. அறல்: புனல். குரக்குக்கொடி, அருச்சுனனுக்கு உரியது.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தன் சிவன் தலை அலங்காரத்தைக் குலைத்தல்.)

## கனகமலைச் சிலைவளைத்த கையினன்

79 அல்போலச் சூழ்கின்ற கிராதர் எல்லாம்
அவன்முடிமேல் இவன்எய்தது அறிந்து, தீயின்
நிற்போன்மேல் எழுதலும்,அங்கு அவரை எல்லாம்
'நில்லும்'எனக் கைஅமைத்து, 'நீஇன்று எய்த,
விற்போர்கண் டனம்;அடடா! வில்பி டிக்கும்
விரகுஅறியோம்; உன்னிடத்தே வேத விற்போர்
கற்போம்'என்று ஒருகணைமற்று அவன்மேல் விட்டான்
கனகமலைச் சிலைவளைத்த கையி னனே.

**பொழிப்பு:** இருளைப்போலச் சூழ்ந்துநின்ற வேடர்களெல்லாம் சிவனாகிய வேடன் முடியின்மீது பார்த்தன் அம்பு எய்ததைக் கண்டு, நெருப்பில் நிற்போனாகிய அவன் மீது போருக்கு எழுதலும், அவ்விடத்து அவரனைவரையும் 'நீங்கள் நில்லுங்கள்' என்று கூறிக் கையால் நிறுத்திப் (பார்த்தனைப் பார்த்து), 'நீ இன்று செய்த விற்போரைப் பார்த்தோம். அடடா! விற்பிடிக்கும் உபாயத்தை நாம் அறியோம்; உன்னிடத்தே மறைகள் கூறிய விற்போரைக் கற்றுக் கொள்வோம்' என்று கூறி, ஒரு அம்பை அந்தப் பார்த்தன்மீது செலுத்தினான், பொன்மலையை வில்லாக வளைத்த கையை உடைய சிவன்.

**விளக்கம் :** அல்: இருட்டு. கிராதர்: வேடர். அவன்: சிவன். இவன்: பார்த்தன். விரகு: உபாயம். கனகம்: தங்கம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனோடு வேடன் பேசும் ஏளனப்பேச்சு.)

## மூலிவடிவாம் எயினன்

80 பீலிமுடி யோன்விடு பிறைக்கணையை வேறுஒரு
பிறைக்கணையி னால்வி லகி,வில்
கோலி,வடி வாளிமழை சிந்தினன்,ம ழைக்கரிய
கொண்டல்என நின்ற குமரன்;

மூலிவடி வாம்எயினன் மேல்அவைப டாமல்முனை
மண்மிசைகு ளிக்க, முரண்ஆர்

வேலிஇடு மாறுஎன விழுந்தன; விழுந்ததனை
விசயன்கனி கண்டு வெகுளா.

**பொழிப்பு:** *பீலி அணிந்த சடையை உடைய வேடன் விட்ட கவட்டை அம்பை மற்றொரு கவட்டை அம்பினால் விலகுமாறு செய்து வில்லிற் பொருத்திக் கூர்மையான அம்புகளை மழைபோலப் பொழிந்தான் மழைபொழியும் கரிய மேகம்போல் நின்றவனாகிய இளைஞன். ஆதிவடிவினனாகிய வேடன்மேல் அவ்வம்புகள் தைக்காமல், அவற்றின் முனைகள் மண்ணில் மூழ்க, வலிமை பொருந்திய வேலி இட்டது போல அவை வீழ்ந்தன. அப்படி வீழ்ந்த கணைகளை அருச்சுனன் கண்டு பெரிதும் கோபித்து,*

**விளக்கம்:** அருச்சுனன் கருநிறம் உடையானாதலின் 'மலைக்கரிய கொண்டல் என நின்ற குமரன்' என்றார். அருச்சுனன் அம்புகள் மூலியாகிய சிவன்மீது பாயாமல் அவனுக்கு வேலி இட்டதுபோல் சுற்றிலும் வீழ்ந்தன என்க.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தன் வேடனுக்குக் கணைகளால் வேலி இட்டான்.)

## கோணிய இளம்பிறை முடித்தவன்

81 வேணிமுடி வேடன்மிசை வேறும்ஒரு சாயகம்
விடுத்தனன்; விடுத்த கணை,வில்

நாணிஅற, முன்பினொடு பின்புதொடு கின்றகணை,
நடுவண்அற வெட்டு தனுமே;

கோணிய இளம்பிறை முடித்தவன் வெகுண்டு,பல
கோல்கள்விட, இந்த்ர குமரன்

பாணியுட னேதொடை நடுங்கி,அயல் நின்றதுஒரு
பாதவம ருங்குஅ ணுகினன்.

**பொழிப்பு :** சடைமுடி உடைய வேடன்மீது மற்றொரு அம்பை விடுத்தான் (பார்த்தன்.) தொடுத்த அக்கணை வேடன் வில்லின் நாணியை அறுக்க, அதற்குப் பின்னே தொட்ட ஓர் அம்பு வில்லை நடுவே முறியுமாறு வெட்டிய வுடன், கோணலாகிய இளந்திங்களை முடித்த சிவன் சினங் கொண்டு பல அம்புகளைச் செலுத்த, தேவேந்திரன் மைந் தன் அம்புவிடும் கை நடுக்கம் கொண்டு அணித்தே நின்ற ஒரு மரத்தடியைச் சேர்ந்தான்.

**விளக்கம் :** சாயகம்: அம்பு. நாணி: வில்லிற் பூட்டும் கயிறு. கோல்: அம்பு. பாணி: கை. தொடை: தொடுத்தல். பாதவம்: மரம்.

(ஆரணியம்.அருச்சுனன் தவநிலை.பார்த்தன் கைசோர்ந்து மரத்தின் நீழலை அடைதல்.)

## இமவான் மகள் கருணை

82 கொண்டதவ மேதனம் எனப்புரியும் வில்லி,மெய்
குலைந்துஅயரு கின்ற நிலையைக்

கண்டு,அருத நின்றஇம வான்மகள் உரைக்க,மிகு
கருணையொடு இரங்கி, அவனை,

பண்டுதவ மேபுரி இளைப்புஅற, மனத்தின்மிந
பரிவுடையன் ஆகி, வெகுளா,

எண்திசையும் வென்றுஅனல் அளித்தசிலை நாணிஅற,
எயினர்பதி எய்த னன்அரோ!

**பொழிப்பு :** மேற்கொண்ட தவமே செல்வம் எனத் தவம் புரியும் வில்லில் வல்லவனாகிய விசயன் உடல்சோர்ந்து, அயர்ச்சி அடைந்த நிலையைப் பார்த்து, அணித்தே நின்ற இமவான் பயந்த இறைவி இறைவனுக்குச்சொல்ல, மிக்க கருணையோடு, பரிந்து, விசயன் முன்செய்த தவத்தின் இளைப்பு நீங்கப் பரிந்து உளங்கொண்டவனாகிச் சினந்து எட்டுத் திக்குகளையும் வெற்றிகொண்ட தீக்கடவுளால் விசயனுக்கு அளிக்கப்பட்ட வில்லின் நாணி அறுமாறு வேட்டுவர் தலைவன் அம்பைச் செலுத்தினான்.

**விளக்கம்:** இரக்கம் கொண்டு தவத்தின் இளைப்பைப் போக்கும் உள்ளத்தினனாகி எயினர் பதி எய்தான் என்றமையால், தவத்திற்கு அருள எண்ணினன் என்க.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் வில் நாணைச் சிவன் அறுத்தல்.)

## நதியாள் எழுந்து தடுமாறினள்

83 உழுந்துஉருளும் எல்லைதனில் வில்லின்நெடு நாண்அற,
உரத்தொடுஎதிர் ஓடி வரிவில்
கழுந்துகொடு மாமுடியின் மோதும்;முன் இழந்ததுஉயர்
கண்ணிபடு பீலி; மதியின்
கொழுந்துஅமுது சோர,விட நாகர்சூடி கைத்தலை
குலைந்துமணி சிந்த, நதியாள்
எழுந்துதடு மாறிஅகல் வானில்உற வேடனும்
இளைத்து.அவசம் உற்ற னன்அரோ.

**பொழிப்பு:** உழுந்து உருண்டு செல்லுகின்ற கணப்பொழுதுக்குள் (பார்த்தனின்) வில்லின் நீண்ட நாண் அற்றுப்போக, வலிமையோடு அவன், சிவன் எதிரில் ஓடி, கட்டிய வில்லின் தண்டைக் கொண்டு சிறந்த சிவபிரான் முடியின் மீது அடித்தான்; (அப்படி அடித்ததும்) கண்ணியாகக் கட்டப்பட்டிருந்த உயர்ந்த மயிற்பீலி முன்னே வீழ்ந்தது; சடையிலிருந்த இளந்திங்களில் அமுதுகொட்ட, நஞ்சைக் கக்கும் பாம்புகள் உச்சிக் கொண்டையை உடைய தலைகள் நிலைகுலைந்து மணிகளைக்கொட்ட, கங்கையாள் சடையை விட்டு எழுந்து தடுமாற்றம் அடைந்து பெரிய வானத்திலே ஓட, வேடனாகிய சிவன் இளைத்துத் தன்வசம் இழந்தான்.

**விளக்கம்:** உழுந்து உருளும் எல்லை, மிகச்சிறிய அளவு. உரம்: வலிமை. கழுந்து: வில் கம்பு. சூடிகை: உச்சிக் கொண்டை. அரோ: அசை. சிவன் தலையில் அடிபட்டதும் சடையிலிருந்த திங்களிலிருந்து அமுது கொட்டியது; பாம்புகளின் மணிகள் உதிர்ந்தன; கங்கையாள் தடுமாறி எழுந்து ஓடினாள் என்க.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் வில்லடியால் சிவன் சடையில் ஒரே குழப்பம்.)

## யார் அடிபடாதவர்? யா அடிபடாதன?

84 விண்ணில்உறை வானவரில் யார்அடிப டாதவர்,
விரிஞ்சன்முத லோர்?உ ததிசூழ்

மண்ணில் உறை மானவரில் யார்அடிப டாதவர்
மனுக்கள்முத லோர்கள்? அதலக்

கண்ணில்உறை நாகர்களில் யார்அடிப டாதவர்கள்,
கட்செவிம கீபன் முதலோர்?

எண்ணில்பல யோனியிலும் யாஅடி படாதன,
இருந்துழி இருந்து ழியரோ?

**பொழிப்பு:** வானுலகத்தில் தங்கி இருக்கின்ற அமரர்களில் அடிபடாதார் யார், பிரமன் உள்பட? கடல் சூழ்ந்த உலகத்தில் இருக்கின்றவர்களுக்குள்ளே அடிபடாதார் யார், மன்னர்கள் உள்பட? பாதாளமாகிய இடத்தில் தங்கி இருக்கின்ற நாகலோகவாசிகளுக்குள் அடிபடாதார் யார், பாம்பு அரசன் உள்பட? கணக்கற்ற பல பிறவிகளிலும் அடிபடாதன எவை, இருந்தது இருந்தபடியே?

**விளக்கம் :** விரிஞ்சன்: பிரமன். உததி: கடல். மானவர்: மக்கள். மனுக்கள்: நீதி செலுத்தும் வேந்தர்கள். அதலக்கண்: பாதாளமாகிய இடம். கட்செவி: பாம்பு. மகீபன்: அரசன். யா: எவை. இருந்துழி: இருந்தபடி.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலே. சிவன் முடியிற் பட்ட அடி எல்லா உலகினும் பட்டது-)

## பிறப்புஇலி, இறப்புஇலி

85 வேதம்அடி உண்டன; விரிந்தபல ஆகம
விதங்கள்அடி உண்ட ன;ஓர்ஐம்

பூதம்அடி உண்டன;வி நாழிகைமு தல்புகல்செய்
பொழுதொடு, சலிப்பில் பொருளின்

பேதம்அடி உண்டன; பிறப்புஇலி, இறப்புஇலி
பிறங்கல்அர சன்தன் மகளார்

தாதன்,அம லன்சமர வேடவடி வம்கொடு
நரன்கைஅடி உண்ட பொழுதே.

**பொழிப்பு:** மறைகள் அடிபட்டன; விரிவுபட்ட பல வான ஆகமங்களெல்லாம் அடிபட்டன; ஒப்பற்ற ஐந்து பூதமும் அடிபட்டன; நாழிகை முதலாகச் சொல்லப்படுகின்ற காலத்தொடு அசைவில்லாத பொருள்களின் வகைகள் எல்லாம் அடிபட்டன. பிறப்பு இறப்பு இல்லாதவனுன மலே யரையன் பொற்பாவை கணவனுகிய மலமற்றவனுன சிவபிரான், போர்வேடன் வடிவெடுத்துப் பார்த்தன் கையிலே அடிபட்டபோது.

**விளக்கம்:** பிறங்கல்: மலே. சமரம்: போர். நரன்: அருச்சுனன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலே. சிவன் தலேயிற் பட்ட அடி மறை முதலிய எல்லாவற்றினும் வீழ்ந்தது.)

## பேர்அறம் வளர்த்தருள் எயிற்றி

86 என்பொடு, கொழுந்தசை நிணம்குருதி என்னும்அவை
ஈர்இரண் டானும் வயிரா,

வன்பொடு வளர்ந்தமிரு காதிபதி காரிஎனும்
வடிவழகு பெற்ற மறவோன்,

அன்பினெடு பேர்அறம் வளர்த்தருள் எயிற்றிமிக
அஞ்சஅபி ராம எயினன்

பொன்புரையும் மேனியில் அடித்தமை பொருதுமற்
போர்புரியு மாறு கருதா,

**பொழிப்பு:** எலும்பு, கொழுத்த தசை, கொழுப்பு இரத்தம் என்று சொல்லத்தக்க அந்த நான்கு பொருளாலும், வகுக்கப்பெற்ற வன்மையாக வளர்ந்த யானேக்கு அதிபதி யாகிய இந்திரனேப்போன்ற உடலழகு பெற்ற வலிமை வாய்ந்த பார்த்தன், அன்போடு பெரிய அறங்களே வளர்த்து அருள் செய்கின்ற நாயகியாகிய வேடச்சி பெரிதும் அஞ்சு மாறு அழகிய வேடனின் தங்கத்தை ஒத்த உடம்பில் அடித்தது தாங்காமல் மற்போர் செய்யக் கருதி,

**விளக்கம்:** மிருகாதிபதிகாரி: வெள்ளை யானையின் அதிபதியாகிய இந்திரன். மறவோன்: அருச்சுனன். எயிற்றி: வேட்டுவப் பெண். அபிராமம்: அழகு. எயினன்: வேடன். புரைதல்: ஒத்தல். கருதா: எண்ணி. இப்பாடல் குளகம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனும் வேடனும் மற்போர் புரிய எண்ணுதல்.)

## மாதுஅவனும், மாதவனும் மல்அமர் தொடங்கினர்

87 உள்அடி விரல்தலைகள், புறஅடி, பரட்டினுடன்,
உயர்கணைக் கால்,மு முந்தாள்

தள்ள அரிய ஊரு,உயர் தாள்வரைகள் ஒத்தநடி
தடம்,உதரம், மார்பு, திணிதோள்,

துள்ளிவரு செங்கையொடு, முன்கை,பிடர் நெற்றியொடு,
சூடம்என எண்ணு படையால்

வள்அல்எனை ஆளுடைய மாதவனும், மா,தவனும்
மல்அமர்தொ டங்கி யுறவே.

**பொழிப்பு:** உள்ளங்கால், விரல் நுனிகள், புறங்கால், பரடு, உயர்ந்த கணைக்கால், முழங்கால், தள்ளமுடியாத தொடை, மேற்கால், மலைபோன்ற அரை, வயிறு, மார்பு, வலிய தோள், துள்ளிவருகின்ற செவ்விய கை, முன் கை, பிடரி, நெற்றி, தலையின் உச்சி, என்று எண்ணத்தக்க படைகளால் வள்ளலாகிய என்னை ஆட்கொண்ட மாதைப் பக்கத்திலே உடைய சிவனும், சிறந்த தவனாகிய பார்த்தனும் மற்போர் தொடங்க.

**விளக்கம்:** இப் பாடலில் உடம்பிலுள்ள உறுப்புக்களனைத்தும் உரைக்கப்பெறுகின்றன. மாது அவன்: மாதைப் பங்கிற்கொண்ட சிவன். மா தவன்: சிறந்த தவத்தை உடைய பார்த்தன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவனுக்கும் பார்த்தனுக்கும் மற்போர்.)

## இன்பமயில் கேள்வன்

88 மல்அமர் தொடங்கி,இவர் இருவரும் வெருண்டுபொர
மாதிரமும் மாநி லமும்,மேல்
எல்லையும், அதிர்ந்துசுழல் கின்றபொழு தத்து,இமைய
இன்பமயில் கேள்வன், வெகுளா,
நல்லிசை புனைந்தமணி நூபுரவி சாலஒளி
நண்ணுபத நாள்மலரினால்,
வில்லியரில் எண்ணுதிறல் வில்லுடைய காளைதனை,
விண்ணில்உற வீசி னன்அரோ.

**பொழிப்பு:** மற்போரைத் தொடங்கி வேடன் பார்த்தன் ஆகிய இருவரும் வெகுண்டு செய்ய, திக்குகளும், பூஉலகமும் மேல் உலகமும் அதிர்ச்சி அடைந்து அசைகின்ற பொழுது, இமயத்தில் பிறந்த இன்பம்தரும் மயிலனைய அம்பிகையின் கணவனாகிய சிவன், கோபித்து, நல்ல புகழ் பொருந்திய அழகிய சிலம்பணிந்த பேரொளி உடைய அன்று பூத்த பூப்போன்ற திருவடியினால், வில்லாளருக்குள் மேம்பட எண்ணத்தக்க ஆற்றல் வாய்ந்த வில்லேந்திய காளையாகிய விசயனை, வானிற் பொருந்துமாறு எற்றினான்.

**விளக்கம்:** வெகுண்டு: சினந்து. மாதிரம்: திக்கு. மாநிலம்: இவ்வுலகம். மேல் எல்லை: வான்உலகம். இசை: புகழ். நூபுரம்: சிலம்பு. விசால ஒளி: பேரொளி. நண்ணு. பொருந்திய. பதம்: திருவடி. திறல் : வலிமை. அரோ: அசை:

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. விசயனைச் சிவன் விண்ணில் எறிதல்.)

## எயினர்பதியான புண்ணியன்

89 விண்ணவர்தம் ஊர்புகுத விண்ணவர்பி ரான்மதலை
விசையுடன் எழுந்து, முகில்போல்
மண்ணினிடை வீழ்தருமுன், மார்புஅகலம் அல்லதை
வயங்குபுறம் என்று தெரியான்,

எண்அரிய ஞானஒளி ஆகி,வெளி ஆகிவரும்
எயினர்பதி ஆன கருணைப்

புண்ணியன், மகிழ்ந்துஉருக, நின்றுஒலி யுடன்பழைய
பூசல்பொர எண்ணி எதிர்வான்.

**பொழிப்பு:** அமரர்கள் ஊரை அடைந்த தேவேந்திரன் மைந்தனை பார்த்தன் விரைந்து எழுந்து மேகத்தைப் போலத் தரையில் வீழ்வதற்கு முன்னே, அகலமான மார்பு, அன்றி விளங்குகின்ற முதுகு என்று ஆராய்ந்தவனாகி, எண்ணரிய அறிவு ஒளியாகி, ஆகாச வெளியாகி வருகின்ற வேட்டுவர் தலைவனான அருள்புரியும் புண்ணியனாகிய சிவபிரான், களித்து உளமுருகி நிற்ப, நின்று ஆரவாரத்துடன் பழைய போரைத் தொடர எதிர்ப்பட்டான் பார்த்தன்.

**விளக்கம்:** மதலை: பார்த்தன். முகில்: மேகம். வயங்கு: விளங்கிய. தெரிதல்: ஆராய்தல். எயினர் பதி: வேட்டுவர் தலைவன். புண்ணியன்: சிவன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. விசயன் மீண்டும் போர்புரியத் தொடங்கல்.)

## பச்சைமயில் பாதியுடன் செழுஞ்சுடர் எழுந்தது.

90 வெய்யகண நாதர்,கண தேவர்,விபு தாதியர்,
விரிஞ்சி,சிவ யோகி யர்,அருஞ்

செய்யசுட ரோன்,அளகை ஆதிபதி, கின்னரர்கள்,
சித்தர்,பல சார ணர்,மணிப்

பைஅரவின் ஆடி,புரு கூதன்இவர் சூழ்தர,ஓர்
பச்சைமயில் பாதி யுடனே

துய்யவிடை மீதொருசெ ழுஞ்சுடர் எழுந்தது;
தொழுந்தகையது ஆகும் அளவோ?

**பொழிப்பு:** விரும்பத்தக்க சிவகணத் தலைவர்கள், அமரர் கூட்டம், விபுதர் முதலானோர், பிரமன், சிவயோகிகள், அருமையான சிவந்த சூரியன், அளகைத் தலைவனான குபேரன், கின்னரர்கள், சித்தர்கள், சாரணர் பலர், மணி

கொண்ட படத்தை உடைய பாம்பில் ஆடும் நாரணன், தேவேந்திரன், இவர்கள் சூழ்ந்துவர, ஒப்பற்ற பச்சை மயிலாகிய பார்வதிதேவியைப் பங்கில் கொண்டு, புனித மான காளையின்மீது இணையற்ற சிவந்த ஒளி ஒன்று தோன்றியது; தொழத்தக்க அளவில் அதன் சிறப்பு அடங்குமா? (அடங்காது என்றவாறு.)

**விளக்கம்.** விரிஞ்சி: பிரமன். சுடரோன்: சூரியன். அளகை ஆதிபதி: குபேரன். அரவின் ஆடி: திருமால். புருகூதன்: இந்திரன். பச்சை மயில்: அம்பிகை. செழுஞ் சுடர்: சிவபெருமான்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனுக்குச் சிவன் காட்சி கொடுத்தல்.)

## செய்ய சிவ வேடனுக்குச் சைவமுறை வழிபாடு

91 கைவிலுட னேஎயினர் கோடிபலர் சூழ்வர,
கன்னிமயில் பின்னர் வரவே,
தெய்வமறை ஞாளிகள் தொடர்ந்துவர, வந்துபொரு
செய்யசிவ வேடன் முடிமேல்,
சைவமுறை யேஇறைவர் தண்மலரி ஞேடு அறுகு
சாத்திஒளிர் நாள்ம லர்எலாம்,
மெய்வடிவு கொண்டனைய கரியதவ வேடன்,இணை
விழிமலர் பரப்பி மகிழா,

**பொழிப்பு:** கையில் வில்லைத் தூக்கிக்கொண்டு பல கோடி வேடர்கள் சூழ்ந்துவர, கன்னிமயிலாகிய உமையவள் பின்னே வர, கடவுள் தன்மை வாய்ந்த மறைகளாகிய நாய்கள் தொடர்ந்து வரத், தன்முன் தோன்றிப் போர்செய்த சிவந்த சிவவேடனின் முடியின்மீது, சைவ முறைப்படி இறைவனுக்கு உரிய கொன்றைப் பூவோடு அறுகம் புல்லும் அன்று அலர்ந்த மலரும் ஆகிய சாத்தப்பட்ட எல்லாவற்றையும் (கண்டு), உண்மையான வடிவம் கொண்டதை ஒத்த கரிய நிறம் கொண்ட தவவேடனாகிய விசயன், தன்னுடைய இரண்டு மலர்போன்ற கண்களை விரித்துக் களிப்படைந்து,

**விளக்கம்:** தன்முன் நின்று போர்செய்த வேடன் முடியின்மேல் சிவபூசகர்கள் இட்ட மலர்கள் அனைத்தையும் விசயன் இரண்டு கண்களும் மலரக்கண்டு மகிழ்ந்தான் என்க. இப்பாடல் குளகம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபூசையை விசயன் காண்டல்.)

## செம்பொன் வடமேரு அனையான்

92 தும்பைவகை மாலை,செறி வில்லமொடு, கொன்றைமலர்,
சூதம்அறு கேக மழ்தரும்
செம்பவள வேணிமிசை திங்கள்,நதி சூடுவருள்
செம்பொன்வட மேரு அனையான்,
உம்பர்மணி யாழிநெடு, தும்புருவும் நாரதனும்,
உருகிஇசை பாட, அருள்கூர்
அம்பையுட னேவிடையின் மீதுஒளிர நின்றதனை,
அஞ்சலிசெய்து அன்பொ டுதொழா.

**பொழிப்பு:** தும்பைப் பூ மாலை வகைகள், நெருங்கிய வில்வம், கொன்றைப்பூ, மாம்பூ, அறுகம்புல் இவைகள் மணக்கும் சிவந்த பவளம்போன்ற சடைமுடியின்மீது, மதியையும் கங்கையையும் சூடி அருள் செய்கின்ற சிவந்த தங்கமயமான வடமேரு மலையை ஒத்த சிவபெருமான், மேலான அழகிய வீணையோடு கூடிய தும்புருவும் நாரதனும் உருக்கமாக இசை பாட, கருணைமிக்க அம்பிகையுடனே ஏறூர்ந்து விளங்குகின்ற காட்சியைக் கண்டு, அன்போடு வணங்கி ஏத்தி,

**விளக்கம்:** இப்பாடலும் குளகம். அடுத்த செய்யுளில் முடிகின்றது. வில்லம்: வில்வம். சூதம்: மா. அறுகு: அறுகம் புல். அம்பை: அம்பிகை, நின்றதனை: நின்ற வடிவத்தை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அம்மையப்பனை நேரில் கண்டு அருச்சுனன் வணங்கினன்.)

## பவள மேனியை நாடினன்

93 ஆடினன்; களித்தனன்;
அயர்ந்து நின்றனன்;

ஓடினன்; குதித்தனன்;
உருகி மாழ்கினன்;

பாடினன்; பதைத்தனன்;
பவள மேனியை

நாடினன்; நடுங்கினன்;
நயந்த சிந்தையான்.

**பொழிப்பு:** விரும்பிய உள்ளத்தை உடையானாகிய விசயன், பவளமேனியைநாடினவனாகி நடுங்கினான்; ஆடினான்; களிப்படைந்தான்; மெய்ம்மறந்து நின்றான்; ஓடினான்; தாவினான்; நெஞ்சு உருகி இளகினான்; பாடினான்; பதைத்தான்.

**விளக்கம்:** நயந்த சிந்தையான்: அருச்சுனன். பவள மேனி: சிவபெருமான் திருமேனி. இப்பாடல் சிவனைக்கண்ட விசயனின் மெய்ப்பாட்டைப் புலப்படுத்துகின்றது.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனனின் ஆட்டபாட்டம்.)

## கொன்றை மாலை மௌலியான்

94 என்றுகொண்டு இம்முறை
இவன்இ யம்பவே.

மன்றல்அம் கொன்றைஅம்
மாலை மௌலியான்,

ஒன்றிய தவம்புரி
உம்பர் தம்பிரான்

தன்திரு மதலையைத்
தழுவி னன்அரோ,

**பொழிப்பு:** என்று இவ்வாறு இவன் சொல்ல, நன் மணம் கமழும் அழகிய கொன்றை மாலையைச் சடையில் அணிந்த சிவபிரான், பொருந்திய தவம் செய்கின்ற தேவர்கள் தலைவனின் திருமகனை அணைத்துக் கொண்டான்.

**விளக்கம்:** கொண்டு: இடைச்சொல். இவன்: பார்த்தன். மன்றல்: மணம். மௌலி: சடை. ஒன்றிய: பொருந்திய. தம்பிரான்: தலைவன். மதலை: பார்த்தன்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனைச் சிவன் தழுவுதல்.)

## அமர்ந்த சோதியன்

95 தழுவினன் பெருந்துயர்
அகற்றி, தண்ணளி
பொழிதரு கண்ணினன்;
புரக்கும் சிந்தையன்;
அழிவுஅற ஒழிவுஅற,
அமர்ந்த சோதியன்;
பழுதுஅறு மொழிசில
பகர்ந்து, தேற்றினன்.

**பொழிப்பு:** குளிர்ந்த கருணையைச் சொரியும் கண்ணை உடையவனும், அனைவரையும் காக்கும் உள்ளத்தை உடையவனும்; அழிவு இல்லாமல் இடையருமல், விளங்குகின்ற ஒளியை உடையவனும் ஆகிய சிவபெருமான், பார்த்தனைத் தழுவிக்கொண்டு, அவன் பெரும் துன்பத்தைப் போக்கிக் குற்றமற்ற சில உரை சொல்லி, அவனைத் தேறுதல் அடையச் செய்தான்.

**விளக்கம்:** 'அழிவற ஒழிவற அமர்ந்த சோதியன், என்பது 'அலகில் சோதியன்' என்ற பெரிய புராணத்தோடு ஒக்கும்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவன் அருச்சுனனைத் தழுவித் தேற்றுதல்.)

## தெய்வ வாளியைத் தந்தருள்

96 அந்தவில் விசயனும்
அவன்ப தம்பணிந்து,
'எந்தை!பா ரத அமர்க்கு
இசைந்த வீரர்மெய்
சிந்த,நின் பேர்பெறு
தெய்வ வாளியைத்
தந்தருள்' என்றனன்;
தவத்தின் மேல்நின்ருன்.

**பொழிப்பு:** தவத்தின்மேல்நின்ற அந்த வில்லுக்குரிய பார்த்தனும் சிவன் திருவடியை வணங்கி, 'அப்பனே, பாரதப் போருக்குப் பொருந்திய எதிர் வீரர்களின் உடம்பு அழிய உன்னுடைய பேர்பெற்ற கடவுட் கணையைத் தந்தருள வேண்டும்,' என்று கேட்டனன்.

**விளக்கம்:** அவன்: சிவன். தெய்வ வாளி: பாசுபதம் என்னும் படை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தன் பாசுபதம் கேட்டல்.)

## ஐயனும் அம்மையோடு அருள்புரிந்தனன்

97 ஐயனும், அம்மையோடு
அருள்பு ரிந்து,பின்,
வெய்யபொன் தூணியும்,
வில்லும், மந்த்ரமும்,
துய்யபா சுபதமெய்த்
தொடையும், முட்டியும்,
ஒய்யென நிலையுடன்
உதவி னன்அரோ.

**பொழிப்பு:** சிவபெருமானும் அம்மையோடு கருணை பாலித்துப் பிறகு, கொடிய தங்க அம்பருத்தூணியும், வில்லும், அம்புகட்குரிய மறைகளும், புனிதமான உண்மைப் பாசுபதப் படையும், அதைப்பிடிக்கும் முறையும், ஒலியுடன் அதைத் தொடுக்கும் நிலையும் கூறி அளித்தான்.

**விளக்கம்:** ஐயன்: சிவன். அம்மை: உமை. தூணி: அம்பருத் தூணி. மந்த்ரம்: மறை. முட்டி: அம்புபிடிக்கும் முறை. நிலை: அம்பு தொடுக்கும்விதம். அரோ: அசை.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தனுக்குப் பரமன் பாசுபதம் அளித்தல்.)

## கற்றையம் சடையவன் கயிலை

98 பெற்றனன் விசயனும்;
பேயும், பூதமும்,

சுற்றிய கணங்களும்,
சுருதி ஓசையும்,

வெற்றிகொள் பெற்றமும்
விழைந்து சூழவே

கற்றைஅம் சடையவன்
கயிலை ஏகினன்.

**பொழிப்பு:** அருச்சுனன் பாசுபதத்தைப் பெற்றுக் கொண்டனனாகப் பேய்களும், பூதங்களும், சுற்றிக்கொண்ட சிவகணங்களும், மறை ஒலியும், வெற்றிக்குரிய எருதும் விரும்பித் தன்னைச் சுற்றிவரக் கூட்டமாகிய அழகிய சடையை உடைய சிவபிரான் கைலை மலையை அடைந்தான்.

**விளக்கம்:** சுருதி: மறை. பெற்றம்: விடை. கற்றை: கூட்டம்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. சிவபிரான் கைலை சார்தல்.)

## புண்ணியன் வடிவு

99 விண்ணவர் முனிவர் உள்
விளங்கி வாழ்தலால்,
நண்ணிய முடிப்பெயர்
நாகம் பூணலால்,
எண்ணஅரு மகபதி
இருந்த மாநகர்,
புண்ணியன் வடிவுஎனப்
பொலிந்து தோன்றுமால்.

**பொழிப்பு:** தேவர்களும், முனிவர்களும் உள்ளே பொருந்தி வாழ்தலால், பொருந்திய உச்சிக் கொண்டையை உடைய நாகம் என்ற பெயரைப் பெற்றிருத்தலால், எண்ணுதற்கு அரிய சிறப்பு வாய்ந்த இந்திரன் இருந்த சிறந்த நகரம், சிவபெருமானின் உருவம் என்று சொல்லத்தக்கவாறு சிறந்து விளங்கும்.

**விளக்கம்:** இந்திரன் கொலுவிருக்கும் நகரம் சிவ பெருமான் வடிவம்போல் தோன்றுகின்றது. சிவன் இருக்குமிடத்தில் அமரர்களும் இருடிகளும் இருப்பர். இங்கும்அவர்கள் இருக்கின்றனர். சிவன் பாம்புகளைப் பூண்டிருக்கின்றான். இந்திரன் நாட்டுக்கு நாகநாடு என்னும் பெயர் உண்டு. எனவே இந்திரன் நகர் சிவன் வடிவை ஒத்தது என்க. நாகம்: (1) பாம்பு. (2) அமரஉலகம். மகபதி: இந்திரன். வேள்வி செய்து பதவிபெற்றவன் என்பது பொருள். மாநகர்: அமராபதி. புண்ணியன்: சிவபெருமான்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அமராபதியின் தோற்றம்.)

## தும்பையம் சடையான்

100 சம்புவன் சம்பு மாலி,
எனும்பெயர்த் தனுசர் தம்மை
உம்பர்கோன் வதைத்த அந்நாள்
ஊர்ந்தது,எவ் உலகும் ஏத்தும்

தும்பைஅம் சடையான் வெற்பைத்
துளக்கிய சூரன் மாள,
விற்பவார் சிலைஇ ராமன்
வென்றநாள் ஊர்ந்தது இத்தேர்.

**பொழிப்பு:** இத்தேர் சம்புவன், சம்புமாலி என்ற அசுரர்களைத் தேவேந்திரன் கொன்ற அந்த நாளில் செலுத்தியது; எந்த உலகமும் துதிக்கும் தும்பைமாலை சூடிய அழகிய சடையை உடைய சிவபிரானின் வெள்ளி மலையைப் பெயர்த்தெடுத்த இராவணன் மடிய, மேலான நீண்ட வில்லை உடைய இராமபிரான் வெற்றிகொண்ட காலத்துச் செலுத்தியது; இந்தத்தேர்.

**விளக்கம்:** இத்தேர் என்பதை இரண்டு இடத்தும் கூட்டுக. சூரன்: இராவணன்.

(ஆரணியம். நிவாதகவசர் காலகேயர் வதைச்சருக்கம். இந்திரன் அருச்சுனனுக்கு அளித்த தேரின் பெருமை.)

## வரையுளான்

101 வரைஉ ளானும்
மலரின்உ ளானும், வெண்
திரைஉ ளானும்
செருப்ப, அரு நர்முடன்
தரைஉ ளான்வந்து
போர்பொரத் தக்கதோ!
"உரைஉ ளார்" என்று
உரையிர், உணரவே.

**பொழிப்பு:** மலையில் உள்ளவனும், பூவில் உறைபவனும், பாற்கடலில் படுப்பவனும் வெல்லமுடியாத நம்முடன் நிலத்தில் உள்ள ஒருவன் வந்து போர் பொருதல் சாலுமோ? புகழ் உள்ளவர்கள் அவர்கள் என்று உணருமாறு சொல்லுங்கள்.

**விளக்கம் :** வரை: வெள்ளிமலை; வரையுளான்: சிவன். மலர்: வெண்தாமரை; மலர் உளான்: பிரமன். வெண்திரை: பாற்கடல்; அதிலுள்ளவன் திருமால். செகுப்ப அரு: வெல்ல முடியாத. தரை: நிலவுலகம். தரை உளான்: பார்த்தன். உரை: புகழ். உரையீர்: சொல்லுங்கள்.

(ஆரணியம். நிவாத கவசர் காலகேயர். இந்திரன் தூதனுக்கு அவுணர்கள் செப்பிய மறுமொழி.)

## ஏற்றான்

102 காற்றாய்மிக மண்டு கடுங்கனலாய்,
கூற்றாய்அவர் ஆவி குடித்துஉகுசெஞ்
சேற்றால்ஒரு பாதி சிவந்தது.பார்
ஏற்றான்ஒரு பங்குஎன, எங்கணுமே.

**பொழிப்பு :** காற்றாகப் பெருகி மண்டும் கடிய நெருப்பாக, எமனாக இருந்து அவர் உயிரைக் குடித்துக் கொட்டுகின்ற இரத்தக் குழம்பால் இடத்தில் ஒரு பாதி சிவந்துவிட்டது. ஏறூர்ந்த செல்வனாகிய சிவபிரானின் ஒரு பாதி என்று சொல்லுமாறு எங்கும் அக்காட்சி அமைந்திருந்தது.

**விளக்கம் :** போர்க் களத்தில் ஒரு பாதியில் ஓடிய இரத்தச் சேற்றினால் அக்களம் செம்மேனிச் சிவனை ஒத்திருந்தது என்க.

(ஆரணியம். நிவாத கவசர் காலகேயர். பார்த்தன் அம்பினால் தோன்றிய இரத்தச்சேறு.)

## கானிடைக் கடவுள் வேடன்

103 வானிடத்து அருபி சொன்ன
வாசகம் மனத்தில் கொள்ளா,
தேனுடைத் தெரியல் வீரன்
தேரினைத் திரிய ஓட்டி,

காவிடைக் கடவுள் வேடன்
தருங்கணை கரத்தில் கொண்டு,
தானுடைத் தனுவில் பூட்டி
அநுப்படச் சமைந்தது ஓரார்.

**பொழிப்பு:** விண்ணினின்றும் அசரீரி மொழிந்த சொல்லை உள்ளத்திற்கொண்டு, தேன் பொருந்திய மாலையை அணிந்த வீரனாகிய விசயன், தேரை மாறுபடச் செலுத்தி, காட்டிலே சிவனாகிய வேடன் தந்த அம்பைக் கையில் ஏந்தித் தன்னுடைய வில்லில் அதனைப் பொருத்திப் பின்னே போகு மாறு அதனைச் செலுத்தியதை மாற்றார் அறிந்தார் அல்லர்.

**விளக்கம் :** அரூபி சொன்ன வாசகம்: வடிவமற்ற பேச்சு. தெரியல்: மாலை. வீரன்: பார்த்தன். கடவுள் வேடன்: வேடவடிவெடுத்த சிவபெருமான். தருங்கணை: பாசுபதம். தனு: வில். அநு: பின்புறம். தன்னுடை என்பது தானுடை என்று நீட்டல் விகாரம் பெற்றது.

(ஆரணியம். நிவாத கவசர் காலகேயர் வதை. பார்த்தன் பாசுபதம் விடல்)

## சங்கரன் செங்கை அம்பு

104 உரம்பட்ட வஞ்சர் சேனை
ஒருப்பட்ட உறுதி நோக்கி,
திரம்பட்ட சிலைக்கை வீரன்,
சிலீமுகம் தெறித்த போது,அச்
சரம்பட்ட தனுசர் அங்கம்,
சங்கரன் செங்கை அம்பால்
புரம்பட்ட பரிசு பட்டு,
பொடிந்தன பொடியாய் மன்னே!

**பொழிப்பு:** வலிமை வாய்ந்த வஞ்சகர் படைகள் ஒன்று சேர்ந்த உறுதிப்பாட்டைக் கண்டு, அம்பு பொருந்திய வில்லைக் கையில் உடைய பார்த்தன், அம்புகளைச் செலுத்திய போது, அந்தக் கணைகள் தாக்கிய அசுரரது உடல்கள், சிவ பிரானின் செங்கைக் கணையால் முப்புரம் அடைந்த தன்மை யைப்போல் பொடிப் பொடியாக உதிர்ந்தன.

விளக்கம் : உரம்: வலிமை. வஞ்சர்: அசுரர். திரம், அஸ்திரம் என்பதின் முதற்குறை. அத்திரம், சிலீமுகம், சரம் யாவும் அம்பு என்னும் பொருளன. தனுசர்: அசுரர். அங்கம்: உடம்பு. புரம்: முப்புரம். மன், ஓ, அசை.

(ஆரணியம். நிவாதகவசர் காலகேயர்வதை. அருச்சுனன் எய்த பாசுபதத்தால் அசுரர்கள் பொடிப்பொடி ஆதல்)

## தூநீராடித் தரித்தது மீண்டும்

105 உருத்தது; மிகவும், அண்டம்
உடைந்திட உடன்று பொங்கிச்
சிரித்தது; தனுசர் மெய்யும்
சிந்தையும் சேரப் பற்றி,
எரித்தது; தூநீர் ஆடி
இவனிடம் தன்னில் வந்து,
தரித்தது, மீண்டும்; அந்தச்
சங்கரன் செங்கை வாளி.

பொழிப்பு: அந்தச் சிவபிரானின் செங்கை அம்பாகிய பாசுபதம், பெரிதும் சினந்தது; அண்டகோளங்கள் இடியுமாறு பொருது பொங்கிச் சிரித்தது; அசுரர்களின் உடம்பும் உள்ளமும் ஒரு சேரப் பிடித்துக் கொளுத்தியது; தூய புனலிலே குளித்துப் பார்த்தனிடம் வந்து திரும்பவும் தங்கியது.

விளக்கம் : இவன்: விசயன்.

(ஆரணியம். நிவாதகவசர் காலகேயர் வதை. பாசுபதம் அசுரரை அழித்து அருச்சுனன் கையை அடைந்தது.)

## விடையவன் அருளும் கைப்பகழி

106 'இப்படை களின்உயிர்
அழிகிலர் இவர்'என்று
அப்படை களைஒழி
தர,அடல் அடையார்
மெய்ப்புகும் விறலது
விடையவன் அருளும்
கைப்பக ழியைமனன்
உறநனி கருதா.

பொழிப்பு: இந்தப் படைகளினாலே இவர் உயிர்விட மாட்டார், என்று எண்ணி, அவற்றை நிறுத்திவிட்டு, வலிமை வாய்ந்த எதிரிகளின் உடலில் நுழையும் ஆற்றல் உடையதான சிவபிரான் அருளிய கைஅம்பைவிட உள்ளத்தில் நன்கு எண்ணி,

விளக்கம்: அடல்: ஆற்றல். அடையார்: எதிரிகள். மெய்: உடம்பு.

(ஆரணியம். நிவாதகவசர் காலகேயர் வதை. அருச்சுனன் காலகேயர்உயிர்கவரச் சிவன்கணையை விடநினைத்தல்)

## பசுபதி அருளிய பகழி

107 பசுபதி அருளிய
பகழிமுன் வரஞர்,
விசயனும் நறைவிரி
மலர்கொடு பரவி,
திசைதொறும் அமர்புரி
திறலுடை வடிவேல்
அசுரர்தம் உடல்உக,
அடலுடன் விடவே,

பொழிப்பு: சிவபிரான் கொடுத்தகணை முன்னே வந்து நிற்றலும், பார்த்தனும் அவ்வம்புக்குத் தேன் கொட்டும் பூவைப் போட்டு வழிபாடு செய்து, திக்குகள் தோறும் போர் செய்கின்ற ஆற்றல் பெற்ற கூரிய வேற்படைகொண்ட அசுரர்களின் உடல்நொறுங்குமாறு வலிமையுடன் செலுத்த,

விளக்கம்: பசுபதி: பசுக்களுக்கு நாயகனாகிய சிவபெருமான். பகழி: அம்பு. நறை: தேன். பரவி: வழிபட்டு. உக: நொறுங்க.

(ஆரணியம் நிவாதகவசர் காலகேயர்வதை. அருச்சுனன் காலகேயர் உயிரை வாங்கச் சிவன்அம்பை ஏவல்)

## ஏறுடையான் முதல்

108 ஆறுஇரு காதம்
அகன்றுஉயர் தோளான்;
நூறுஇரு காதம்
நொடிக்குள் நடப்பான்;
ஏறுஉடை யான்முதல்
யாவர்கள் எனினும்
மாறேடு காதி
மலைந்திட வல்லான்.

**பொழிப்பு:** பன்னிரண்டு காதம் பரந்து உயர்ந்த தோளை உடையவன்; இருநூறு காதவழியை ஒரு நொடிக்குள் நடந்து கடப்பான்; காளையை உடைய சிவபெருமான் உள்ளிட்ட யாரையும் மாறுபட்டு மோதிப் போர்புரியவல்லான், (புண்டரீகனென்னும் அரக்கன்.)

**விளக்கம்:** ஏறுடையான்: சிவபெருமான். காதி: மோதி. மலைந்திட: போர் செய்ய.

இப்பாட்டின் முதல் வரி,

"தோளொடு தோள்செலல் தொடர்ந்து நோக்ுறின்
நாள்பல கழியுமால்"

என்று கும்பகன்னனைக் கம்பர் அலங்கரிப்பதை நினைப்பூட்டுகின்றது.

(ஆரணியம். புட்பயாத்திரைச் சருக்கம். புண்டரீகன் தன்மை.)

## மதனை எரித்திடும் சிவன்

109 அருள்இலா அரக்கர் இவ்வாறு,
அகங்கரித்து, அரற்றும் இந்தப்
பொருள்இலா உரைகட்கு எல்லாம்
உத்தரம் புகலான் ஆகி,

இருள்இலா முத்தம் அன்ன
எயிற்றுஅரும்பு இலங்க நக்கான்;

தெருள்இலா மதனை முன்னம்
எரித்திடும் சிவனைப் போல்வான்.

**பொழிப்பு:** தெளிவு இல்லாத காமனை முன்னர் எரித்து ஒழித்தவனான சிவனைப் போன்றவனான வீமன், கருணையற்ற அரக்கர்கள் இந்த விதமாகச் செருக்குற்றுப் பிதற்றுகின்ற இந்தப் பொருளற்ற பேச்சுக்கட்கெல்லாம் விடை சொல்லாதவனாய் இருளில்லாத முத்தை ஒத்த பல்லாகிய முல்லை அரும்பு வெளித்தோன்றுமாறு சிரித்தான்.

**விளக்கம்:** அருள்: கருணை. அகங்காரம்: ஆணவம். அரற்றுதல்: பிதற்றுதல். உத்தரம்: மறுமொழி. இருளிலா முத்தம்: பழுதற்ற முத்து. எயிறு: பல். அரும்பு: மொட்டு. இலங்க: தோன்ற. நகுதல்: ஈண்டு ஏளனச்சிரிப்பு. தெருள்: தெளிவு.

(ஆரணியம். புட்பயாத்திரை. அரக்கர் பிதற்றலுக்கு வீமன் சிரிப்பு.)

## உருத்திரன் மானுட உருவம் கொண்டது

110 கருத்தொடு சென்றுஅளகேசன்
பாத கமலம்

சிரத்தினில் வைத்து,இவை நின்று
செப்ப லுற்றான்;

'உருத்திரன் மானுட உருவம்
கொண்டது; அன்றேல்,

வரத்துஇவன் மானுடன் அல்லன்;
மன்ன!' என்றே.

**பொழிப்பு:** நல்ல எண்ணத்தோடு போய்க் குபேரனுடைய பாத தாமரையைத் தலையில் வைத்து இவ்வாறு சொல்லலுற்றான்; 'உருத்திரமூர்த்தி மானுட வடிவம் பெற்றது. அல்லாவிட்டால் வரத்தினாலே இவன் மானுடன் ஆகான் அரசனே' என்று (சொன்னான் சங்கோடணன் என்பான்.)

**விளக்கம்:** அளகேசன்: குபேரன். பாதகமலம்: திருவடித் தாமரை.

(ஆரணியம். புட்பயாத்திரை. குபேரனிடம் வீமனைப் பற்றிச் சங்கோடணன் கூறல்.)

## தோகை பாகன் கதை கேட்டார்

111 மின்புரை மருங்குல் மின்னும்,
வேந்தரும் அந்தக் கானில்
அன்புடை முனிவன் கூற,
அவன்மலர்ப் பாதம் போற்றி,
துன்பமும் துனியும் மாறி,
நாள்தொறும் தோகை பாகன்
தன்பெரும் கதையும் கேட்டுத்
தங்கினர் எப்ப மாதோ.

**பொழிப்பு:** மின்னலை ஒத்த இடையை உடைய துரோபதையும், பாண்டவர்களும் அந்தக் காட்டில் அன்புடைய முனிவன் கூற, அவன் பூப்போன்ற திருவடியை வணங்கித் துன்பமும் கவலையும்மாறி நாள்தோறும் மயிலனைய மங்கையைப் பங்கில் கொண்ட சிவபிரானின் சிறந்த காதைகளைக் கேட்டு வாழ்ந்தார்கள் என்று மேலோர் சொல்லுவர்.

**விளக்கம்:** மின் புரை: மின்னலை ஒத்த. மருங்குல்: இடை. மின்: மின்னல்போன்ற துரோபதை. முனிவன்: உரோமசன்.

(ஆரணியம். புட்பயாத்திரை. ஐவரும் தேவியும் சிவன் கதை கேட்டு வாழ்தல்.)

## தாணு அனையான்

112 ஏணில்வரை மார்பர்இமை
யோர்புகழும் எட்டுக்
கோண்உடைய மாமுனி,வ
ணம்குறுகி, அன்னுன்

மாண்உடை மலர்ப்பதம்
வணங்கினர் துதித்தார்;

தாணுஅனை யானும்அவர்
தம்மைஎதிர் கொண்டான்.

**பொழிப்பு:** இகழ்ச்சியற்ற மலைபோன்ற மார்பை உடைய பாண்டவர் ஐவரும் தேவர்கள் பாராட்டும் எட்டுக் கோணல் உடைய சிறந்த முனிவனுக்கு உரிய வனத்தை அடைந்து, அம் முனிவனுடைய மாட்சிமைப்பட்ட பூப் போன்ற திருவடியை வணங்கி ஏத்தினர்; சிவபெருமானை ஒத்த அம் முனிவனும் அவர்களை எதிர்கொண்டு அழைத்தான்.

**விளக்கம்:** ஏண்: இகழ்ச்சி. கோண்: கோணல். எட்டுக் கோண்உடைய முனி: அஷ்டகோணமுனி என்பவன். தாணு: சிவபெருமான்.

(ஆரணியம். சடாசுரன் வதைச் சருக்கம். அட்டகோண முனி வனத்தை ஐவர் அடைதல்.)

## பவநாசகக் கடவுள்

113 கீசகன் இம்முறை
கிளந்த பற்பல

வாசகம் கேட்டலும்,
மலங்கொள் நெஞ்சுடைப்

பூசகர் பூசைகொள்-
ளாத புன்பவ-

நாசகக் கடவுள்போல்
நகைத்து நோக்கியே,

**பொழிப்பு:** கீசகன் இவ்வாறு கூறிய பற்பல பேச்சுக்களைக்கேட்டவுடன், (வீமன்) அழுக்கு அடைந்த உள்ளத்தை உடையார் செய்கின்ற பூசையை ஏற்றுக்கொள்ளாத, இழிவு கொண்ட பிறப்பை அழிக்கின்ற கடவுளைப்போல் சிரித்துப் பார்த்து,

**விளக்கம் :** இப்பாடல் குளகம். கிளந்த: சொல்லிய. மலம்: அழுக்கு. புன்மை: இழிதன்மை. பவம்: பிறப்பு. பவநாசகக் கடவுள்: பிறப்பை அழிக்கும் இறைவனாகிய சிவபெருமான்.

(விராட பருவம். கீசகன் வதைச்சருக்கம். கீசகனைப் பார்த்து வீமன் சிரிக்கும் ஏளனச்சிரிப்பு.)

## சந்திர மவுலி

114 மந்தரம் அனைய தோளான்
மற்றுஒரு வரிவில் வாங்கி,
'இந்தவெம் பகழிக்கு எல்லாம்
ஈடுஅருன் இவன்'என்று எண்ணி,
சந்திர மவுலி தந்த
சாயகம் தொடுத்த லோடும்,
நொந்து,'இனி என்செய் வோம்'என்று
ஊர்புக நோக்கி னானே.

**பொழிப்பு :** மந்தர மலையை ஒத்த தோளை உடையவனாகிய அருச்சுனன் வேறு ஒரு கட்டமைந்த வில்லை வளைத்து, 'இந்தக் கொடிய அம்புகளுக்கு எல்லாம் இவன் வலி இழக்க மாட்டான்' என்று நினைத்து, திங்களைச் சடையில் சூடிய சிவன் தந்த அம்பைவிட, வருந்தி இனி என்ன செய்வோம், என்று எண்ணியவனாய் ஊரை நோக்கிப் புறப்பட்டான். (அசுவத்தாமன்.)

**விளக்கம்.** மந்தரம்: மேருமலை. ஈடு: வலி. இவன் அசுவத்தாமன். சாயகம்: அம்பு.

(விராடபருவம். நிரைமீட்சிச் சருக்கம். அசுவத்தாமனின் ஓட்டம்.)

## கவுரி பங்காளன்

115 இவர்,பெரும் தேரின் மேலோன்
ஒருவனே இலக்கது ஆக,

தவர்உடன் குனித்து,அ நேக
சாயகம் தொடுத்த காலை,

கவுரிபங் காளன் தன்னைக்
கண்ணுறக் கண்ட காளை,

பவுரிவந்து ஒன்றும் தன்மேல்
படாமல்வெம் பகழி நோத்தான்.

**பொழிப்பு :** (வீடுமன், விதுரன், சுயோதனன், சிந்து ராயன் முதலிய) இவர்கள் பெரிய தேரின்மேல் இருக்கின்ற விசயன் ஒருவனையே குறியாகக்கொண்டு வில்வளைத்துப் பற்பல அம்புகளைத் தொடுத்தபோது, கௌரி பங்காளனாகிய கடவுளை நேரே கண்ணுரக்கண்ட காளையாகிய பார்த்தன், அவ்வம்புகள் மண்டலமிட்டு வந்து ஒன்றும் தன்மேல் தைத்துவிடாமல் கொடிய அம்புகளைத் தொடுத்தான்.

**விளக்கம் :** இலக்கு: குறி. தவர்: வில். குனித்து: வளைத்து. சாயகம்: அம்பு. கௌரி: அம்பிகை. பங்காளன்: சிவன். காளை: அருச்சுனன், பவுரி: மண்டலமிட்டு வருதல். பகழி: அம்பு.

(விராட பருவம். நிரை மீட்சி. பார்த்தன் வீடுமன் முதலியோரோடு போர் செய்தல்.)

## மவுலித்திங்கள் அத்தர்

116 இத்தரை இடம்கொ ளாமல்
இறந்தனர் போல வீழ்ந்த

மத்தரை மயிர்கொய் தென்ன,
மணிக்கொடித் தூசும், தூசும்

உத்தரை வண்டற் பாவைக்கு
உடுத்துதற்கு என்று கொய்தான்;
அத்தரை மவுலித் திங்கள்
அமுதுஉகப் புடைத்த வில்லான்.

**பொழிப்பு:** சிவபெருமானை அவர் சடையில் இருந்த சந்திரனினின்றும் அமுதம் கொட்டுமாறு அடித்த வில்லாளனாகிய அருச்சுனன், இந்த நிலத்தில் இடமில்லை என்று சொல்லத்தக்க அளவுக்கு இறந்தவர்களைப்போல அடிபட்டு வீழ்ந்த மத்தம்பிடித்த எதிரிகளை, மயிரைக் கத்தரித்ததுபோல, அவர்கள் அழகிய கொடித்துணியையும், அவர்கள் ஆடையையும், உத்தரை என்பாளின் விளையாட்டுப் பொம்மைக்கு உடுத்துதற்கு என்று கொய்தான்.

**விளக்கம்:** அத்தரை என்பதை முதலில் எடுத்துப் பொருள் கொள்க. வில்லான்: எழுவாய். மத்தர்: உன்மத்தம் பிடித்தவர். தூசு: துணி. உத்தரை: விராடன் மகள். (இவள் அபிமனுக்கு மணம் செய்யப்பெற்றாள்.) வண்டல் பாவை. விளையாட்டுப் பதுமை. அத்தர்: சிவபெருமான். உக: கொட்ட. புடைத்த: அடித்த.

(விராட பருவம் நிரைமீட்சி. துரியோதனன் படைகளின் ஆடைகளை விசயன் கொய்தல்.)

## குன்று எறிந்தவனைக் கண்ட குன்றவில்லி

117 வென்றுமீன் குமரன் தன்னை
வீதிகள் தோறும், மாதர்
அன்று எதிர் கொண்டு நல்கி
ராசனம் எடுத்து, வாழ்ந்த,

குன்றுஎறிந் தவனைக் கண்ட
குன்றவில் லியைப்போல், முந்தச்
சென்று,அவன் பிதாவும் தேர்மேல்
சிக்கெனத் தழீஇக்கொண் டானே.

**பொழிப்பு:** வெற்றி கொண்டு திரும்புகின்ற மைந்தனை வீதிகள் தோறும் பெண்கள் அன்று எதிர்சென்று நல்ல ஆரத்தி எடுத்து வாழ்த்துக்கூற, மலையை அழித்த குமரக் கடவுளைக் கண்ட மலைவில்லியாகிய சிவபிரானைப் போலத் தந்தையாகிய விராடன் விரைந்து சென்று மைந்தனாகிய உத்தரனைத் தேரின்மீது பற்றித் தழுவிக்கொண்டான்.

**விளக்கம்:** நீராசனம்: ஆரத்தி. குன்றெறிந்தவன்: குமரன். குன்றவில்லி: மலையை வில்லாக வளைத்த சிவன். முந்தச் சென்று: விரைந்துபோய். பிதா: விராடன். சிக்கெனத் தழீஇக் கொண்டான் என்பது, 'சிக்கெனப் பிடித்த' திருவாசகத்தை நினைப்பூட்டுகின்றது.

(விராட பருவம். நிரைமீட்சி. விராடன் மகனை நகரமும் மன்னனும் எதிர்கொள்ளல்.)

## சிவனைக் குறித்த சிவேதன் தவம்

118 சிவன்தன்னை நோக்கிச் சிவேதன்தவம்
செய்த வாறும்,

அவன்தன்அரு ளால்பல ஆயுதம்
பெற்ற வாறும்,

இவன்,தன்பகை செற்றதும் யாவும்
இயம்பி, உள்ளம்

கவன்றுஅன்பு றுமல் விராடன்தன்
கவற்சி தீர்த்தான்.

**பொழிப்பு:** சிவனைக் குறித்துச் சிவேதன் தவம் செய்த வரலாற்றையும், அந்தச் சிவன் அருளால் பல படைகளைப் பெற்ற விதத்தையும், இந்தச் சிவேதன் தன் பகையை அழித்ததும் ஆகிய எல்லாவற்றையும் சொல்லி, அன்பினால் மனக்கவலைஅடையாமல் விராடனுடைய கவலையை நீக்கினான், (கண்ணன்.)

**விளக்கம்:** சிவேதன்: விராடனின் மூத்த மகன். தன் பகை: கண்ணன் பகை. கவற்சி: கவலை.

(விராட பருவம். வெளிப்பாட்டுச் சருக்கம், விராடன் கவலையைக் கண்ணன் தீர்த்தல்.)

## உமைக்கு நாயகன்

119 அமைத்த வாசநல் நீர்கொடு
மஞ்சனம் ஆடி,
சமைத்த பல்கறி அடிசில்தம்
விருப்பினல் அருந்தி,
உமைக்கு நாயகன் இரவுஒழித்து
அருளினன் உதவ,
இமைப்பி லார்அமுது அருந்திய
இயல்புஎன இருந்தார்.

**பொழிப்பு:** மணம் ஊட்டிய நல்ல நீரிலே குளித்துச் சமைக்கப் பெற்ற பல்வகைக் கறிகளோடு கூடிய உண்டியை விருப்பப்படி உண்டு, உமைக்கு நாயகனுகிய சிவன் பிச்சை ஏற்பதை நீக்கி அருளினவனுன திருமால் தர, தேவர்கள் அமுதுண்ட தன்மையைப் போல, மகிழ்ந்து இருந்தனர். (கண்ணனும் அவன் குழுவினரும்.)

**விளக்கம்:** அமைத்த வாசம்: மணம் ஊட்டிய. மஞ்சனம் ஆடுதல்: குளித்தல். அடிசில்: உணவு. சிவன் பிச்சை ஏற்றதைத் திருமால் ஒழித்தான் என்று சொல்வது வைணவக் கதை. வில்லி சைவக் கதை வைணவக் கதை இரண்டையும் இயம்பியிருக்கின்ருர். இமைப்பிலார்: தேவர்கள்.

(உத்தியோக பருவம். கண்ணன் தூது. கண்ணனும் அவனைச் சார்ந்தோரும் விதுரன் வீட்டில் விருந்துண்டு களித்திருத்தல்.)

## அச்சுதன் வில்லும் அரன் வில்லும்

120 அந்த வில்லினை முறித்த வில்லிதனது
ஆலயம் புகுத, அச்சுதன்
சந்த வில்லும்அரன் வில்லும் ஒப்பதுஒரு
தாம வில்லினை முறிப்பதே?

முந்த வில்லியரில் என்னும் வில்லுடைய
விசயன் வந்துஅமரின் முடுகினல்,
'எந்த வில்லிஎதிர் நிற்கும் வில்லிஇனி'
என்று காவலர் இரங்கினர்.

**பொழிப்பு:** அந்தத் தன் வில்லை ஒடித்த வில்லாளியாகிய விதுரன் தன்து மாளிகையை நோக்கிச்செல்ல, "திருமாலின் அழகிய வில்லுக்கும், சிவன் வில்லுக்கும் சமமான ஒப்பற்ற மாலை அணிந்த வில்லை முறிக்கலாமா? வில்லாளர்கட்கெல்லாம் முதல்வனுக எண்ணத்தக்க வில்லேந்திய பார்த்தன் வந்து போர்க்களத்தில் நிற்பானுனல் இனிமேல் எந்த வில்லாளி எதிர்த்து நிற்கும் வில்லி ஆவான்" என்று மன்னர்கள் வருந்தினர்கள்.

**விளக்கம்:** இப்பாடலில் ஐந்து வில்லும் நான்கு வில்லியும் வந்திருக்கின்றன. (பாடியவர் ஒரு வில்லி அல்லவா?) ஆலயம்: மாளிகை. அச்சுதன்: திருமால். சுந்தம்: அழகு. தாமம்: மாலை.

(உத்தியோகம். கண்ணன் தூது. விதுரன் வில்லை முறித்ததற்கு மன்னவர் வருந்தல்.)

## காமன்மேல் அரன்

121 தாமன் மேல்வர வரவு டைந்திடு
தமமெ னும்படி, தண்டுடன்

வீமன் மேல்வர வரவு டைந்தனர்,
மேவ லார்கள்; வலம்புரித்

தாமன் மேல்வர, வரவு கண்டு
தரிக்கி லாதுஎதிர் சென்றனன்;

காமன் மேல்அரன் என்ன நெஞ்சு
கனன்று கண்கள் சிவக்கவே,

**பொழிப்பு:** சூரியன் மேல்வரவர உடைந்து செல்லு கின்ற இருளைப்போலத் தண்டைக் கையிலேந்தி வீமன்மேலே வரவரச் சிதறிஓடினுர்கள் மாற்ருர்கள்; நந்தியாவட்டை மாலை அணிந்த துரியோதனன் மேலே எதிர்த்துவர அவன்வரவைப் பார்த்துப் பொறுக்காமல் மன்மதன்மீது சிவன் சென்றது போல, உள்ளம் கொதித்துக் கண்கள் சிவப்பேறத் துரியோ தனன் எதிர் சென்ருன் வீமன்.

**விளக்கம்:** தாமன்: சூரியன். தமம்: இருள். வலம்புரி: நந்தியாவட்டை. தாமன்: மாலையை உடைய சுயோதனன்.

(வீட்டும பருவம். முதற்போர்ச் சருக்கம். வீமனுக்கு உடைந்தனர் மாற்ருர்.)

## ஈசன் அளித்த வில்

122 அம்ப ரத்தவர் கண்டு நின்றவர்
அதிச யித்திட வானின்மேல்,
இம்பர் இப்படி தெவ்வர் வெம்படை
இரிய வன்பொடு திரியவே,

'தம்பி பட்டனன்' என்று கொண்டுஎழு
சாக ரத்துஎழு தழல்என,
தும்பை யுற்று, மிலைச்சி, ஈசன்
அளித்த வில்லொடு தோன்றினன்.

**பொழிப்பு:** மேலுலகத்தில் தேவர்கள் கண்டு நின்றவர்கள் வியப்பெய்த இவ்வுலகத்து இவ்விதமாகப் பகைவர்களின் கொடியபடை நிலைகுலைய, வன்மையோடு போர்க்களத்தில் வீமன் திரிய, தன் தம்பி இறந்து விட்டான் என்று கடலில் தோன்றிய நெருப்புப்போல் கொதித்தெழுந்து தும்பை மாலையை அணிந்து, சிவபிரான் தனக்குக் கொடுத்த வில்லோடுகூடத் தோன்றினுன் (சிவேதன்.)

**விளக்கம்:** அம்பரத்தவர்: தேவர். தெவ்வர்: பகைவர். இரிய: நிலைகுலைந்து ஓட. தம்பி: உத்தரன். சாகரத்து எழு தழல்: கடலில் தோன்றும் வடவைக்கனல். மிலைச்சி: அணிந்து. ஈசன்: சிவுன்,

(வீட்டும பருவம். முதற்போர்ச் சருக்கம்: வீமனும் சிவேதனும் மாற்ருரோடு அதிர்ந்து பொருதல்.)

## வேனிலவன்மேல் நுதல் விழித்தவன்

123 ஆனபொழுது அந்தரம்
நெருங்கிஅமர் காணும்

வானவர், விராடபதி
மைந்தனை மதித்தார்;

வேனிலவன் மேல்நுதல்
விழித்தவன் அளிக்கும்

கூனல்வரி சாபம்இது
கொண்டனன் வரத்தால்.

**பொழிப்பு:** மன்மதன்மீது நெற்றிக்கண்ணைச் செலுத்தி அழித்த சிவன் அளித்த வளைந்த கட்டமைந்த இந்த வில்லைச் சிவன் வரத்தால் பெற்றுக் கொண்டான் சிவேதன் (என்று கூறி) அந்தச்சமயத்து வான் உலகத்தில் கூடிப் போர் காணும் தேவர்கள் விராடமன்னன் மகனுகிய சிவேதனைப் பாராட்டினர்.

**விளக்கம்:** அந்தரம்: வானுலகம். வேனிலவன். மன்மதன். நுதல் விழித்தவன்: சிவன். கூனல்: வளைவு. சாபம்: வில்.

(வீட்டும பருவம். முதற்போர். சிவேதன் போரைத் தேவர் மதித்தல்.)

## குன்று சிலை கொண்டவன்

124 என்றுஎதிர் சிவேதனெடு
இயம்புதலும், வெள்கி,

குன்றுசிலை கொண்டவன்
அளித்தசிலை கொள்ளான்;

வென்றிவடி வாள்உருவி,
மேலுற நடந்தான்;

றவனும் வேறுஒரு
நெடுஞ்சிலை குனித்தான்.

**பொழிப்பு:** என்று எதிர்நின்ற சிவேதனோடு (வீடுமன்) சொன்னவுடன், சிவேதன் வெட்கி, குன்றை வில்லாக வளைத்த சிவன்கொடுத்த வில்லைக்கைக்கொள்ளாது வைத்து விட்டு, வெற்றிக்கு உரிய கூர்மையான வாள்படையைத் தாங்கி மேலே நடந்தான். அவ்வமயம் அவனோடு போர் புரிந்து நின்றவனாகிய வீடுமன் வேறொரு நீண்ட வில்லைக் கையிலெடுத்து வளைத்தான்.

**விளக்கம்:** குன்றுசிலை கொண்டவன்: சிவன். சிவன் வில்லுக்கு அஞ்சிய வீடுமன், வில்லை விடுத்துச் சிவேதனை வாளெடுக்குமாறு வஞ்சனைசெய்து, தான் (போர் முறைக்கு மாறாக) வில்லெடுத்துப் போர் புரிந்தான் என்க.

(வீட்டும பருவம். முதற்போர். வாள்கொண்ட சிவேதன் மீது வீடுமன் வில் வளைத்தல்.)

## வேழவில் சம்பராரி தகனநாள்

125 வெம்பராகம் வெளியில்உற்று
எழுந்தபோது, வேழவில்
சம்பராரி தகனநாளில்
அன்றுஎழுந்த தன்மைஎன்று
உம்பரார் நடுங்கினர்;
உருத்துவீழும் உருமென,
இம்பரார் நடுங்கினர்;
இரங்குபல் இயங்களால்.

**பொழிப்பு:** வெண்பொடி வெளிப்பட்டு எழுந்தபோது கரும்பு வில்லை உடைய காமனைச் (சிவன்) எரித்த காலத்து எழுந்த பொடி என்று எண்ணித் தேவர்கள் அஞ்சினார்கள். சினந்து வீழும் இடியைப்போல ஒலித்த பல போர் இசைக் கருவிகளால் இவ்வுலகத்தவர் அஞ்சினர்.

**விளக்கம்:** பராகம்: தூசி. வேழம்: கரும்பு. சம்பராரி: மன்மதன். உம்பரார்: தேவர்கள். உருத்து: கோபித்து. உரும்: இடி. இரங்குதல்: ஒலித்தல். இயங்கள்: இசைக் கருவிகள்.

(வீட்டும பருவம். இரண்டாம் போர். பாண்டவ கௌரவப்போர்ப் பெருக்கம்.)

## நகைத்த அரவாபரணன்

126 வார்சிலையை வட்டவடிவு ஆம்வகை வணக்கி,எதிர்
மாறுபட உற்று வருவோர்

ஓர்ஒருவர் நெற்றிதொறும் ஓர்ஒரு வடிக்கணைகள்
ஊடுருவ விட்டு நகுவோன்,

மேருவை வளைத்து,நெடு வாசுகி பிணித்து,மழை
மேகம்நிகர் மெய்க்க ணைதொடா,

ஆர்அழலின் முப்புரமும் நீறுஎழ நகைத்தஅரவு
ஆபரணன் ஒத்த னன்அரோ.

**பொழிப்பு :** நீண்டவில்லை வட்டவடிவு ஆமாறு வளைத்து, எதிரில் மாறுபட்டு வருகின்ற ஒவ்வொருவர் நெற்றியிலும் ஒவ்வொரு அம்பும் ஊடுருவிச்செல்லுமாறு செலுத்திச்சிரிக்கின்றவனாகிய (அபிமன்), மேரு மலையை வளைத்து வில்லாக்கி, நீண்ட வாசுகி என்ற பாம்பை அதில் நாணாகக் கட்டி, மழை பொழிகின்ற முகிலை ஒத்த திருமாலை உண்மையான அம்பாக அவ்வில்லில் தொடுத்துவிட, அதனால் நிறைந்த நெருப்புப்பற்றி மூன்று நகரமும் நீருக, அதுகண்டு சிரித்து நின்ற அரவு ஆபரணனான சிவனை நிகர்த்தான்.

**விளக்கம் :** வார்சிலை: நீண்டவில். வணக்கி: வளைத்து. நகுவோன்: அபிமன். போர்க்களத்தில் எதிரிகள்மீது அம்பு செலுத்திச் சிரித்து நின்ற அபிமனின் தோற்றம் திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளை ஒத்திருந்தது என்க.

(வீட்டும பருவம் இரண்டாம் போர். அபிமன் நின்றநிலை.)

## புராரி

127 மன்னன் தனைஅச் சந்தனுவின்
மைந்தன் பெரும்பேர் அணிகிறுவி,

'பொன்அம் குன்றே, இவன்சிலையும்;
இவனே காணும் புராரி'என

மின்னும் கழற்கால் வீமனுடன்
வெம்போர் விளைத்து, விடலையராய்

முன்னின் றவரும் பின்னிடத்தன்
முனைவா ளியினுல் வினைசெய்தான்.

பொழிப்பு: துரியோதனன் சேனையை அந்தச் சந்தனு மன்னனின் மகனுகிய வீட்டுமன் பெரிய பேரணியாக அமைத்து அழகிய தங்கமலையே இவன் வில், இவன் தான் திரிபுரம் எரித்த சிவன் என்று இயம்பத்தக்கவாறு, ஒளிவிடுகின்ற வீரச்சிலம்பு அணிந்த காலே உடைய வீமனுடன் கொடும் போர்செய்து இளைஞர்களாகத் தன் முன்னே எதிர்த்து நின்றவரும் பின் வாங்கி ஓடத் தன்கூரிய அம்பினுல் செயல் ஆற்றினுன் (முதியவனுகிய வீட்டுமன்.)

விளக்கம்: மன்னன்: சுயோதனன். சந்தனு: வீடுமனின் தந்தை. பேரணி: நடு அணி. பொன்னங்குன்று: அழகிய மேருமலை. புராரி: சிவன். விடலை: இளைஞர்.

(வீட்டும பருவம். மூன்ரும்போர். வீடுமன் பெரும்போர்.)

## அரன்

128 அரன்நின்ற னன்போல, அவன்நின்ற
தேர்ஒத்த அணிதேர்மிசை,

பொரநின்ற நதிமைந்த னெடுசென்று,
முனைநின்று பொரஎண்ணியே,

சரம்நின்ற குனிசாப விசயன்த
னைக்கொண்டு, சங்கம்குறித்து,

உரம்நின்ற அவன்நெஞ்சு டைப்பாகன்
மான்தேர் உகைத்துஊரவே,

பொழிப்பு: சிவபெருமான் நின்றதைப் போல (கண்ணனுகிய) தான் நின்ற தேரை ஒத்த அழகிய தேரின்மீது போர்கருதி நின்ற கங்கையின் மகனுகிய வீட்டுமனுடன் சென்று போர்க்களத்திலே நின்று போர்செய்ய எண்ணி, அம்புகளுடன் வில்லை வளைத்து நின்ற பார்த்தனைக் கொண்டு,

சங்கை முழக்கி, வலிமை நின்றவனாகிய உள்ளம் கொண்ட பார்த்தன் தேர்ச்சாரதியான கண்ணன் குதிரை பூட்டிய தேரைச் செலுத்தி வர,

**விளக்கம்:** அரன்: சிவன். அவன்: கண்ணன். நதி மைந்தன்: வீட்டுமன். சரம்: அம்பு. குறித்து: ஊதி. உரம்: வலிமை. பாகன்: கண்ணன். மான்: குதிரை.

(வீட்டும பருவம். ஐந்தாம் போர். பார்த்தனை வீட்டுமன் முன் சாரதி கொண்டு செல்லல்.)

## சிவன்

129 செல்லும் கலிங்கேசர் அலையுண்ட
நிலைகண்டு, சிவன்என்றுபார்
சொல்லும் பெருஞ்செம்மல் பல்லங்கள்
அவன்மேல் தொடுத்துஏவினான்;
கொல்லும் கொடும்பாணம் அவைஐந்து
விசயன் கொதித்துஏவினான்;
வில்லும்,தன் வில்நாணும் விறல்அம்பும்
உடன்அற்று விடைகொள்ளவே.

**பொழிப்பு:** செல்லுகின்ற கலிங்க தேசத்தவர்கள் நிலை குலைந்த தன்மையைக்கண்டு, சிவன் என்று உலகம் சொல்லத்தக்க பெருமையை உடைய வீட்டுமன், பல அம்புகளைப் பார்த்தன்மீது தொடுத்துவிட்டான்; கொல்லக் கூடிய கொடுமைகொண்ட பாணங்கள் ஐந்தை அருச்சுனன் கொதித்தெழுந்து வீட்டுமன்மீது விட்டான்; வீட்டுமனின் வில்லும் அவன் வில்லின் நாணும் ஆற்றல்வாய்ந்த அம்புகளும் அற்று விடைபெற்று விட்டன.

**விளக்கம்:** செம்மல்: வீட்டுமன். பல்லங்கள்: பல அம்புகள்.

(வீட்டும பருவம். ஐந்தாம் போர். வீட்டுமன் வில் முதலியவற்றை விசயன் அறுத்தல்.)

## ஈமம்தொறும் நடமாடு கழல் ஐயன்

130 ஈமம்தொ றும்சென்று நடம்ஆடு
கழல்ஐயன் எதிராய்வரும்

காமன்தன் உடல்மேல் விழித்திட்ட
நுதலில் கனல்கண்என,

தாமம்பு னைந்துஆர மணம்நாறும்
மார்பத் தடம்தோயவே,

வீமன்தொ டுத்தான்ஓர் எதிர்அம்பு
பார்மன்னன் மிடல்சாயவே.

பொழிப்பு: சுடுகாடு தோறும் சென்று நடம் ஆடுகின்ற திருவடியை உடைய ஐயனுக்கு எதிராக வந்த காமனின் உடம்பின்மேல் திறந்த நெற்றியின் நெருப்புக் கண்ணைப் போல, மாலை அணிந்த சந்தன மணம் கமழும் (துரியோதன னுடைய) மார்பு இடத்தில் படியுமாறு, வீமன் ஒப்பற்ற எதிர் அம்பை விட்டான்; சுயோதனனின் ஆற்றல் அழியுமாறு.

விளக்கம்: ஈமம்: சுடுகாடு. கழல்: திருவடி. ஐயன்: சிவ பெருமான். நுதல் கனற்கண்: நெற்றியில் உள்ள நெருப்புக் கண். தாமம்: மாலை. ஆரம்: சந்தனம். பார்மன்னன்: துரியோ தனன். இங்கே சிவனுக்கு உவமை வீமன் என்க

(வீட்டும பருவம். ஐந்தாம் போர். துரியோதனனுடன் வீமன் பொருதல்.)

## ஞானமே போலும் மேனி உடையவர்

131 மாலும் மதகட சாலும், நுதலும்
மருப்பும் ஒருகையும் வதனமும்,

தோலும், ஒழியஉள் ஆன தசைபல
பேய்கள் நுகர்தரு தும்பிமா,

நாலு மறைகளும் ஓலம் எனஅகல்
வானம் எனமுழு ஞானமே

போலும் என,ஒளிர் மேனி உடையவர்
போர்வை உரிஅதள் போலுமே.

**பொழிப்பு:** மயக்கத்தைத் தருகின்ற மதநீரை உடைய கதுப்பாகிய நீர்த்துருத்தியும், நெற்றியும், தந்தமும், துதிக்கையும், முகமும், தோலும் ஒழிய, தசைகளைப் பல பேய்களால் உண்ணப்பட்ட யானைகள், நாலு வேதங்களும் ஓலமென்று உரைக்க அகன்ற வானவெளியைப் போல முழுஅறிவு என்று சொல்லுமாறு விளங்குகின்ற திருமேனியுடைய சிவபிரான் போர்த்துக்கொண்ட தோலை ஒத்துத் தோன்றும்.

**விளக்கம்:** மால்: மயக்கம். கடம்: யானையின் மதம் தங்கும் உறுப்பு. தும்பிமா: ஒரு பொருள் இருசொல். அதள்: தோல்.

(வீட்டும பருவம். ஆரும் போர். போர்க்களத்தில் மடிந்த யானைக் காட்சி.)

## முப்புரங்களும் வென்ற மீளி

132 உயர்ந்த மேருவோடு ஒத்துஇ லங்குதேர்
உலகுஅ ளந்ததாள் வலவன் ஊரவே,

செயந்தன் மாபெருந் துணைவன், வன்பெருஞ்
சேனை தன்னொடும் சென்று பற்றினன்;

வியந்த தேரின்மேல் முப்பு ரங்களும்
வென்ற மீளிபோல் நின்ற வீடுமன்

இயைந்து போரினுக்கு எதிர, வில்வலோர்
இருவர் விற்களும் எதிர்வ ளைந்தவே.

**பொழிப்பு:** சிறந்த மேருமலையை ஒத்து விளங்குகின்ற தேரை உலகத்தை அளந்த திருவடியை உடைய சாரதி செலுத்த, செயந்தனின் சிறந்த பெரிய தம்பியான பார்த்தன் தனது பெரிய தானையோடு சென்று களம் சேர்ந்தான்; வியக்கத்தக்க தேரின் மீது திரிபுரங்களை வெற்றி கொண்ட சிவனைப் போல் நின்ற வீட்டுமன் போருக்கு இசைந்து எதிர்க்க, வில்லில் வல்லுவர்களாகிய விசயன் வீட்டுமன் இருவர் சிலைகளும் எதிரெதிராக வளைந்தன.

விளக்கம்: உலகளந்த தாள் வலவன்: கண்ணன். ஊர: ஓட்ட. செயந்தன்: இந்திரன் மைந்தன். பெருந்துணை வன்: பார்த்தன். முப்புரங்களும் வென்ற மீளி: சிவன்.

(வீட்டும பருவம். ஏழாம் போர். விசயனும் வீட்டுமனும் எதிர்ந்து போரிடுதல்)

## வன்சிலை வில்லி

133 இன்சிலை மதனவேள்
எனவரும் குமரன், அவ்
வன்சிலை வில்லிதான்
மகிழ்வுறும் குமரன், ஐ
நன்சிலை நடுஅற
நாணொடும் துணியவே,
தன்சிலை கொண்டு, வெஞ்
சாயகம் ஏவினன்.

பொழிப்பு: இனிய வில்லை உடைய காமவேள் என்று சொல்லுமாறு வரும் இலக்கண குமரன், அந்த வலிய மலை வில்லியாகிய சிவன் மகிழ்ந்து விரும்பும் குமரனாகிய அபிமனின் அழகிய நல்ல வில்லின் நடு அற்றுப்போமாறு துண்டுபடத் தன் வில்லைக் கொண்டு கொடிய அம்பைச் செலுத்தினான்.

விளக்கம்: இன்சிலை: இனிக்கும் கரும்புவில். சிலை வில்லி: சிவன். முதல் குமரன் துரியோதனன் மகன் இலக்கண குமரன். இரண்டாவது குமரன் பார்த்தன் மகன் அபிமன். அபிமன் சிறந்த சிவபக்தன் என்பதை, அபிமன் மொழியாக இந்நூலில் பின்னே வரும் இரண்டு (264, 265) பாடல்களும் வலிவுறுத்தும். ஐ: அழகு. சாயகம்: அம்பு.

(துரோண பருவம். பதினொராம்போர். இலக்கண குமரன் அபிமன் வில்லை ஒடித்தல்)

## கண்ணுதல் தீயினுல் வென்றவன்

134 வீயினுல் வென்றபோர்
வில்லியைக் கண்நுதல்

தீயினுல் வென்றவன்
திகழ்தரு சிந்தையோன்

காயினுன் வார்குழல்
கைப்படுத்து எதிர்உறப்

போயினுன், அவனெடும்
பொன்நெடுந் தேரின்மேல்.

**பொழிப்பு:** பூ அம்பினுல் வெற்றி கொள்ளும் போர் வில்லியாகிய மன்மதனை நெற்றிக் கண்ணினின்று எழுந்த தீயினுல் வெற்றி கொண்ட சிவபிரானைப் பதித்துக் கொண்ட உள்ளத்தவனுகிய அபிமன், போர் செய்தவனுன இலக்கண குமரனுடைய நீண்ட சிகையைக் கையில் பற்றி அவனை உடன்கொண்டு தனது அழகிய நீண்ட தேரின்மேல் சென்ருன்.

**விளக்கம்:** வீ: பூ அம்பு. போர்வில்லி: மன்மதன். தீயினுல் வென்றவன்: சிவன். சிந்தையோன்: அபிமன். காயினுன்: இலக்கண குமரன். குழல்: சிகை.

(துரோண பருவம்: பதினெராம் போர். அபிமன் இலக்கண குமரனைத் தேரில் கொண்டு செல்லுதல்.)

## பிறை முடியோன்

135 மறைவாய்வெஞ் சிலைமுனிவன்
வருநினிதன் நிலைஅழிந்து

குறைவாவந் தமைகண்டு,
கோதண்டம் எதிர்வாங்கி,

துறைவாய்வெங் கனல்போலும்
துருபதன்கைச் சிலைதுணியப்

பிறைவாய்வெங் கணைதொடுத்து,
பிறைமுடியோன் எனச்சென்ருன்.

**பொழிப்பு:** மறை புகலும் வாயை உடைய கொடிய வில்லிலும் வல்ல துரோணன், சேனைகள் நிலைகுலைந்து குறைந்து போன தன்மையைப் பார்த்து, வில்லை வளைத்து இடங்கள்தோறும் செல்கின்ற நெருப்புப்போன்ற திட்டத்துய்மனின் கையில் ஒடியுமாறு, பிறை அனைய வாயை உடைய கொடிய கணைகளைத் தொடுத்து, திங்களணிந்த முடியுடையோனாகிய சிவனைப்போல் சென்றான்.

**விளக்கம்:** முனிவன்: துரோணன். அவன் மறையும் வல்லவன்;வில்லும் வல்லவன்: வரூதினி: சேனை. கோதண்டம்: வில். துருபதன்: திட்டத்துய்மன். பிறை முடியோன்: சிவன்.

(துரோணபருவம். பன்னிரண்டாம் போர். திட்டத்துய்மன் வில்லைத் துரோணன் அறுத்தல்)

## சிவனுக்கும்

136 அவன்விட்ட சுடுகணைகள் கொடிமற்க டமும்நடுவண்
அறவெட்டி அதிக வளமா
கவனத்தின் முடுகிஅடு பரிகொத்தி, உடலில்இடு
கவசத்தை மறைய நுழையூ,
சிவனுக்கும் மலரில்உறை பிரமற்கும் உணர்வரிய
திகிரிக்கை வலவ னையுமே
சவனத்தில் மிகுதுயரம் உறுவிக்க, அவசம்மிகு
தளர்உற்ற தனுவி சயனே,

**பொழிப்பு:** அவன் (பகதத்தன்) செலுத்திய சுடுகின்ற அம்புகள், (பார்த்தனின்) கொடியிலுள்ள குரங்கை இடை பொருந்த வெட்டி, அதிகமான வெண்மை நிறமுள்ள சிறந்த வேகமுள்ள விரைந்து சென்று கொல்லுகின்ற குதிரைகளைக் கீறி, உடலில் இட்ட கவசத்துக்குள் நுழைந்து, சிவனுக்கும் தாமரை வாழ் பிரமனுக்கும் அறிய முடியாத சக்கரத்தைக் கையிலேந்திய பார்த்த சாரதியைக்கூட வருந்தத்தக்க பெரிய துயரத்தை அடையச் செய்ய, (அது கண்டு) தன் வசமிழந்து மிகவும் அயர்ச்சி அடைந்த வில்விசயன்,

**விளக்கம்:** இப்பாடல் குளகம். விசயன் என்ன செய்தான் என்பது அடுத்த பாடலில் முடிகின்றது. மற்கடம்: குரங்கு. தவளம்: வெள்ளை. பரி: குதிரை. நுழையூ: நுழைந்து. வலவன்: சாரதி

(துரோணபருவம். பன்னிரண்டாம் போர். பகதத்தன் அம்பின் ஆற்றல்)

## முக்கண் இறைவன்

137 எறிநுற்ற அயில்அசுரர் உயிர்செற்ற அயில்அதனை
எதிர்முட்ட விடுப கழியால்

தறிவித்து, மகபதிதன் மகன்முக்கண் இறைவனொடு
சரிஒத்து முறுவல் புரியா,

வெறிமத்த கரடமுக படசித்ர புகர்கொள்முக
விகடக்கைம் மலைஅ ணிஎலாம்

முறியத்தன் வரிவில்உமிழ் முனைபட்ட பகழிமழை
முகில்வர்க்கம் எனமு டுகினன்.

**பொழிப்பு:** (பகதத்தன்) எறிந்தவேல் அசுரர் உயிரைக் குடித்த அருச்சுனன் வேலை எதிர்த்துத் தாக்க, விடுகின்ற அம்பினால் அவ்வேலை முறித்து இந்திரன் மைந்தனாகிய பார்த்தன் முக்கண் இறைவனாகிய சிவபிரானோடு சரிநிகர் சமானமாய் நகைசெய்து, வெறியுடைய மதம் பொழியும் கன்னத்தையும் முகபடாம் அணிந்த அழகான புள்ளிகளுள்ள முகத்தையும் வேடிக்கையான கையையும் உடைய (பகதத்தனின்) யானையின் ஆபரணங்களெல்லாம் சிதறிச் செல்லத் தனது கட்டமைந்த வில்தருகின்ற கூர்மையான அம்புகளை மேகத்தினின்றும் புறப்படும் மழைக்கூட்டம் என்று சொல்லுமாப்போலச் செலுத்தினான் (பார்த்தன்.)

**விளக்கம்:** அயில்: வேல். பகழி: அம்பு. தறிவித்து: வெட்டி. மகபதி: இந்திரன். மகன்: அருச்சுனன். முறுவல்: புன்சிரிப்பு. கைம்மலை: யானை. மூன்றும் அடி பகதத்தனுடைய யானையின் வருணனை. பகதத்தன் யானைப்போரில் வல்லவன்.

(துரோண பருவம். பன்னிரண்டாம் போர். பகதத்தன் யானையைப் பார்த்தன் நிலைகுலைத்தல்.)

## அரன் வளைத்த வில்

13 பொல்லா அவுணர் வைகியமுப்
புரம்நீறு எழஅன்று அரன்வளைத்த
வில்லாம் என்ன, வலியவிறல்
வில்ஒன்று எடுத்து விறல்வீமன்,

எல்லா மன்ன வரும்ஊர்ந்த
எல்லா இரதங் களும்இமைப்பின்
வல்லான் எறிந்த பம்பரம்போல்
சுழலும் படிகால் வளைத்தானே.

**பொழிப்பு:** பொல்லாத அசுரர்கள் தங்கியிருந்த மூன்று ஊரை நெருப்புப் பற்றுமாறு அன்று சிவபிரான் வளைத்த வில்லென்று சொல்லுமாறு, வன்மை வாய்ந்த வெற்றிவில் ஒன்றைக் கையில் தாங்கி விறல் வாய்ந்த வீமன், எல்லா அரசர்களும் செலுத்திய எல்லாத் தேர்களும் கண்மூடித் திறப்பதற்குள் வல்லவன் வீசிய பம்பரம்போல் சுற்றும்படி வில்லின் நுனியை வளைத்தான்.

**விளக்கம்:** அரன் வளைத்த வில் மலையாகிய வில்.

(துரோண பருவம். பன்னிரண்டாம் போர். வீமனின் விற்போர்.)

## மாரனை அங்கம் எரித்தருள் கண்ணுதல்

139 ஓர்ஓர் உடம்பினில் ஆயிரம்
ஆயிரம் உற்பல வாளிபட,

தாரை படும்படி பொழிமுகில்
ஒத்தனர் சமர்முனை யில்,தரியார்;

மாரனை அங்கம் எரித்தருள்
கண்ணுதல் வடிவம்என னும்படியே

பார்ஒரு பாதி சிவந்தது
மேனி பரந்துஎழு சோரியினால்.

**பொழிப்பு:** ஒவ்வொருவர் உடம்பிலும் ஆயிரமாயிரம் நீலோற்பலம் போன்ற அம்புகள் தைக்க, தாரை உண்டாகுமாறு கொட்டுகின்ற மேகத்தைப் போன்றனர் போர்க்களத்திலே மாற்ருர்; மன்மதனின் உடம்பை எரித்து அருளிய சிவபிரான் வடிவம் என்று சொல்லுமாறு மண்ணில் ஒரு பாதி சிவப்பு நிறம் பெற்றது, உடம்பினின்றும் விரிந்து எழுகின்ற குருதியினுல்.

**விளக்கம்:** உற்பலம்: நீலப்பூ. அது மன்மதன் அம்புகளுள் ஒன்று. அவ்வம்பு கொன்று தீர்க்கும் தகையது. சமர்: போர். தரியார்: எதிரிகள். மாரன்: காமன். சோரி: இரத்தம்.

(துரோணபருவம்: பதின்மூன்ரும் போர். பார்த்தன் சஞ்சத்தகரோடு போர் செய்தல்)

## முப்புர தகனன்

140 தந்தை வெந்நிடு முன்னர், முப்புர
தகன னேநிகர் மகன்,மிகச்

சிந்தை கன்றி, வெருண்டு, தேரொடு
சென்று, கால்வளை சிலையினுல்

உந்து கின்றசி லீமு கம்பல
பகைமு கங்களில் உருவவே,

முந்தி ஞன்,அவன் அப்பு மாரியின்
முழுகி ஞன்உடல் முற்றுமே.

**பொழிப்பு:** தகப்பனுகிய துரோணன் புறங்காட்டி ஓடும் முன்னே, முப்புரத்தை எரித்த சிவனை ஒத்த மைந்தனுகிய அசுவத்தாமன், மிகவும் மனம் உடைந்து, சினங்கொண்டு, தேருடன் சென்று, நுனியை வளைத்து வில்லினுல் செலுத்துகின்ற அம்புகள் பலபோர் முகத்தினும் ஊடுருவுமாறு விரைந்தான்; அவன் (அபிமன்) அந்த அம்புமழைக்குள்ளே உடல்முழுதும் மூழ்கினவன் ஆனுன்.

விளக்கம்: தந்தை: துரோணன். மகன்: அசுவத்தாமன். அப்புமாரி: அம்புமழை பொழிதல்)

(துரோண பருவம். பதின்மூன்றும்போர். அபிமன் மீது அசுவத்தாமன் அம்புமழை பொழிதல்)

## பரமன் கடிஇதழி அம்தண் மாலை

141 எனஇவன் மொழிந்த போதில் அவன்இவன்
இணைஅடி வணங்கி, 'யாது நினைவு!இனி,
உனதுநி னைவுஎஞ்சி டாமல், அபிமனை
உயிர்கவர் வன்'என்று தேற உரைசெய்து,

கனகத ருமன்றல் மாலை எனஒளிர்
கடிஇத ழிஅம்தண் மாலை, பரமனை

மனன்உற உணர்ந்து நாவில் நிகழ்தரு
மறையொடு வளைந்து விழ எறியவே,

பொழிப்பு: என்று இவன் சொன்ன அளவில், அவன் இவன் இரண்டு அடியையும் வணங்கி, 'உன்னுடைய எண்ணம் எதுவோ அதன்படியே தப்பாமல் அபிமன் உயிரை வாங்குவேன்' என்று அவன் தெளியுமாறு சொல்லி, தங்க நிறமான மரத்தில் பூத்த மணமாலை என விளங்குகின்ற மணம் பொருந்திய அழகிய குளிர்ந்த கொன்றை மாலையைச் சிவபெருமானை உள்ளத்தே எண்ணி, வாயினால் மறையைச் சொல்லி, அம்மாலை வளைந்து வீழுமாறு வீச.

விளக்கம்: இவன்: துரியோதனன். அவன்: சயத்திரதன். தேற: தெளிய. கனகம்: தங்கம். தரு: மரம். மன்றல் திருமணம். கடி: மணம். இதழி: கொன்றை.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். அபிமனைச் சுற்றிலும் வளைத்துக் கொன்றை மாலையை வீசுதல்.)

## புரதகனன்

142 சுகன்நிகர் துரோணனெடு,
மகன்,விசயன் மைந்தன்எதிர்
முகன்அமரில் வந்து,புர
தகனன்என நின்றனரே.

**பொழிப்பு:** சுகப்பிரும்ம இருடியை ஒத்த துரோணனும் அவன் மகன் அசுவத்தாமனும் பார்த்தன் மைந்தனுகிய அபிமன் எதிரில் போர்முகத்தில் வந்து முப்புரம் எரித்த சிவனைப்போல் நின்ருர்கள்.

**விளக்கம்:** சுகன், வியாத முனிவன் மைந்தன். அவன் சீலத்திற் சிறந்தவன் என்ப. புரதகனன்: சிவன்.

(துரோணபருவம்; பதின்மூன்ருூம் போர். துரோணனும் மைந்தனும் அபிமனெடு பொருதல்.)

## சடாதுங்க மௌலிப் புரசூதனன்

143 வடாதும், தெனுதும், பரராசர்
வகுத்த நேமி,
குடாதும், குணுதும் அவற்றுஉட்படு
கோணம் நான்கும்,
விடாதுஉந்து தேரின் மிசைஎங்கும்
விராய போது,
சடாதுங்க மௌலிப் புரசூதனன்
தன்னை ஒத்தான்.

**பொழிப்பு:** (அபிமன்) எதிர் மன்னர்கள் வகுத்த சக்கர வியூகத்துள் வடக்கு தெற்கு மேற்கு கிழக்குக்கு உட்பட்ட நான்கு கோணங்களிலும் விடாது தன் தேரைச் செலுத்தி, எங்கும் கலந்தபோது, தூய சடைமுடியை உடைய திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளை நிகர்த்தான்.

விளக்கம்: வடாது: வடக்கு. தெனாது: தெற்கு. பரராசர்: எதிர்மன்னர். நேமி: சக்கரம். குடாது: மேற்கு. குணாது: கிழக்கு. உந்துதல்; செலுத்துதல். விராய்தல்: கலத்தல். சடாதுங்க மௌலி: சடையாகிய புனிதமானமுடி. புரசூதனன்: புரம் எரித்தவன்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். மாற்றரசர் சக்கர வியூகத்தை அபிமன் ஊடுருவிச் செல்லல்.)

## சிவன் வளைத்த பொன்மலை

144 இவனும், அப்பொழுது எதிர்ஒலி என,நனி
இகல்அ ருச்சுனன் மதலையை, 'உனதுஉயிர்
அவனி பர்க்குஎதிர் கவருவன், ஒருநொடி
அளவை யில்,பொருது!' எனமுனை அணுகினன்;
சிவன்வ ளைத்தபொன் மலையினும் வலியின
சிலைவ ளைத்தனர் இருவரும்; எறிதரு
பவனன் மைக்கடல் வடவையின் முனிதரு
பவனம் ஒத்தது, படுகளம் முழுதுமே.

**பொழிப்பு:** இவனும் (இலக்கண குமரனும்) அந்தச் சமயத்து எதிர் ஒலி என்று சொல்லுமாறு நல்ல ஆற்றல் வாய்ந்த விசயன் மைந்தனாகிய அபிமனை, உன் உயிரை மன்னர்கள் காண ஒரு நொடிப் பொழுதில் போர் செய்து வாங்குவேன், எனப் போர்முனையை நெருங்கினான். சிவன் வளைத்த மேரு மலையினும் வலிமை வாய்ந்தனவான விற்களை இருவரும் வளைத்தார்கள், (அப்போது) வீசுகின்ற காற்றோடு கருங்கடலில் தோன்றிய வடவைக் கனல் சேர்ந்து எரித்த இடத்தைப் போர்க்களம் முழுதும் ஒத்திருந்தது.

**விளக்கம்:** இருவர்: அபிமன் இலக்கண குமரன் ஆகிய இருவர். எறிதருதல்: வீசுதல். பவனன்: காற்று. வடவை; கடலில் தோன்றும் பிரளய நெருப்பு. முனிதருதல்: சினத்தல். பவனம்: இடம்.

(துரோணபருவம் பதின்மூன்றும் போர். அபிமனும் இலக்கணகுமரனும் போர் செய்தல்)

## குன்ற வில்லவன்

145 குன்றவில் லவனை ஒக்கும்
குமரனும், பகைகள் ஆறும்
வென்றவில் முனியும், மற்றும்
வேந்தராய் அருகு தொக்கு
நின்றவில் விருதர் யாரும்
நிருபன்மா மதலை ஆவி
பொன்றவில் வளைத்தோன் தன்னைப்
புலிவளைந் தென்னச் சூழ்ந்தார்.

**பொழிப்பு:** மலையை வில்லாக வளைத்த சிவபிரானை ஒத்த அசுவத்தாமனும் ஆறுபகைகளையும் வென்றவனான வில்முனி துரோணனும், ஏனைய மன்னர்களாய் அணித்தே பொருந்தி நின்ற வில்லாகிய விருதுகளை உடைய பலரும் மன்னவனின் சிறந்த மைந்தனை, உயிர் வாங்க வில்வளைத்த அபிமனைப் புலிகள் வளைத்ததைப்போலச் சுற்றிக் கொண்டார்கள்.

**விளக்கம்.** குமரன்: அசுவத்தாமன். பகைகள் ஆறும் வென்ற வில்முனி: துரோணன். பகைகள் ஆறு: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. நிருபன்: சுயோதனன். மதலை: இலக்கண குமரன். வில் வளைத்தோன்: அபிமன்.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். அசுவத்தாமன், துரோணன் முதலியோர் அபிமனை வளைத்தல்)

## கரக வண்புனல் சடைமுடியவன்

146 உரக வெங்கொடித் தரணிபன் அலமரும்
உளம்ம கிழ்ந்திடக் கதிபல படவரு
துரக தம்பிணித்து, அணிகொள்இ ரதமிசை
துவச மும்தொடுத்து, அடல்உடை வலவனை

'விரைவு டன்செலுத் துக'என உரைசெய்து,
விழிசி வந்து,சிற் றிளமதி புனைதரு

கரக வண்புனல் சடைமுடி யவன்அடி
கருதி நின்றுஎடுத் தனன்ஒரு கதையுமே.

**பொழிப்பு:** கொடிய பாம்பைக் கொடியில் தீட்டிக் கொண்ட துரியோதனனின் வருந்திய உள்ளம் மகிழ்ச்சி அடைய, பல கதியில் நடக்கும் குதிரைகளைப் பூட்டி, அழகிய இரதத்தின்மீது தன் கொடியையும் கட்டி, வலிமை வாய்ந்த சாரதியை விரைந்து செலுத்துக எனச் சொல்லிக் கண்சிவந்து சிறிய இளந்திங்களை அணிந்த, கரகத்தில் மொள்ளத்தக்க வளம் பொருந்திய நீரை உடைய கங்கை தங்கிய சடை முடியை உடைய சிவனடியை நினைந்து நின்று ஓர் கதையை கைக்கொண்டான் (சயத்திரதன்)

**விளக்கம்:** உரகம்: பாம்பு. தரணிபன்: துரியோதனன். அலமருதல்: வருந்துதல். துரகதம்: குதிரை. துவசம்: கொடி. வலவன்: சாரதி. கரகம்: மொள்ளும் பாத்திரம்.

(துரோணபருவம். பதின்மூன்றும்போர். சயத்திரதன் கதையைத் தாங்கி அபிமனோடு போர் பொர வருதல்.)

## அரன் வழங்கு பொன்கதை

147 கரம்இ ழந்துமற்று ஒருகரம் மிசைஒரு
கதைகொள் வெஞ்சினக் களிறுஅனை யவன்,இவன்

இரத மும்தகர்த்து உறுகதி யுடன்வரும்
இவுளி யும்துணித்து, அடலுடை வலவனை,

முரணு டன்புடைத்து அணிதுவ சமும்விழ
முதுகு கண்டபின், சரபம்அது எனும்வகை

அரன்வ ழங்குபொன் கதையுடன் அவனியில்
அவனும் முன்குதித்து அடலுடன் முனையவே,

**பொழிப்பு :** கையை இழந்து வேருெரு கையில் ஒரு தண்டை எடுத்து, கொடுங்கோபம் கொண்ட யானையைப் போன்றவனுகிய அபிமன், சயத்திரதனுடைய இரதத்தை நொறுக்கி, விரைந்து வருகின்ற குதிரைகளை வெட்டி, ஆற்றல் வாய்ந்த சாரதியை நையப் புடைத்து, தேரில் கட்டிய கொடியையும் வீழ்த்திப் புறங்கண்டபின், யானைக்குட்டியைப் போல, சிவபிரான் கொடுத்த அழகிய தண்டுடன் நிலத்தில் சயத்திரதன் குதித்து, வலியுடன் போர் செய்ய முற்பட,

**விளக்கம் :** களிறு அனையவன்: அபிமன். இவன், துரியோதனன் மைத்துனன் சயத்திரதன். இவுளி: குதிரை. சரபம்: யானைக்குட்டி.

(துரோணபருவம். பதின்மூன்ரும் போர். அபிமன் சயத்திரதன் போர்)

## சிவனை அஞ்செழுத்து உரைசெய்தான்

148 இவன்ம யங்கிமெய்த் தளர்வுடன் மெலிவுறும்
இறுதி கண்டு,'இனித் தெறுவது கடன்'என,

அவனி கொண்டபற் குனன்மத லையை,அவன்
அருகு வந்துஅடுத்து அணிபுய வலிகொடு,

சிவனை அஞ்செழுத்து உரைசெய்து, தொழுது,ஒரு
சிகர தண்டம்விட்டு எறிதலின், எறிதரு

பவனன் அன்றுநத் தினகிரி எனவிசை
படவி ழுந்ததுஅப் பருமணி மகுடமே.

**பொழிப்பு :** அபிமன் மயங்கி உடல் தளர்ச்சியுற்று இளைத்து நின்ற முடிவைப் பார்த்து, இனி இப்பொழுது இவனை அழிப்பது கடமை என்று, உலகாளும் உரிமை கொண்ட பார்த்தன் மைந்தனுகிய அபிமனை, அவன் பக்கத்தே நெருங்கி, ஆபரணம் அணிந்த தன் தோளாற்றலைக் கொண்டு சிவபிரானைத் திருஐந்தெழுத்தைச் சொல்லி வணங்கி, உயர்ந்த தண்டுப்படையை(சயத்திரதன்)விட்டு எறிந்தவுடன் வீசுகின்ற காற்றுத் தேவன் அந்த நாளில் தாக்கியதால் விழுந்த மலையைப்போல, விரைவாகக் கீழே விழுந்தது (அபிமனின்) பெரிய மணிமுடி தாங்கிய தலை.

**விளக்கம் :** தெறுதல்: அழித்தல். அவனி: உலகம். பற்குனன்: அருச்சுனன். பங்குனித் திங்களிற் பிறந்ததால் இப்பெயர் பெற்றனன் என்ப. சிகர தண்டம்: உயர்ந்த கதை. பவனன்: காற்று. பருமணி மகுடம் என்பது மகுடமணிந்த தலையைக் குறிக்கிறது. அடுத்தபாடல் 'தலைதுணிந்து' எனத் தொடங்குதல் இதனை வலியுறுத்தும்.

(துரோணபருவம். பதின்மூன்றும்போர். சயத்திரதன் கதையால் அபிமன் மாள்தல்)

## சிவாகம உரையின் சாத்தினன்

**149** **என்றுஅரி இயம்பலும்,**
**இருமருங்கினும்**
**நின்றநல் மலர்கொடு**
**நிகர்இல் கேள்வியான்,**
**மன்றல்அம் துழாய்முடி**
**மாயன் மேல்,மனம்**
**ஒன்றியே, சிவாகம**
**உரையின் சாத்தினன்.**

**பொழிப்பு :** என்று கண்ணன் சொன்னவுடன் இருபுறமும் நின்ற நல்ல மலர்களைக்கொண்டு, ஒப்பற்ற கேள்வியறிவு உடையானாகிய பார்த்தன், மணமுள்ள அழகிய துழாய் மாலையை முடியிற்சூடிய திருமாலாகிய கண்ணன்மேல், உளம் பொருந்தச் சிவாகமத்திற் சொல்லியபடி பூசை செய்தான்.

**விளக்கம் :** அரி: திருமால். சிவபூசை செய்யவேண்டுமென்று கூறிய பார்த்தனிடம் 'என்னைப் பூசை செய்; இருவரும் ஒருவரே' என்று கண்ணன்கூற, அருச்சுனன் அப்படியே செய்தான் என்க.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். பார்த்தன் ஏகசிவமப்படி கண்ணனைப் பூசித்தல்)

## ஆலம் முற்றிய களத்து ஐயன்

150 நீலம்முற் றியமலை
இரண்டொடு ஒன்றுபொன்
சீலம்முற் றியமலை
செல்வது என்னவே,
ஆலம்முற் றியகளத்து
ஐயன் வெள்ளிஅம்
கோலம்முற் றியமலை
குறுகி னன்அரோ.

**பொழிப்பு:** நீலம் முதிர்ந்த இரண்டு மலையோடு தங்க நிறம் முதிர்ந்த ஒரு மலை செல்வதுபோல, நஞ்சு பொருந்திய கண்டத்தை உடைய ஐயன் வாழும் பேரழகு முதிர்ந்த வெள்ளிமலையை அணுகினன், (கருடன்)

**விளக்கம்:** ஆலம்: நஞ்சு. களம்: கழுத்து. ஐயன்: சிவன். அம் கோலம்: மீமிசை. இரண்டு சொல்லுக்கும் அழகு என்பதே பொருள். அரோ. அசை. கருடன் கண்ணனையும் பார்த்தனையும் சுமந்து கைலையை அடைந்தான். கண்ணனும் பார்த்தனும் நீலநிறமுடையாராதலின் நீலமலை என்றும் கருடன் பொன்னிறமுடையான் ஆதலின் இரண்டு நீலமலையுடன் ஒரு பொன்மலை சென்றது என்றும் கூறப்பட்டது என்க.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். கண்ணனையும் பார்த்தனையும் சுமந்து கருடன் கைலை சேர்தல்)

## அறம்புரி அம்மை கூற்றினன்

151 மாற்றினல் விளங்குபொன்
வடிவன் வெஞ்சிறைக்
காற்றினல் விசைஉறக்
கழன்று போயின;
ஆற்றினல் அறம்புரி
அம்மை யோடுஒரு
கூற்றினன் வரைபடி
கோண்டல் ஏழுமே.

பொழிப்பு: மாற்றுயர்ந்து விளங்குகின்ற பொன் மேனிக் கருடனின் விரும்பத்தக்க சிறகுகளில் தோன்றும் காற்றினுல் வேகமாகப் பறந்துபோய் விட்டன, முறைப்படி அறம் செய்கின்ற அம்பிகையை ஓர் பங்கில் கொண்ட சிவ பிரானின் கைலைமலையில் படிந்திருந்த ஏழு மேகங்களும்.

விளக்கம்: பொன் வடிவன்: கருடன். கூற்றினுன்: பகுதியை உடையவன். வரை: கைலைமலை.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். கருடன் சிறைக்காற்றுல் மேகங்கள் பறந்தன)

## காண்தகு சடைமுடிக் காலகாலன்

152 பாண்டவ சகாயன்வூர்
பறவை யின்குலத்து
ஆண்தகை இருசிறகு
அசையும் ஓதையால்
காண்தகு சடைமுடிக்
கால காலன்மெய்ப்
பூண்டன பணிகளும்,
புரண்டு வீழ்ந்தவே.




பொழிப்பு: பாண்டவர்களுடைய உதவியாளனுன திருமால் செலுத்துகின்ற பறவைக் கூட்டத்தில் சிறந்த ஆண் தன்மைமிக்க கருடனின் இரண்டு சிறகுகளும் அடிக்கும் காற்றுல், காணத்தக்க சடைமுடி உடைய காலனுக்குக் காலனுன சிவபெருமானின் உடம்பில் அணிந்த பாம்புகளெல் லாம் புரண்டு வீழ்ந்தன.

விளக்கம்: பாண்டவர் சகாயன்: கண்ணன். ஓதை: காற்று. பணி: பாம்பு.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். கருடன் சிறகுக் காற்றுல் சிவன் அணி பாம்புகளும் வீழ்தல்)

## நறைமலர் இதழிசேர் நாதன்

153 நிறைமதி நிகர்என
நிறத்த வெள்ளிஅம்

பொறைமலை திசைதொறும்
பொழியும் வாள்நிலா,

நறைமலர் இதழிசேர்
நாதன் வார்சடைப்

பிறைமதி நிலவினும்
பிறங்க வீசுமால்.

**பொழிப்பு:** நிறைந்த திங்களை ஒத்த நிறம் வாய்ந்த அழகிய வெள்ளிமலை, திக்குகள் தோறும் சொரிகின்ற ஒளி பொருந்திய நிலவானது, தேன்கொண்ட கொன்றைமாலையை அணிந்த சிவபிரானின் நீண்ட சடையிலுள்ள இளந்திங்கள் வீசுகின்ற நிலவைவிட, விளங்கித் தோன்றும்.

**விளக்கம்:** நிறைமதி: முழுத் திங்கள். பொறை, மலை, இரண்டும் மலை என்னும் பொருளன. நறை: தேன். இதழி: கொன்றை. நாதன்: சிவன்.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். கைலைமலையின் ஒளி)

## சங்கரன் மணிவரை

154 சங்கரன் மணிவரைச்
சாரல் மாருதம்,

திங்களின் நிலவுஉமிழ்
செங்கர் வேணிமேல்

கொங்குஅவிழ் செழுமலர்க்
கொன்றை வாசமும்

கங்கைநுண் துவலையும்,
கலந்து, வீசுமால்.

**பொழிப்பு:** சிவபிரானுடைய அழகிய மலைச்சாரலில் வீசும் இளங்காற்று, மதியின் நிலவைக் கக்குகின்ற சிவந்த சடையின்மீது உள்ள மணம் பரப்பும் செழுமையான கொன்றைப் பூவின் வாசனையையும் கங்கையின் சிறிய துளியையும் சேர்த்து அடிக்கும்.

**விளக்கம்:** மாருதம்: காற்று. செக்கர்: சிவப்பு. கொங்கு: மணம். துவலை: நீர்த்துளி.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். கைலைக் காற்றின் சிறப்பு.)

## அந்திவான் நிறத்தவன்

155 செந்திரு மடமயில்
கேள்வன் சென்றமை,
அந்திவான் நிறத்தவன்
அறிந்து, முன்னமே
நந்தியும் உரைசெயக்
கேட்டு, 'நன்று'எனப்
புந்தியால் மகிழ்ந்து,எதிர்
போந்து புல்லினன்.

**பொழிப்பு:** இளமயில் போன்ற திருமகளின் மகிழ்நனுகிய கண்ணனின் வரவை, அந்திவான் போன்ற செந்நிறமுடைய சிவபிரான் அறிந்து, முன்னே நந்திதேவனும் அவன் வரவைச் சொல்லக்கேட்டு, 'நல்லது' என்றுசொல்லி. உள்ளக் களிப்புடன் எதிர்சென்று தழுவிக்கொண்டான்.

**விளக்கம்:** செந்திரு: திருமகள். கேள்வன்: கணவன், புல்லுதல்: தழுவுதல்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். கண்ணனைச் சிவன் வரவேற்றுத் தழுவுதல்.)

## பவள மேனியான்

156 ஆங்குஓர்ஆ சனத்திடை
இருத்தி ஐயனை,

பாங்கினுல் வினவினுன்,
பவள மேனியான்;

ஈங்குஇவன் பிறந்ததும்,
இளைத்த பார்மகள்

தீங்குஅறப் புரிதரு
செயலும், யாவுமே.

**பொழிப்பு:** அவ்விடத்து ஓர் இருக்கையில் அமரச் செய்து ஐயனுகிய கண்ணனை, முறைப்படி கேட்டான் பவள மேனியானுகிய சிவபிரான்: ஈங்கு இவன் பிறந்த விதமும் நொந்துபோன பூமகளின் தீங்கு நீங்க இவன் செய்கின்ற காரியங்களும் பிறவும்.

**விளக்கம்:** ஐயன்: கண்ணன். பவள மேனியான் சிவன். இவன்: பார்த்தன்.

(துரோண பருவம். பதின்மூன்ரும் போர். சிவனுக்குக் கண்ணன் பார்த்தனைப் பற்றிப் பகர்தல்.)

## கிரீசன் என்னும் தேசவர்

157 கேசவன் புரிவுஎலாம்
கிரீசன் என்னும்அத்

தேசவன் தெளிவுறச்
செப்பி விட்டபின்,

வாசவன் புதல்வனை
'வருக' என்றலும்,

பாசஅன் புடன்அவன்
பணிந்து, போற்றினுன்.

**பொழிப்பு:** திருமால் நிகழ்ச்சிகளை எல்லாம் மலைத் தலைவன் என்னும் அந்த ஒளிமிக்கவன் தெளியுமாறு சொன்ன பிறகு, இந்திரன் மைந்தனாகிய பார்த்தனை ‘வருக’ என்று அழைக்க, பாசத்தோடு கூடிய அன்புடன் பார்த்தன் சிவனைப் பணிந்து வணங்கினான்.

**விளக்கம்:** கேசவன்: கண்ணன். புரிவு: செயல்: கிரீசனும், தேசவனும் சிவன். வாசவன்: இந்திரன்.

(துரோண பருவம். பதின்மூன்றாம் போர். சிவன் அருச்சுனனை அழைத்தல்.)

## காய்கனல் வண்ணன்

158 கண்ணன்மேல் அணிமலர்
அனைத்தும் காய்கனல்

வண்ணன்மேல் காண்டலும்,
மனம்க ளிப்புறு,

‘எண்ணின்மேல் இரண்டுஎன
இலது’என்று அவ்விறல்

அண்ணல்மே னியும்புளகு
அரும்பி னான்அரோ.

**பொழிப்பு:** கண்ணன்மீது தான் முன்னே அருச்சித்து அணிந்த பூ முழுதும் காய்கின்ற நெருப்பு மேனியனை சிவன்மீது கண்டு, அதனால் மனம் களித்து, ஆராயுமிடத்து இரண்டு என்பது இல்லை, என அந்த வலிமை வாய்ந்த அண்ணலாம் அருச்சுனன் உடல் புளகாங்கிதம் எய்தினான்.

**விளக்கம்:** விறல் அண்ணல்: விசயன். முன்னே கண்ணனை வழிபட்டுத் தான் அணிந்த மலர்களெல்லாம் கைலையில் இருக்கும் சிவன்மீது கண்டு களித்து, அரியும் அரனும் ஒருவனே என எண்ணினான் அருச்சுனன்என்க.

*“செங்கண் நெடியான்மேல்*
*தேர்விசயன் ஏற்றியபூ*
*பைங்கண்வெள் ஏற்றான்தாள்*
*கண்டற்றால்”*

என்பது முத்தொள்ளாயிர வெண்பாப் பகுதி.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். பார்த்தன் கண்ணன்மீது தான் இட்ட பூக்களைச் சிவன்மேல் கண்டு மகிழ்தல்.)

## நின்றதொர் தூணிடை வந்தனே!

159 என்றலும் ஈசன் நகைத்துஉரை
செய்தனன்; 'யான்என நீஎனவேறு
அன்று;இவை யாவும் அளித்திடு
தற்குனை அல்லது வல்லவர்யார்?

நின்றதுஓர் தூணிடை வந்தனை!
யானைமுன் நின்றனை! கஞ்சனையும்
கொன்றனை! மன்அவை யூடுஉரி
யப்பல கூறை கொடுத்தனையே!

**பொழிப்பு:** என்று கூறலும்: சிவபிரான் சிரித்துக் (கண்ணனைப் பார்த்துப்) பேசினன்: "நானும் நீயும் வேறு அல்லவே; இவ்வெல்லாவற்றையும் அளித்தற்கு உன்னைத் தவிர வல்லவர் யார் இருக்கின்ருர்? நின்ற ஓர் தூணினின்றும் நீ தோன்றினுய்! யானைக்கு முன்நின்று அருள் செய்தாய்! கஞ்சனை மாய்த்தாய்! வேந்தர் சபையிலே (துரோபதையைத்) துகில் உரியப் பல ஆடைகளை அளித்தாய்!"

**விளக்கம்:** தூணிடை வந்தது இரணியனை மடிக்க. யானை முன் நின்றது முதலையை அழிக்க. கூறை: ஆடை.

(துரோணபருவம். பதின்மூன்றும்போர். கண்ணன் பெருமையைச் சிவன் பாராட்டல்)

## முக்கணன் சிலையுடன் வாளி

160 ஆயிடை நின்ற கிரீடியை
முக்கணன், அங்குஒரு பொய்கையிலே,
'போய்இடை மூழ்கு'என, அப்புன
லூடுஓர் புயங்கம் எழுந்தது;அதன்
வாயிடை வந்தனன், மாண்உரு
வாய்ஒரு மாமுனி; அம்முனி,அச்
சேயிடை நீரில் எடுத்தனன்,
மற்றுஒரு சிலையுடன் வாளியுமே.

**பொழிப்பு :** அவ்விடத்து நின்ற விசயனைச் சிவன், அங்கு உள்ள ஒரு தடாகத்திலே 'போய்க் குளி' என்று சொல்ல, அந்நீரிலே ஓர் பாம்பு புறப்பட்டது; அப்பாம்பின் வாயினின்றும் சிறந்த வடிவத்துடன் ஒரு உயர்ந்த முனிவன் தோன்றினன்; அந்த ஆழமான நீரில் நின்றும் அம்முனிவன் ஒரு வில்லும் அம்பும் எடுத்தான்.

**விளக்கம் :** கிரீடி: அருச்சுனன். புயங்கம்: பாம்பு. மாண்உரு: மாட்சிமைப்பட்ட வடிவம். சிலை:வில். வாளி: அம்பு.

(துரோணபருவம். பதின்மூன்ரும் போர். சிவன் அருச்சுனனைப் பொய்கையில் மூழ்கச் செய்து அம்பும் வில்லும் எடுக்கச் செய்தல்)

## உருத்திர மாமறை

161 முப்புரம் நீறுஎழு நாளின்
இயற்றிய முட்டியும், நல்நிலையும்,

அப்புர சூதனன் ஏவலின்,
அந்தணன் அமரர்பி ரான்மதலைக்கு

ஒப்புர வோடு பயிற்றி,
இதம்கொடு உருத்திர மாமறையும்

செப்பின ஞல்;அவை பெற்றனன்,
வென்று செயத்திர தன்,தெறுவான்.

**பொழிப்பு :** திரிபுரம் தீப்பற்றிய காலத்துச் செய்த அம்பு பற்றும் விதமும், அம்பு விடும் வழியும் அந்தச் சிவன் ஆணையின்படி அந்தணன் ஒருவன், இந்திரன் மைந்தனுகிய அருச்சுனனுக்கு உதவியாகப் பயில்வித்து, இங்கிதமாக உருத்திர மந்திரத்தையும் சொல்லிக்கொடுத்தான்; அவற்றைச் செயத்திரதனை வென்று அழிக்கும் பொருட்டுப் பெற்றுக் கொண்டான் பார்த்தன்.

**விளக்கம்:** முட்டி: படை பிடிக்கும் முறை. நிலை: படை விடும்முறை. பரசூதனன்: சிவன். ஏவலின்: பணியின்படி. தெறுதல்: அழித்தல்.

(துரோணபருவம். பதின்மூன்ரும்போர். சிவன் ஆணையின்படி அந்தணனிடம் பார்த்தன் படை பெறுதல்)

## உமை ஒரு கூறுடையோன்

162 'யாதுஒரு போது நினைந்தனை,
அவ்வழி எய்தும்உ னக்குஇவை'என்று

ஓதி,அ நேக வரங்கள்
கொடுத்தபின், உமைஒரு கூறுஉடையோன்,

'பூதல மாதுஇடர் தீர
அருஞ்சமர் புரிதொழில் முற்றியபின்,

சீதர! நின்பதம் மேவுக'
என்றுஅருள் செய்து விடுத்தனனே.

**பொழிப்பு:** 'எந்தச் சமயத்தில் நீ எண்ணுகின்றாயோ அப்போது இவை உனக்குக் கிடைக்கும்' என்று சொல்லி, உமையை உடம்பில் ஒரு பகுதியில் உடைய சிவன், பல வரங்களைக் கொடுத்த பிறகு, 'பூமடந்தையின் துயரம் நீங்க அரிய போர் செய்யும் காரியம் முடிந்த பிறகு, திருமகள் கேள்வனே! நின்பதவியை அடைக' என்று (கண்ணனைப் பார்த்து) அருள் செய்து அனுப்பினான்.

**விளக்கம்:** பூதல்மாது: பூமிதேவி. இடர்: பாரம். சீதரன்: திருமகளை மார்பில் அணிந்த திருமால். பதம்: வைகுண்ட பதவி.

(துரோணபருவம். பதின்மூன்றாம் போர். சிவன் பார்த்தனுக்கும் கண்ணனுக்கும் விடை கொடுத்தல்)

## புண்ணியன் மால்வரை

163 எண்ணிய காரியம் எய்தி,
இறைஞ்சிய இந்திரன் மாமகனும்,

திண்ணிய நேமி வலம்புரி
வாள்கதை சிலையுடை நாயகனும்,

புண்ணியன் மால்வரை நின்று,உர
காரி புயங்களும் வன்கரமும்

நண்ணிய காலையில், வெள்ளி
எழுந்தது, ஞாயிறு எழும்திசையே,

**பொழிப்பு:** நினைத்த காரியம் கைகூடி வணங்கிய இந்திரன் மைந்தன் பார்த்தனும், திண்மையான சக்கரம், சங்கு, வாள், தண்டு,வில் என்னும் ஐம்படைகளை உடைய நாயகனாகிய கண்ணனும், புண்ணியனுடைய பெரிய மலையில் நின்றும் கருடனுடைய தோள்களிலும் வலிய கரங்களிலும் வந்து பொருந்தியபோது, கிழக்குத் திசையில் வெள்ளி முளைத்தது.

**விளக்கம்:** புண்ணியன்: சிவன். உரகாரி: கருடன், உரக, அரி உரகாரி என்று ஆயிற்று. உரகம்: பாம்பு. உரகாரி: பாம்பை வென்றவன். கருடன் தோள்களிலும், கைகளிலும் கண்ணனும் பார்த்தனும் வந்து அமர்ந்தனர் என்க.

(துரோணபருவம். பதின்மூன்ரும்போர். கண்ணனும் பார்த்தனும் மீண்டு வருதல்)

## பசுபதி

**164** இங்குஇவர் மூவரும் ஏகினர்
மீளும்முன் எறிமுர சக்கொடியோன்,
அங்குஉரை யாடியது உரைசெயின்
மண்மிசை யார்விய வாதுஒழிவார்?
பங்குனன் ஓதிய வஞ்சின-
-மும்,பசு பதியிடை ஏகியதும்,
கங்குலின் ஏவினன், 'உரைசெய்க'
என்று, கடோற்கச மீளியையே.

**பொழிப்பு:** இங்கு இம்மூவரும் ஏகினர்; இவர்கள் திரும்புதற்கு முன், முரசம் ஒலிக்கின்ற கொடியை உடைய வனாகிய தருமன், அவ்விடத்து உரைத்த செய்தியைச் சொன்னால் உலகத்திலே வியப்படையாதிருக்கக் கூடியவர் யார் உளர்? பார்த்தன் உரைத்த சபதத்தையும், அவன் சிவபெருமானிடம் சென்றதையும், சொல்க எனக் கடோற்கசனென்னும் வலிமை மிக்கவனை, இரவில் தூது அனுப்பினான்.

**விளக்கம்:** மூவர்: கண்ணன், பார்த்தன், கருடன். இங்கு: இவ்விடத்து. முரசக் கொடியோன்: தருமன். கங்குல்: இரவு. மீளி: ஆற்றல் உடையான்.

(துரோணபருவம். பதின்மூன்றும்போர். தருமன் துரியோதனனிடம் கடோற்கசனைத் தூது அனுப்புதல்)

## கயிலைபுக்கு அரன் கணைபெற்றான்

165 கயிலைபுக் கதும், அரன்
கணையும் சாபமும்,
வியன்மலர்ப் பொய்கையும்,
விசயற்கு ஈந்ததும்,
புயல்எனக் கரியமெய்ப்
பூந்து ழாயவன்
துயில்உணர் குரிசிலுக்கு
அடைவில் சொன்னபின்,

**பொழிப்பு:** கயிலைக்குச் சென்றதும், சிவபிரான் அம்பும் வில்லும் விரிந்த மலர்ப் பொய்கையிடத்து விசயற்குக் கொடுத்ததும், மேகம்போல் கருமேனி உடைய துழாய்மாலை அணிந்த கண்ணன், துயில் எழுந்த தருமனிடம் முறையாகச் சொன்ன பின்னர்,

**விளக்கம்:** கணை: அம்பு. சாபம்: வில். வியன்: விரிந்த. புயல்: மேகம். மெய்: உடம்பு. குரிசில்: தருமன். அடைவு: முறையாக.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். கண்ணன் தருமனிடம் கைலை நிகழ்ச்சியைக் கூறுதல்)

## கங்காநதிக்கு ஒரு பதி

166 அரியதண் கலைவாள் மதியமும் கொதிகொள்
ஆலமும் தனதுஇடத்து அடக்கி,
உரியஒண் கங்கா நதிக்குஒரு பதியாய்
உரைபெறும் உயர்மகோ ததியின்

பரியதிண் சிலேயோடு அம்புஎலாம் முகந்து,
பற்குனப் பொருப்பிடைப் பொழியும்
கரியபைம் புயலைக் கைதொழும் அவரே
கருவிலே திருவுடை யவரே.

**பொழிப்பு:** அருமையான குளிர்ந்த கலைகள் பொருந்திய ஒளியுள்ள திங்களையும், வெம்மை கொண்ட விடத்தையும் தன்னுள் அடக்கிக்கொண்டு, உரிமை உடைய ஒளிவீசும் கங்கையாற்றுக்கு ஒரு தலைவனுகிய புகழ்பெற்ற உயர்ந்த கடல் அனைய சிவனிடத்து, பருத்த வலிய வில்லோடு கணைகளை எல்லாம் மொண்டு பார்த்தன் என்ற மலையின்மீது சொரியும், கருமைநிறம் வாய்ந்த பசிய மேகத்தை வணங்குகின்றவர் பிறவிச் செல்வம் உடையவர் ஆவார்.

**விளக்கம்:** இப்பாடல் சிலேடை அணி. சிவபிரானுக்கும் கடலுக்கும் உவமை. கடலில் தோன்றிய திங்களையும் நஞ்சையும் தன்னிடத்தே அடக்கிக் கொண்டான் சிவன். கங்கையாற்றுக்குக் கடல் பதி. கங்காதேவிக்குச் சிவன்பதி. சிவபெருமானிடம் இருந்த வில்லையும் கணையையும் அள்ளி, பற்குன மலையிலே பொழிந்தது கண்ணன் என்னும் கரிய பைம்புயல். கடலைக் குறிக்குங்கால் சிலை: கடலிலுள்ள அரதனக்கற்கள். அம்பு: நீர். முகந்து: மொண்டு. ஆலம்: விடம். உரை: புகழ். மகோததி: கடல். பற்குனப் பொருப்பு: பற்குனனுகிய மலை. கருவிலே திருவுடையவர்: பிறப்பிலேயே செல்வம் பெற்றவர். சிவனுகிய கடலில் சிலையோடு அம்பெலாம் முகந்து பொருப்பிடைப் பொழியும் புயல் என முடிக்க.

(துரோணபருவம். பதினுன்காம் போர். கடவுள் வாழ்த்து)

## ஈசன்

167 ஈச னல்வ ரங்கள்பெற்ற
இந்தி ரன்தன் மதலைகாம்-
-போசன் ஆதி எண்இல்மன்னர்
பொருதுஅ ழிந்து வெருவிஉள்
கூச நாலு பாலும்நின்ற
நின்ற சேனை கொன்றுபோய்,
பாச நாம அணியில்நின்ற
வீர ரோடு பற்றினன்.

**பொழிப்பு:** சிவபெருமானிடம் வரங்கள் பெற்றுவந்த இந்திரன் மைந்தனுகிய கிரீடி, காம்போச நாட்டு மன்னன் உள்பட எண்ணற்ற அரசர்கள் போர் செய்து தோற்று அஞ்சி உள்ளே கூச்சமடைய, நாலுபக்கத்திலும் அணிவகுத்து நின்ற படைகளையெல்லாம்அழித்து, சூசிகாவியூகம் என்ற பெயரை உடைய அணியைத் துளைத்துச் சென்று அவ்வணியில் நின்ற வீரர்களோடு மோதினுன்.

**விளக்கம்:** காம்போசம்: ஒரு நாடு. வெருவி: அஞ்சி. பாச நாம அணி: ஊசியைப்போல் படைகளை வகுத்து நிறுத்தும் ஒழுங்கு.

(துரோண பருவம். பதினுன்காம் போர். ஊசியூக அணியை ஊடுருவிப் பார்த்தன் நுழைதல்)

## அரவாபரணன்

168 'விரவார்முனை அடுதேர்நுக
வெவ்வாசிகள் புனல்உண்டு,
உரவாவிடில், ஓடாஇனி'
என்றுஐயன் உரைப்ப,
அரவாபர ணன்தந்தருள்
அருமாமறை வருணச்
சரவாய்வர எய்தான்; அவண்
எழலுற்றது, ஓர் தடமே.

**பொழிப்பு:** மாற்ருர் போரை வெல்லத்தக்க தேரின் நுகத்தில் பூட்டிய கொடிய குதிரைகள் நீருண்டு வலி பெரு விட்டால் இனி ஓடமாட்டா எனக் கண்ணன் கூறப், பாம்புகளணிந்த சிவன் தந்த அரிய சிறந்த மந்திரத்தை வருணன் கணையில் பொருந்தச் சொல்லிச் செலுத்தினுன்; அவ்விடத்து ஓர் நீர்நிலை தோன்றியது.

**விளக்கம்:** விரவார்: பகைவர்கள். நுகம்: நுகத்தடி. வாசி: குதிரை. புனல்: நீர். உரவுதல்: வலிபெறுதல். ஐயன்: கண்ணன். அரவாபரணன்: சிவன். சரம்: அம்பு. அவண்: அவ்விடத்து.

(துரோணபருவம். பதினுன்காம் போர். குதிரைகள் அருந்தப் பார்த்தன் வருணன் அம்பால் தடாகம் உண்டாக்குதல்)

## விறல் குன்ற வில்லி

169 கைத வன்குலக் கன்னிகேள்
வனும்ஒரு கணைக்குஒரு கணையாக

எய்து வெங்கணை யாவையும்
விலக்கி,மேல் இரண்டுநால் எட்டுஅம்பால்,

வெய்தின் நேமிஅம் தேரொடு
கொடிகளும் வில்லும்வா சியும்விழக்

கொய்து, கொய்து,பல் பவுரிவந்
தனன்,விறல் குன்றவில்லியொடு ஒப்பான்.

**பொழிப்பு:** பாண்டியனுடைய குலத்தில் தோன்றிய கன்னியின் கணவன் ஓரம்புக்குமேல் ஓரம்பு செலுத்தி, மாற்றாரின் கொடிய அம்புகள் எல்லாவற்றையும் தடுத்து, மேலும் அறுபத்து நான்கு அம்புகளைச் செலுத்தி விரைந்து (மாற்றரசரின்) சக்கரங்கள் பொருந்திய இரதத்தோடு கொடிகளும், விற்களும், குதிரைகளும் வீழுமாறு அறுத்து அறுத்துப் பல இடத்தும் மண்டலமிட்டு வந்தனன், ஆற்றல் வாய்ந்த மலை வில்லியாகிய சிவனை ஒத்த அவ்விசயன்.

**விளக்கம்:** கைதவன்: சித்திராங்கத பாண்டியன். கன்னி: சித்திராங்கதை. கேள்வன்: அருச்சுனன். இரண்டு நாலெட்டு: அறுபத்து நான்கு. வெய்தின்: விரைவாக. பவுரி: வளைந்து வருதல். குன்றவில்லி: சிவன்.

*'குன்ற வில்லியை மெல்லிய லோடு*
*கோலக் காவினில் கண்டுகொண் டேனே.*

என்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

(துரோண பருவம். பதினுன்காம் போர். விசயனின் வில்லாற்றல்)

## திரிபுர தகனன்

170 மிகந கைத்தும்,
வெறுத்தும், திரிபுர

தகனன் ஒத்த
சமீரணன் மாமகன்,

முகன்உ றச்சென்று
மூரிவில் வாங்கி,மேல்

இகல்மி றக்கணை
ஏவினன் என்பவே.

பொழிப்பு: பெரிதும் சிரித்தும் வெறுத்தும் முப்புரம் எரித்த சிவனை ஒத்த காற்றின் சிறந்த மைந்தனாகிய வீமன் போர் முகத்திற் பொருந்திச் சென்று வலிய வில்லை வளைத்து, (விகன்னன்) மீது ஆற்றல் வாய்ந்த பளபளக்கும் கணை ஒன்றை விடுத்தான், என்று சொல்லுவார்கள்.

விளக்கம்: சமீரணன்: வாயு தேவன். மூரி: வலிமை. வாங்கி: வளைத்து. மேல்: விகன்னன் மீது. விகன்னன் என்பவன் துரியோதனன் தம்பிகளுள் ஒருவன். அவன் தம்பிகளுள்ளும் நல்லவன் ஒருவன் உண்டு என்று காட்டியவன். எனவே, மனமின்றி அவனைக்கொன்று தீரவேண்டிய கட்டாயத்திற்காக வீமன் கொன்றானாதலின், 'நகைத்தும் வெறுத்தும்' என்று கூறப்பெற்றது. கவியும் விகன்னன் மீது அம்பு விட்டமை பொருமலேயே 'என்று சொல்லுவார்கள்' என்று கூறுவாராயினர். இவ்வாறே தருமன் காடு சென்றபோது'

'சென்றனன் என்ப மன்னோ
செழுநிலம் உடைய கோமான்'

என்று கூறுவார் வில்லிபுத்தூராழ்வார்.

(துரோணபருவம். பதினான்காம் போர். வீமன் விகன்னன் மீது அம்பு எய்தல்.)

## புரத்தினை எரித்தவர் கயிலை

171 'புரத்தினை எரித்தவர் கயிலை மாக்கிரி
புயத்தினில் எடுத்துஇசை புனைப ராக்ரமன்
வரத்தினில் வனத்திடைத் திரியும் நாள்,சில
மனித்தரொடு எதிர்க்கவும் வயிரி ஆய்த்திலன்;
உரத்துடன் மருச்சுதன் உதவு இராக்கதன்
ஒருத்தனும், எனைப்பல ருடனும் ஏற்று,எதிர்
துரத்தலின், மறத்தினன் இவன்'என ு,பலர்
துதித்து,அதி சயித்தனர்; சுரரும் வாழ்த்தியே.

**பொழிப்பு:** முப்புரத்தை எரித்த சிவபெருமானின் பெரிய கைலைமலையைத் தோளில் தூக்கிப் புகழ்பெற்ற ஆற்றல் வாய்ந்த இராவணன் வரத்தினால் காட்டிலே சில மனிதர் திரிந்த நாள், அவரை எதிர்க்கும் வயிரி ஆனான் அல்லன்; ஆற்றலுடன் காற்றின் மைந்தனான வீமன் பெற்ற அரக்கன் கடோற்கசன் ஒருத்தன் ஏனைப் பலரையும் எதிர்த்துத் துரத்தலின் இவன் ஆற்றல் மிக்கவன் எனப் பலரும் அதிசயித்துத் துதித்தார்; தேவரும் வாழ்த்தினர்.

**விளக்கம் :** புனை பராக்ரமன்: இராவணன். சில மனித்தர்: இராமஇலக்குவர். வயிரி ஆய்த்திலன்: ஆற்றல் வாய்த்தவன் ஆனானல்லன். உரம்: வலிமை. மருச்சுதன்: காற்றின் மைந்தன். இராக்கதன்: கடோற்கசன்.

(துரோணபருவம். பதினான்காம் போர். கடோற்கசனின் பேராற்றல்.)

## முனித்தலை கிள்ளிய பினாகபாணி

172 முன்இயல் நாளக் கோயில்
முனிநடுத் தலையை முன்னம்
கிள்ளிய பினாக பாணி,
கிரீசனொடு ஒத்த வீரன்,

துள்ளிய பரித்தேர்த் திட்டத்-
-துய்மனது அம்பு சென்று,

தள்ளியது அப்போது, அந்தத்
தவமுனி தலையை அந்தோ!

**பொழிப்பு:** முள் பொருந்திய தண்டை உடைய தாமரையைக் கோயிலாகக் கொண்ட பிரமதேவனின் நடுவிலிருந்த தலையை அந்த நாளில் கிள்ளி எடுத்த வில்லாளியாகிய மலையில் வாழும் ஈசனோடு ஒத்த வீரனை துள்ளி ஓடும் குதிரைகள்பூட்டிய தேரை உடைய திட்டத்துய்மனுடைய கணைபோய், அந்தத் தவமுனிவனை துரோணனுடைய தலையை அப்போது அறுத்துத் தள்ளியது; ஐயோ!

**விளக்கம்:** முள்: தாமரைத் தண்டிலுள்ள முள். நாளம்: தாமரைத் தண்டு. பிரமன் தலையில் ஒன்றைச் சிவன் கிள்ளினன் என்பது கதை. பினாகம்: சிவன் கையிலுள்ள வில்லின் பெயர். பாணி: கையை உடையவன். கிரீசன்: மலை வாழும் ஈசனாகிய சிவன். வீரன்: திட்டத்துய்மன். அவன் துரோபதையின் அண்ணன். தவமுனி: துரோணன். அந்தோ என்பது கவியின் இரக்கத்தைக் காட்டுகின்றது.

(துரோணபருவம். பதினைந்தாம்போர். துரோணன் தலையைத் திட்டத்துய்மன் அறுத்தல்)

## பாசுபத வாளி

173 விட்ட வெம்பகழி நாணி மீளுதலும்
வில்லின் வேதம்உணர் முனிமகன்,

வட்ட வெஞ்சிலையின் மீது பாசுபத
வாளி வைப்பது மனம்செயா,

முட்ட வன்பினொடு நின்ற காலையில்,
வியாதன் என்றுஉரைகொள் முனிவரன்,

தொட்ட தண்டும்மிதி அடியும் ஆகி,உயர்
சுருதி வாய்மையொடு தோன்றினன்.

**பொழிப்பு:** செலுத்திய கொடிய அம்பு வெட்கித் திரும்புதலும் வில்லின் நூல்கற்ற முனிமகனுகிய அசுவத்தாமன், தன்னுடைய வட்டமான கொடிய வில்லின்மீது பாசுபதப் படையைப் பொருத்த உளம் கொண்டு (தந்தை மீது கொண்ட பாசம்) தன்னை முட்ட வலிமையாக நின்றபொழுது, வியாதன் என்ற புகழ்வாய்ந்த இருடிகேசன், தூக்கிய கோலுடன் நடையன் அணிந்து சிறந்த மறை பொழிகின்ற வாயுடன் எதிர்ப்பட்டான்.

**விளக்கம்:** நாணி: வெட்கி. உரை: புகழ். சுருதி: மறை.

(துரோணபருவம். பதினைந்தாம் போர். அசுவத்தாமன் முன் வியாதன் தோன்றுதல்.)

## புராரியே அனையான்

**174** சுரர்உ லோகம்ம கிழ்ந்துஅ
ணைந்த, துரோணன் மாமகன்மேல்
வருச தாகதி மகனை
நால்இரு வாவி ஏவி,வெகுண்டு,
இரதம் நேமி குலைந்து,
சூதனெடு இவுளி நாலும்விழ,
பொருது சீறினன் முன்ப
யந்த புராரி யேஅனையான்.

**பொழிப்பு:** தேவலோகத்தைக் களித்துச் சேர்ந்த துரோணனது சிறந்த மகனுகிய, தன்னை முன்னே பெற்ற சிவனை ஒத்த அசுவத்தாமன், தன்மீது எதிர்த்துவந்த காற்றின் மைந்தனுகிய வீமன் மீது சினந்து எட்டு அம்புகளை ஏவி வீமனுடைய தேர்ச் சக்கரம் ஒடிந்து பாகனேடு குதிரை நான்கும் பட்டு விழுமாறு போர் செய்து சீறினன்.

**விளக்கம் :** துரோணன் வானுலகத்தை மகிழ்ந்து அணைந்தான் என்றவாறு. சதா கதி: காற்று. நேமி: தேர் உருளை. சூதன்: தேர்ப்பாகன். இவுளி: குதிரை. புராரி: சிவன். சிவனின் வீரியத்தில் தோன்றியவன் அசுவத்தாமன் என்பது கதை.

(கன்னபருவம். பதினாறும் போர்ச் சருக்கம். வீமன்மீது அசுவத்தாமன் மோதல்.)

## கருங் களத்தவன்

175 ஒருங்குஅளப் பரிய பதாகினிக் குழாமும்,
உயிர்க்குஉயி ரானதம் பியரும்,
அருங்களக் கனிகொள் வண்ணனும், தானும்,
அறன்அருள் அறனுடை அரசன்,
பெருங்களப் பரப்பின் அணிபெற அணிந்து,
பேர்உலகு உய்யுமாறு இருண்ட
கருங்களத் தவனைக் காசினித் தேர்மேல்
கண்டென, காணுமா நின்றான்.

**பொழிப்பு :** ஒன்று கூட்டி எண்ணமுடியாத சேனைக் கூட்டமும் உயிருக்குயிரான தம்பிமாரும் அரிய களாப்பழத்தை ஒத்த நிறம் கொண்டவனான கண்ணனும் தானும் தரும தேவதை பெற்ற அறனுக்கு உரிய மன்னன், பெரிய விரிந்த போர்க்களத்தில் அழகாக அணிவகுத்துப் பெரிய உலகம் கடைத்தேறுதற்கு நஞ்சைக் கழுத்தில் வைத்துக்கொண்டு கறுத்த கழுத்தை உடைய சிவனை, உலகமாகிய தேரின்மீது கண்டதைப் போல, காணத் தக்கவாறு நின்றான்.

**விளக்கம் :** பதாகினி: சேனை. தம்பியர்: வீமன் முதலிய நால்வர். கனிகொள் வண்ணன்: கண்ணன். கருங்களத் தவன்: சிவன். போர்க்களத்தில் அணிவகுத்துத் தருமன் நின்ற காட்சி, பூமித் தேர்மேல் சிவன் நின்றதை ஒத்தது என்க.

(கன்னபருவம். பதினேழாம் போர். போர்க்களத்தில் தருமன் நின்ற சிறப்பு.)

## கல்வணக்கிய முக்கண்ணினன்

176 செல்வ ணக்கிமேல் கீழ்எ னும்பெரும்
திசைஇ ரண்டினும் திகழும் விற்கள்போல்
வில்வ ணக்கி,அவ் இருவ ரும்பொரும்
வெஞ்ச மத்தில்வி மனை,உ ரத்தினும்,
மல்வ ணக்குதோ ளினும்இ லக்குஇலா
வாளி ஏவினன் ஓளி யாகவே;
கல்வ ணக்கிமுப் புரம்எ ரித்தமுக்
கண்ணி னன்வலக் கண்அ ளித்துளான்.

**பொழிப்பு:** மேகத்தால் வளைக்கப்பெற்று மேல்கீழ் என்று சொல்லத்தக்க இருபெரும் திசைகளிலும் விளங்கு கின்ற வானவிற்களைப்போல் விற்களை வளைத்து, வீமன் கன்னன் ஆகிய அவ்விருவரும் பொருதிய கொடிய போரில், வீமனை மார்பிலும் மற்போர் வல்ல தோளினும் குறிவைத்து அளவிலா அம்புகளை வரிசையாகச் செலுத்தினான்; கல்லை வளைத்து முப்புரத்தை எரித்த மூன்றுகண் படைத்த சிவபிரானின் வலக்கண்ணாக அமைந்த சூரியனால் பெறப் பெற்ற கன்னன்.

**விளக்கம்:** செல்: மேகம். விற்கள்: வானத்தில் தோன்றும் வன்ன விற்கள். உரம்: மார்பு. ஓளி: வரிசை. கல்: மேரு மலை. வணக்கி: வளைத்து. சிவபிரானின் வலக் கண் சூரியன்.

கன்ன பருவம். பதினேழாம் போர். வீமனும் கன்னனும் போர் புரிதல்.)

## அண்டர் குலபதி

177 அண்டர் குலபதி யாம்விடை வாகனன்,
அம்பொன் அடிமலர் நாறிடு சேகரன்;
எண்தி சையும்மனு நீதிசெய் கோலினன்;
எங்கும் ஒருகுடை யால்இடு நீழலன்;

மண்டு கிரணசி காமணி மோலியன்;
வண்டு மதுநுகர் தாதகி மாலையன்;
மிண்டு முதுபுலி ஏறுப தாகையன்;
வென்றி வளவனை யார்நிகர் வீரரே?

**பொழிப்பு:** தேவர்கள் கூட்டத்துக்குத் தலைவனும் விடை ஏறும் சிவபிரானின் அழகிய பொன்னனைய திருவடிப்பூ மணக்கின்ற முடி உடையவன்; எட்டுத் திக்குகளிலும் மனு முறை செலுத்துகின்ற செங்கோலுடையவன்; எங்கும் ஒப்பற்ற குடைநிழற்றும் இயல்பினன்; நெருங்கிய ஒளியுள்ள சிறந்த மணிகள் அழுத்திய கிரீடத்தை உடையவன்; வண்டுகள் தேனைக்குடிக்கின்ற ஆத்தி மாலையை அணிந்தவன்; திமிறுகின்ற பழைய புலி பொறிக்கப்பெற்ற கொடியை உடையவன்; வெற்றிக்கு உரிய சோழனை ஒத்தவர் யார் உளர்?

**விளக்கம்:** அண்டர்: தேவர். தாதகி: ஆத்திப்பூ. பதாகை: கொடி. வளவன்: சோழன்.

(கன்னபருவம். பதினேழாம் போர். சோழனின் சிறப்பு.)

## ஈசன் மாமதலை

178 எய்தஅப் பகழி ஒன்றால்
ஈசன்மா மதலை மாழ்கி,
வெய்துயிர்த்து இரத மீது
வீழ்ந்தனன்; வீழ்ந்தோன் தன்னைக்
கைதவச் செயலி னன்துச்
-சாதனன் கண்டு, முன்னைச்
செய்தவப் பயன்போல் வந்து,
தேரொடும் கொண்டு போனன்.

**பொழிப்பு:** எய்த அந்த ஓர் அம்பால் ஈசனுடைய சிறந்த மகனாகிய அசுவத்தாமன் வருந்தி, பெருமூச்சு விட்டுத் தேரின்மீது வீழ்ந்தான்; வீழ்ந்த அவனை வஞ்சனையில் வல்லவனான துச்சாதனன் பார்த்து முன்னே செய்த தவப் பயனைப்போல வந்து தேரோடும் கொண்டு சென்றான்.

**விளக்கம்:** ஈசன்மா மதலை: அசுவத்தாமன். வெய் துயிர்த்து: பெருமூச்சுவிட்டு. கைதவம்: வஞ்சகம்.

(கன்னபருவம். பதினேழாம் போர். மயங்கி வீழ்ந்த அசுவத்தாமனைத் துச்சாதனன் கொண்டு செல்லல்.)

## சங்கரன் அருளால் வந்த குமரன்

179 சங்கரன் அருளால் வந்த
சதுர்மறைக் குமரன் மீள,

பொங்குஅழல் கடவுள் என்ன,
பொருசிலை வெய்தின் வாங்கி,

மங்குல்போல் பொழியும் வாளி
மழையினால் அழிந்தது அந்தோ!

செங்கயல் நெடும்ப தாகைத்
தென்னவன் செம்பொன் தேரே.

**பொழிப்பு:** சிவபிரான் கருணையால் தோன்றிய நான்கு மறைகளிலும் வல்ல அசுவத்தாமன் திரும்பப் பொங்கி வருகின்ற நெருப்புக் கடவுள் போலப் போர்வில்லை விரைந்து வளைத்து, மேகத்தைப்போல் சொரிகின்ற அம்பு மழையால், செவ்விய மீன் தீட்டிய நீண்ட கொடியை உடைய பாண்டியனின் செம்பொன்னாலாகிய இரதம் சிதைந்தது, ஐயோ!

**விளக்கம்:** குமரன்: அசுவத்தாமன். வெய்தின்: விரைந்து. மங்குல்: மேகம். கயல்: மீன். பதாகை: கொடி. தென்னவன்: பாண்டியன்.

(கன்னபருவம். பதினேழாம்போர். பாண்டியன் தேரை அசுவத்தாமன் அழித்தல்.)

## புராரி ஆதியாம் இறையவர்

180 புகல்அரு மறையவன்
புராரி ஆதியாம்
திகழ்ஒளி இமையவர்
சிறப்பின் ஈந்தன,

இகல்முனை முனைஉற
எதிர்ந்து தள்ளவே,

அகல்வெளி புதைத்தன,
அம்பும் அம்புமே.

**பொழிப்பு:** சொல்லுதற்கரிய மறையவனுகிய பிரமன், புரத்தை எரித்த சிவன் முதலிய ஒளிமிக்க தேவர்கள் சிறப்பாகக்கொடுத்த (இருதிறத்தார்) அம்பும் அம்பும் போர்க்களம் தோறும், ஒன்ருேடொன்று எதிர்த்துக்கொள்ள அகன்ற வெளிகளை மூடிவிட்டன.

**விளக்கம்:** மறையவன்: பிரமன். புராரி: சிவன். இகல் முனை: போர்க்களம்.

(கன்னபருவம். பதினேழாம் போர். இரு வகையாரின் கடும் போர்.)

## பிறைமுடிச் சடையவன்

181 பிறைமுடிச் சடையவன்
பிள்ளை, வள்உகிர்

விறலுடைப் புலிக்கொடி
வீரன் மெய்எலாம்,

புறவினுக்கு அரிந்தநாள்
போல மேல்விடும்

திறலுடை வாளியால்
சிவப்பித் தான்அரோ.

**பொழிப்பு:** திங்கள் சூடிய சடையை உடைய சிவபிரானின் மைந்தன் அசுவத்தாமன், கூரிய நகத்தை உடைய வலிமை வாய்ந்த புலி தீட்டிய கொடியை உடைய வீரனுகிய சோழனின் உடம்பு முழுவதும் புருவுக்குத் தன் தசையை அரிந்து அந்தநாள் கொடுத்த சோழன் உடம்பைப்போல மேலே செலுத்திய வலிமை வாய்ந்த அம்பினுல் சிவக்கச் செய்தான்.

**விளக்கம்:** சடையவன்: சிவன். பிள்ளை: அசுவத்தாமன்' வள்: கூர்மை. உகிர்: நகம். விறல்: வலி. வீரன்: சோழன். மெய்: உடம்பு. புறவு: புரு. அரிந்த: வெட்டிக்கொடுத்த. புறவுக்குத் தசையை அரிந்து கொடுத்தவன் சிபிச்சக்கரவர்த்தி என்னும் சோழன்.

*'எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்*
*புள்ளுறு புன்கண் தீர்த்தோன்'*

என்று இளங்கோவடிகளும்,

*'புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க*
*பெருந்தகை'*

எனக் கவிச்சக்கரவர்த்தியும், சிபிச்சக்கரவர்த்தியைப் பாராட்டுவர். இச்சோழன் அவன் வழி வந்தவன் என்க.

(கன்னபருவம். பதினேழாம் போர். சோழன் உடம்பை அசுவத்தாமன் துளைத்தல்.)

## உருத்திரன் தாதுவின் உற்பவித்தவன்

182 உருத்திரன் தாதுவின்
உற்ப வித்தவக்
கருத்துடை முனிவன்மெய்
கலங்கி வீழ்தலும்,

திருத்தகு சகுனியும்
சிற்சில் வேந்தரும்,

வருத்தமோடு எடுத்து,அவன்
வருத்தம் மாற்றினர்.

**பொழிப்பு :** சிவபிரானின் வீரியத்தில் தோன்றிய அந்தக் கருத்துள்ள முனிவனும் அசுவத்தாமன் உடல் சோர்ந்து வீழ்ந்தவுடன் செல்வத்தை ஆக்கவல்ல சகுனியும் சிற்சில மன்னர்களும் வருத்தத்தோடு அசுவத்தாமனை எடுத்து அவன் களைப்பை மாற்றினார்கள்.

**விளக்கம் :** உருத்திரன்: சிவன். முனிவன்: அசுவத் தாமன், சகுனி தன் மருமகனுக்குச் சூதில் பாண்டவர் செல் வத்தைக் கவர்ந்து கொடுத்தானாதலின் 'திருத்தகு சகுனி' என்றார் போலும்.

(கன்னபருவம். பதினேழாம் போர். அசுவத்தாமனின் அயர்ச்சியை அகற்றல்.)

## சிவனொடும் அமர்புரி தெவ்வர்

183 அவனொடும் மீளவந்து,
அபயன் தன்னொடு,
கவனமான் தேருடைக்
காவல் மன்னவர்,
சிவனொடும் அமர்பொரும்
தெவ்வர் என்னவே,
துவனிசெய் முரசுஎழ,
துன்று போர்செய்தார்.

**பொழிப்பு :** அசுவத்தாமனொடும் திரும்பவந்து சோழ னோடு விரைந்து செல்லுகின்ற குதிரை பூட்டிய தேரை உடைய உலகாளும் மன்னர்கள் சிவனோடு போர்செய்யும் பகைவர்களைப்போல ஒலியை எழுப்புகின்ற முரசம் முழங்க நெருங்கிய போர் செய்தார்கள்.

**விளக்கம் :** அபயன்: சோழன். கவனம்: விரைவு. மான்: குதிரை. தெவ்வர்: பகைவர். துவனி: ஒலி. துன்று: நெருங்கிய.

(கன்னபருவம். பதினேழாம் போர். சோழனுடன் பல மன்னரும் போர் செய்தல்.)

## கிரீசனும் அரியும்

184 ‘ சுரிமு கங்களில், பேர்இயங் களில்எழு
துவனி யால்பகி ரண்டம்
நெரியும்!’ என்றுஅயன் அஞ்சினன்; ‘சேனையின்
நெருக்கி னல்எலைத்து உள்ள
கிரிக ளும்சரிந் திடும்!’என அஞ்சினன்;
கிரீச னும்;கிளர் ஆழி
அரியும் அஞ்சினன், ‘ தூளியால் அலைகடல்
அடைய வற்றிடும் என்றே.’

**பொழிப்பு :** சங்கங்களினுலும், பெரிய இசைக் கருவிகளாலும் உண்டாகின்ற ஓசையினல் உலகமே நெரிந்துவிடுமோ என்று பிரமன் பயந்தனன்; படைகளின் நெருக்கத்தால் எங்குமுள்ள மலைகளும் சாய்ந்துவிடுமோ எனச் சிவன் அஞ்சினுன்; விளங்குகின்ற ஆழியானுகிய திருமாலும் எழுகின்ற தூசியால் அலைகடல் முழுதும் வற்றிவிடும் என்று அச்சமடைந்தான்.

**விளக்கம் :** சுரிமுகம்: சங்கு. இயம்: இசைக்கருவி. துவனி: ஓசை. அயன்: பிரமன். கிரீசன்: சிவன். ஆழிஅரி: திருமால். ஆழி: சக்கரம், கடல் இரண்டுக்கும் பொருந்தும். படைக்கின்ற பிரமன் உலக அழிவுக்கு அஞ்சினுன். மலையுறையும் சிவன் மலைச்சரிவுக்கு அஞ்சினுன். கடலில் பள்ளி கொண்ட திருமால் கடலழிவுக்கு வருந்தினுன் என்க.

(கன்னபருவம். பதினேழாம் போர். படைகளின் பெருக்கம்.)

## கிரிசன் மைந்தன்

185 கிரிசன் மைந்தனும், கிருபனும்
கிருதவன் மாவும்,
வரிபொ லங்கழல் சகுனியும்,
முதலிய மறவோர்

எரியும் வெங்கனல் கண்ணினர்
எயில்எனச் சூழ,

தெரியும் வாளி,வன் சிலையுடைக்
கன்னனும் சென்ருன்.

**பொழிப்பு:** சிவன் மைந்தனுகிய அசுவத்தாமனும், கிருபனும், கிருதவன்மனும், வரிந்து கட்டிய அழகிய வீரச் சிலம்பை அணிந்த சகுனியும் உள்ளிட்ட வீரர்கள் நெருப்பைக் கக்குகின்ற கொடிய கண்ணை உடையவர்களாய்க் கோட்டையைப்போல் தன்னைச் சூழ்ந்துவர, அம்புகள் ஆய்ந்து தொடுக்கும் வன்மையுடைய சிலையைக் கையிலேந்திக் கன்னன் (போர்க்களம்) புக்கான்.

**விளக்கம்:** கிரிசன்: சிவன். கிரீசன் என்பதன் சிதைவு. மறம்: வீரம். எயில்: கோட்டை. தெரிதல்: ஆராய்தல். வாளி: அம்பு.

(கன்னபருவம். பதினேழாம் போர். கிருபாசாரியன் அசுவத்தாமன் முதலியோர் புடைசூழச் சேனைத் தலைவன் கன்னன் போர்க்களம் புகுதல்.)

## நிமலர்க்கு நிகர்வோர்

186 நிலைஇ ரண்டில்உற நின்றநிம
லர்க்கு நிகர்வோர்

மலைஇ ரண்டினை வளைத்துஎதிர்
மலைந்தது எனவே,

அலைஇ ரண்டுஎன அதிர்ந்துபொரும்
அவ்இ ருவர்கைச்

சிலைஇ ரண்டும்நிமி ராது,கணை
சிந்தி னர்களே.

**பொழிப்பு:** இரண்டு படியாகப் பொருந்திநின்ற மலமற்ற இருவர்க்கும் நிகராக நின்ற இருவரும் இரண்டு மலைகளை வளைத்துப் போர் செய்ததுபோல இரண்டு கடல்களை ஒத்துக் கடும்போர் புரியும் அவ்விருவரும் கைவிற்கள் இரண்டும் நிமிராது அம்புகளைப் பொழிந்தார்கள்.

**விளக்கம்:** இரண்டு படியாக நின்ற நிமலர்: ஒருவர் சிவன்; மற்றொருவர் திருமால். நிகர்வோர்: பார்த்தன், கன்னன் ஆகிய இருவர். அலை: கடல். சிலை: வில். கணை: அம்பு. பார்த்தன் கன்னன் ஆகிய இருவரும் சிவனையும் திருமாலையும் நிகர்த்தனர் என்க. இப்பாடலில் நான்கு வரிகளிலும் இரண்டாவது சொல்லாக இரண்டு வந்திருப்பது ஓர் அணி.

(கன்னபருவம். பதினேழாம் போர். பார்த்தனும் கன்னனும் சிவனையும் திருமாலையும் நிகர்த்து நிற்றல்.)

## அரனும் என

187 நரநாரணர் சென்று தராபதிதாள்
நளினத்தில் விழுந்து,ஒரு நாயகமா
வரன்ஆம்அவ னைப்புனை தேர்மிசையே
வைத்துத்துனி மாறிடு மாறுஉரைசெய்து,
'அரனும்என நீஅணி நின்றிட,யாம்
அனல்அம்புஎன ஓடி இமைப்பிடை,முப்
புரமேஅகம் ஆய தயித்தியரின்
பொருவோன்உயிர் கைக்கொடு போதுவமே.

**பொழிப்பு:** பார்த்தனும் கண்ணனும் போய்த் தருமனின் திருவடித் தாமரையில் வீழ்ந்து, ஒரு தலைவனாகிய மேலான அவனை, அலங்கரித்த இரதத்தில் வைத்து, அவன் கோபம் தணியுமாறு பேசி, சிவபெருமான்போல நீ போர் அணியில் நிற்க, நாங்கள் தீயைக் கக்கும் அச்சிவன் அம்புபோல ஓடிக் கணப்பொழுதில், முப்புரத்தை இடமாகக்கொண்ட அசுரர்களைப்போலப் போர் செய்யும் கன்னனின் உயிரைக் கொண்டு வருகின்றோம்; (என்று) இயம்பினர்.

**விளக்கம்:** நரன்: பார்த்தன். நாரணன்: கண்ணன். தராபதி: தரைக்குத் தலைவனாகிய தருமன். நளினம்: தாமரை. துனி: கோபம். தயித்தியர்: அசுரர். பொருவோன்: கன்னன்.

(கன்ன பருவம். பதினேழாம் போர். பார்த்தனும் கண்ணனும் தருமனை வணங்கிக் கன்னனை மாய்க்கப் போர்க்களம் புகுதல்.)

## காமனை வென்ற நுதல் கண்

188 தாமங்களின் வைப்புஅருள் காளையும்,அச்
சரகூடம் அறுத்துஅணி தானையொடும்,

வீமன்சு ெநடும்பொரு கின்றமைதன்
விழிகண்டு களித்திட வில்விசயன்,

காமன்தனை நீறுஎழ வென்றநுதல்
கண்போல்எரி கின்ற கருத்துடனே,

மாமந்தர வெற்புஅன தேர்கடவும்
வலவன்தனொடு ஆகவம் மன்னினனே.

பொழிப்பு: ஒளிகளின் இருப்பிடமாகிய சூரியன் பெற்ற காளையாகிய கன்னனும், அந்த அம்புப் பந்தரை அறுத்துத் தள்ளி, அணிவகுத்த சேனையோடு வீமனும் போர் செய்கின்ற தன்மையைத் தன்கண்கள் கண்டு களிக்க, வில்லேந்திய விசயன், மன்மதனைச் சாம்பராகுமாறு எரித்த சிவனுடைய நெற்றிக் கண்ணைப்போல எரிகின்ற எண்ணத்துடனே, சிறந்த மந்தரமலையை ஒத்த இரதத்தைச் செலுத்துகின்ற சாரதியாகிய கண்ணனோடும் போர்க்களம் புகுந்தான்.

விளக்கம்: தாமம்: ஒளி. தாமங்களின் வைப்பு: சூரியன். காளை: கன்னன். நுதல்: நெற்றிக் கண்.

(கன்ன பருவம். பதினேழாம் போர். கன்னன் வீமன் சண்டையைக் கண்டு களித்து அருச்சுனன் அமர்க்களம் அடைதல்.)

## பிறைமா மவுலிப் பரமன்

189 உரம்மந்தர வெற்பினும் மிக்கபுயத்து
உரவோன்,உளம் வெஞ்சினம் ஊறிஎழ,

பிரமன்கணை ஏவுத லும்,சமனூர்
பின்னேன்முடு கிப்பிறை மாமவுலிப்

பரமன்கணை ஏவினவ்; அக்கணை அப்
பகவன்கணை நீறு படுத்துதலின்,

சரம்அங்குஅவை வேறு தொடுத்திலர்.கைத்
தனுவும்குனி வித்திலர் தார்முடியோர்.

**பொழிப்பு:** வலிமை வாய்ந்த மேருமலையினும் மேம்பட்ட தோள்வலி உடைய கன்னன் உள்ளத்திலே கொடுங்கோபம் மிக்குஎழ, பிரமன் அம்பைத் தொடுத்தவுடன் அவனுக்கு இணையான தம்பி பார்த்தன் விரைந்து, திங்கள் சூடிய சிறந்த முடியை உடைய சிவபிரான் அம்பை விடுத்தான்; அந்தப் பகழி அந்தப் பிரமன் அம்பை எரித்துத் தள்ளியதால் வேறு அம்பு எதையும் விட்டாரல்லர்; கைவில்லையும் வளைத்தாரல்லர் மாலையை அணிந்த முடியை உடைய கன்னன் பார்த்தன் இருவருமே.

**விளக்கம்:** உரம்: வலிமை. மந்தரவெற்பு: மேருமலை. புயத்துஉரம்: தோள் ஆற்றல். சமனுர்: சமமான. பின்னேன்: தம்பி. பரமன்: சிவன். பகவன்: பிரமன். சரம்: அம்பு. தனு: வில். குனிவித்தல்: வளைத்தல்.

(கன்ன பருவம். பதினேழாம் போர். கன்னனும் பார்த்தனும் கடும்போர் புரிதல்.)

## அவுணர் ஊர் நீறுசெய் வீரன்

190 சென்று போர்புரி அளவையின்,
அருச்சுனன் செழுமணி முழுநீலக்

குன்று போல்நிறம் பவளவான்
குன்றுஎனக் குருதியின் சிவப்புஏற,

ஒன்று போல்வன பிறைமுகக்
கடுங்கணை ஒருபது தொடுத்திட்டான்

வென்று போர்புரி அவுணர்ஊர்
நீறுசெய் வீரன்மைந் தனைஒப்பான்.

**பொழிப்பு:** பார்த்தன் சென்று போர் புரிந்த போது அவனுடைய கொழுகொழுத்த அழகிய முழுநீல மலைபோன்ற

நிறம் பெரிய பவள மலைபோல இரத்தத்தினால் சிவப்பு ஏறு மாறு, ஒன்றைப்போன்ற பிறைமுகத்தைஉடைய கடுமையான அம்புகள் ஒருபத்தை, போர்செய்த அவுணர்களின் முப்புரத்தை வென்று நீருக்கிய வீரனும் சிவபிரானின் மைந்தன் முருகக்கடவுளை ஒத்த அசுவத்தாமன் செலுத்தினான்.

**விளக்கம்:** வீரன் சிவபெருமான் மைந்தனை ஒப்பான் என்றமையால் மைந்தன் கந்தக்கடவுள் என்க. பார்த்தன் நீலமேனியைப் பத்து அம்புகளைவிட்டுக் குருதி தோய்ந்த செம்மேனியாக்கினான் அசுவத்தாமன் என்றவாறு.

(சல்லிய பருவம். பதினெட்டாம் போர். அருச்சுனன் அசுவத்தாமன் கடும்போர்.)

## ஈறிலார் புரம் எரித்தவன்

191. வீறு சால்அருள் அறத்தின்மகன் அப்பொழுது
வேறுஓர் தேர்மிசை குதித்துஇமய வெற்பினிடை
ஏறு கேசரியொடு ஒத்துஉளம் நெருப்புஉமிழ,
ஈறுஇ லார்புரம் எரித்தவன் நிகர்க்குமென
மாறுஇ லாதஒரு சத்தியை எடுத்து,நெடு
வாயு ஆநஎன விட்டனன்; இமைப்பொழுதில்
ஆறு பாய்அருவி முக்குவடு இறுத்தசெயல்
ஆன தால்முனைகொள் மத்திரன் முடித்தலையே.

**பொழிப்பு:** பெருமைமிக்க கருணையே வடிவான அறத்தின் மைந்தனாகிய தருமன், அப்பொழுது மற்றொரு இரதத்தில் தாவி, இமயமலையில் ஏறுகின்ற சிங்கத்தைப்போல மனம் நெருப்பைக்கக்க முடிவில்லாத ஆற்றல் வாய்ந்த அவுணர்களின் முப்புரத்தை எரிசெய்த சிவன் என்று சொல்லுமாறு தப்பாத ஒரு வேலை எடுத்து, சூறாவளிக் காற்றைப்போல் செலுத்தினான்; கணப்பொழுதில் அருவி ஆறாகப் பாய்கின்ற முச்சிகரத்தை ஒடித்த செய்கைபோலப் போர்முனையில் நின்ற மத்திரநாட்டுத் தலைவன் சல்லியனின் முடித்தலை சிந்தி வீழ்ந்தது.

**விளக்கம்:** வீறு: பெருமை. அறத்தின் மகன்: தரும ராசன் மைந்தன். கேசரி: சிங்கம். சத்தி: வேல். நெடுவாயு: சூறுவளிக்காற்று. குவடு: சிகரம். மத்திரன்; சல்லியன்.

(சல்லிய பருவம். பதினெட்டாம் போர். சல்லியன் தலையைத் தருமன் துணித்தல்.)

## கயிலை வடிவுடையோன்

192 எனத்தருமன் வார்த்தை தனக்கு
இசையாமல் அவன்ஏக,
அனைத்துவரு தினிகளொடும்,
ஐவரும்ஆங்கு உடன்ஏக,
கனத்தில்வடிவு உடையோனும்
கைலைவடிவு உடையோனும்,
வினைத்தடங்தேர் விதுரனொடும்
விரைவுடன்ஏ கினர்அம்மா!

**பொழிப்பு:** என்று தருமன் சொல்லிய பேச்சுக்கு உட்படாமல், துரியோதனன் செல்ல, எல்லாச் சேனைகளோடும் பாண்டவர்கள் உடன்செல்ல, மேகத்தின் வடிவம்போன்றவனாகிய கண்ணனும் வெள்ளிமலையின் உருவம் போன்றவனாகிய பலராமனும் போர்த்தொழிலுக்கு ஏற்ற விசாலமான தேரை உடைய விதுரனோடும் விரைவுடனே சென்றார்கள்.

**விளக்கம்:** அவன்: துரியோதனன். வரூதினி: சேனை. கனம்: மேகம். பலராமன் வெள்ளை நிறத்தவனாதலின் கைலை வடிவு உடையோன் என்று சொல்லப்பெற்றது.

(சல்லிய பருவம். பதினெட்டாம் போர். இறுதிப் போருக்கு இருதிறத்தாரும் சமந்த பஞ்சகத்தை அடைதல்.)

## நான்முகன் ஆதிய மூவர்

193 மேவு சிங்க, வியாள, விலோதனர்
வீசு கின்ற கதாரவம் மேலிட,
வாவு வெம்பரி ஆதப னும்,தடு
மாறி நின்றனன்; வானவர், தானவர்

நாஅ டங்கினர்; மாமுனி வோரொடு
நாகர் அஞ்சினர்; நான்முகன் ஆதிய
மூவ ரும்செயல் ஏதுஎன நாடினர்;
மோழை கொண்டது மூடிய கோளமே.

**பொழிப்பு:** பொருந்திய சிங்கக் கொடியும் பாம்புக் கொடியும் உடையவர்களாகிய வீமனும் துரியோதனனும் எறிந்துகொள்கின்ற தண்டின் ஓசைமேல் எழ, தாவுகின்ற கொடிய குதிரையை உடைய சூரியனும் தடுமாறி நின்றனன்; தேவர்களும் அசுரர்களும் வாயடங்கிவிட்டனர்; சிறந்த இருடிகளோடு நாக நாட்டினரும் அச்சமடைந்தனர்; பிரமன் முதலிய மும்மூர்த்திகளும் என்ன செய்வதென்று ஆராய்ந்தனர்; அண்ட கோளம் பிளவுபட்டது.

**விளக்கம்:** மேவு: பொருந்திய. வியாளம்: பாம்பு. விலோதனம்: கொடி. விலோதனத்தை சிங்கத்துடனும் வியாளத்துடனும் கூட்டுக. வீமனுக்குச் சிங்கக்கொடி; துரியோதனனுக்குப் பாம்புக்கொடி. கதா அரவம்: தண்டாயுதத்தின் ஓசை. தானவர்: அசுரர்.

(சல்லியபருவம். பதினெட்டாம் போர். வீமனுக்கும் துரியோதனனுக்கும் இறுதிப் போர்.)

## உமை பத்தா

194 பூசுரர் பெருந்தகை பரித்தா மா,இரியல்
போனகிரு பன்,கிருத பத்மா மூவரும்முன்
வாசவன் விரிஞ்சன்உமை பத்தா மாயன்,முதல்
வானவர் வழங்கிய வயப்போர் வாளிகளின்
ஆசுகன் மகன்தனையுர், அப்போ தேதுணைவர்
ஆனவரை யும்தலை துணிப்பான் நாடி,அவர்
பாசறை புகுந்தனர் பரித்தேர் யானையொடு,
பாரதம் முடிந்தபதி னெட்டாம் நாள்இரவே.

பொழிப்பு: அந்தணர்கள் பெருந்தகையாகிய அசுவத்தாமா உடைந்துபோன கிருபன், கிருதபத்மா ஆகிய மூவரும் முன்னே இந்திரன், பிரமன், சிவன், திருமால் முதலிய தேவர்கள் கொடுத்த வெற்றிப்போர் அம்புகளினால் வீமனையும் அவன் துணைவர்களையும் தலையைக் கொய்வான் எண்ணிக் குதிரை, தேர், யானையோடு பாரதம் முடிந்த பதினெட்டாம் நாள் இரவே அவர்கள் பாடி வீட்டுக்குள் நுழைந்தனர்.

விளக்கம்: பரித்தாமா: அசுவத்தாமா. வாசவன்: இந்திரன். விரிஞ்சன்: பிரமன். உமை பத்தா: சிவன். மாயன்: திருமால். வயம்: வெற்றி. ஆசுகன்: காற்றுத்தேவன். மகன்: வீமன்.

(சல்லிய பருவம். பதினெட்டாம் போர். அசுவத்தாமன் முதலியோர் பாண்டவரை அழிக்கப் பாசறை புகுதல்.)

## தெரிவை பங்கன்

195 எண்ணிய கருமம் முடியினும் முடியாது,
ஒழியினும், ஈசனைத் தொழுதல்
புண்ணியம் எனுமாறு உன்னி,ஆங்கு ஒருதண்
பொய்கையில் புனல்படிந்து ஏறி,
பண்இயல் இசையின் படிவமாம் தெரிவை
பங்கனைப் பங்கய மலர்கொண்டு,
அண்ணிய கருத்தில் இருத்திஅஞ்சு எழுத்தால்
ஆகமப் படிஅடி பணிந்தான்.

பொழிப்பு: எண்ணிய காரியம் கைகூடினும் கூடாது போயினும் கடவுளை வணங்குதல் புண்ணியம் என எண்ணி, அவ்விடத்து ஒரு குளிர்ந்த தடாகத்திலே குளித்து வந்து, இயலிசை வடிவமான அம்மை அப்பனைத் தாமரைப் பூக்கொண்டு வழிபட்டு, பொருந்திய கருத்தில் அமைத்து, அவன் ஐந்தெழுத்தைச் சொல்லி ஆகம முறைப்படி தொழுதான் (அசுவத்தாமன்.)

விளக்கம்: ஈசன்: சிவபெருமான். தெரிவைபங்கனும் அவனே. பங்கயம்: தாமரை. அண்ணிய: பொருந்திய. அஞ்செழுத்து: சிவாயநம.

(சௌப்திகபருவம். பதினெட்டாம் போர். அசுவத்தாமன் அம்மைஅப்பன் அடிபணிதல்.)

## நீறுடை ஏறுடைக் கடவுள்

196 அன்றுஅவன் மறையின் முறையினுல் புரிந்த
அருச்சனை தனைஉவந் தருளி,
நின்றனன், விழியும் இதயமும் களிப்ப
நீறுடை ஏறுடைக் கடவுள்;
வல்திறல் முனிவன் மதலையும் விதலை
மாறி,'மாறு அடர்ப்பதுஓர் படைநல்கு!'
என்றனன்; என்ற உரைமுடி வதன்முன்
ஏதிஒன்று ஈசனும் ஈந்தான்.

**பொழிப்பு:** அன்று அந்த அசுவத்தாமன் மறையின் முறைப்படி செய்த வழிபாட்டை மகிழ்ச்சியோடுஏற்று அருளி, கண்ணும் மனமும் களிப்ப நீறு அணிந்த ஏறூர்ந்த கடவுள் நின்ருன்; வலிய ஆற்றல் வாய்ந்த முனி மகனுகிய அசுவத் தாமனும் நடுக்கம் நீங்கிப் பகையை அழிக்கத்தக்க ஓர் படையை ஈக என்று கேட்டான். அவன் கேட்டு முடிவதன் முன்னமேயே வாள் ஒன்றை ஈசன் அருளினுன்.

**விளக்கம்:** நீறுடை ஏறுடைக் கடவுளும் ஈசனும் சிவனே. மதலை: அசுவத்தாமன். விதலை: நடுக்கம். மாறு: பகை. ஏதி: வாள்.

(சௌப்திக பருவம். பதினெட்டாம் போர். அசுவத் தாமன் பூசையை ஏற்றுச் சிவன் வாள் அருளினுன்.)

## பவளப் பருப்பதம்

197 பாதிமெய் நீலம் ஆகிய பவளப்
பருப்பதம் விருப்புடன் அளித்த
ஏதிபெற்று, உவகை யுடன்இமைப்பு அளவின்,
இருந்தஅவ் வீரரும் தானும்

விதிகொள் பாடி விடுஉற, பூதம்
மீளவந்து அடர்ந்து,இவன் கரத்தில்
ஆதிநல் கியவெம் படையினுல் அஞ்சி,
ஆவிகொண்டு ஓடியது அன்றே.

**பொழிப்பு:** பாதி உடம்பில் நீலநிறம் கொண்ட பவளமலை விருப்பொடு கொடுத்த வாட்படையைப் பெற்றுக் களிப்புடன் கண்மூடித் திறப்பதற்குள் அசுவத்தாமன் உடன் இருந்த வீரரோடு பெரிய பாசறையை அடைய, பூதமானது திரும்பவந்துமோதி அசுவத்தாமன் கையிலிருந்த ஆதியாகிய சிவன் கொடுத்த கொடிய படையைக் கண்டு பயந்து உயிர் தப்பி ஓடிவிட்டது.

**விளக்கம்:** பருப்பதம்: சிவன். ஏதி: வாள். வீதிகொள் பாடிவீடு: விரிவான பாசறை. ஆதி: சிவன். அன்றே, அசை.

(சௌப்திக பருவம். பதினெட்டாம் போர். பாடி வீட்டில் அசுவத்தாமன் கை வாளைக்கண்டு பூதம் அஞ்சி ஓடியது.)

## பின்னிய சடையோன்

198 பொன்னிநல் நதியும் நேரிஅம் பொருப்பும்
புகார்எனும் நகரியும் படைத்த
சென்னியும், அவன்தன் சேனையின் விதமும்,
சேனைமண் டலிகருர், சேர,
முன்னிய சிலைக்கை முனிமக னுடன்போய்,
மோதி,அவ் வேதியால் மடிந்தார்;
பின்னிய சடையோன் வழங்கிய படைமுன்,
பிழைத்தவர் யாவரே, பிழைத்தார்?

**பொழிப்பு:** நல்லகாவிரி ஆற்றையும், அழகிய நேரிமலையையும், புகார் என்னும் நகரத்தையும் பெற்ற சோழனும், அவன் சேனைக்கூட்டமும், சேனைத்தலைவர்களும் ஒருசேர, வில்லைக் கையிலேந்தி நின்ற அசுவத்தாமனுடன் போய் முட்டி, அவன்கையிலிருந்த சிவன்தந்த வாளால் மாண்டனர்; பின்னல் போட்ட சடையை உடைய சிவன் வழங்கிய படை முன் எதிர்த்து நின்றவர் யார் தப்பினர்?

**விளக்கம்:** பொன்னி: காவிரி. நேரிமலை: சோழனுக் குரியமலை. புகார்: காவிரிப்பூம்பட்டினம். சென்னி: சோழன். மண்டலீகர்: தலைவர். முனிமகன்: அசுவத்தாமன். ஏதி: வாள். சடையோன்: சிவன். முதல் பிழைத்தல், நிற்றல்; இரண்டா வது பிழைத்தல், தப்புதல்.

(சௌப்திக பருவம். பதினெட்டாம் போர் அசுவத்தாமன் கை வாளால் சோழன் படையொடு மாளல்)

## சிவபெருமான்தனை நினைந்து தவம்செய்தார்

199 புரிதவத்திற்கு ஆனவனம் கிருபனுக்கும்,
துரோணமுனி புதல்வன் ஆன

துரகததா மனுக்கும்அமைத்து, 'இவ்வழிநீர்
இருந்திர்'எனச் சொன்ன பின்னர்,

கிருதனுக்கு விடைகொடுத்தான்; இவரும்அவன்
மொழிப்படியே கிரிசூழ் கானில்,

தருநிலத்தோர் அதிசயிப்ப, சிவபெருமான்
தனைநினைந்து, தவம்செய் தாரே.

**பொழிப்பு:** தவம் செய்தற்கு ஏற்ற கானம் கிருபாச்சாரி யனுக்கும் துரோணமுனி புதல்வனான அசுவத்தாமனுக்கும் அமைத்துக் கொடுத்து, 'இவ்விடத்து நீங்கள் இருங்கள்' என (வியாத முனிவன்) சொன்ன பிறகு, கிருதன் என்பவ னுக்கு விடை கொடுத்தான்; கிருபன் அசுவத்தாமன் ஆன இருவரும் வியாதன் சொற்படியே மலைசூழ்ந்த அவ்வனத்தில் வானவரும் வியப்பெய்த, சிவபெருமானை எண்ணித் தவம் புரிந்தனர்.

**விளக்கம்:** கிருபன், அசுவத்தாமனின் தாய்மாமன். கிருதன், ஓர் அரசன். தருநிலத்தோர், ஐந்தரு சூழ்ந்த நில மாகிய வானுலகத்தில் வாழ்வார்.

(சௌப்திக பருவம். பதினெட்டாம் போர். கிருபனும் அசுவத்தாமனும் சிவபெருமானை நோக்கித் தவம் செய்தல்.)

இதோடு சிவனைப்பற்றிய வில்லியின் கவிமொழி
முடிவு பெறுகின்றது.

# பிறர் மொழி

பிறர் மொழியாக, அதாவது பாத்திரங்களின் வாயிலாக வில்லி சிவனைப்பற்றி இருபது பாத்திரங்களின் மூலம் எழுபத்து ஒரு பாடல்களில் இயம்புவார். அதில் முதலில் நிற்பவன் அருச்சுனன். அடுத்து நிற்பவர்கள் இருவர். ஒருவன் மாற்றுக்கட்சியின் தலைவன் துரியோதனன்; இன்னொருவன் குருகுலத்தார் வாழ்வில் கருத்துடையவனும் பாரத மூல நூலின் ஆசிரியனுமாகிய வியாதன். துரியோதனனும் வியாதனும் சிவனைப்பற்றி ஒன்பது ஒன்பது இடங்களில் சொல்லுவர்.

அடுத்து இந்திரன் சிவனை ஏழு இடங்களில் இயம்புவான். கண்ணபிரான் ஐந்து இடங்களில் சிவனைச் செப்புவான். கன்னன் நான்கு இடங்களில் நவில்வான். சிவனே தன்னை நான்கு இடங்களில் பேசிக்கொள்வான். வீமன் மூன்று இடங்களில் சிவன்புகழ் செப்புவான்.

கடோற்கசன், துரோணன், தருமன், விதுரன், மாதலி, உரோமச முனிவன், அபிமன் ஆகிய எழுவரும் சிவனை இரண்டு இரண்டு இடங்களில் பேசுவர். மான்உரு எய்திய ஒரு முனிவன், நாரதன், பாண்டியன், ஓர் பூதம், அசுவத்தாமன் ஆகிய ஐவரும் சிவனை ஒவ்வோரிடத்துச் சொல்லுவர்.

பொன்புரை மேனியாய்
போற்றி வேன்உனை
என்பெரும் தவப்பயன்
யார்பெற் றோர்களே?'

என்று கேட்பான் சிவனைப் பார்த்துப் பார்த்தன்.

மேலும்,

'பாவை பங்கன்மேல் புரிந்திலன் இன்னமும் பூசை'

என்று அவன் கூறுவதால் அருச்சுனன் நாளும் சிவபூசை செய்தான் என்று தெரிகின்றது.

'உமையவர் கணவனே! உகாந்த காலனே!'

என விசயன் சிவனை அழைத்தலால், யுக முடிவில் தனித்து நிற்கக்கூடிய ஊழிமுதல்வன் சிவனே என்று கருதினன் என்று தெரிகின்றது.

துரியோதனன்,

'அடல்சிலைக்கு அரனை ஒப்பான்'

என்றமையால் வில்லாற்றலிலே சிவன் மேம்பட்டவன் என நினைந்தனன்.

'அரன்முடி அணிந்த தாமம் இதுஎன
அடிகொடு கடந்து போக வெருவுவர்'

என, சுயோதனன் சொல்லுதலால் சிவன் கொன்றை மாலையைத் துரியோதனன் எவ்வளவு மதித்தான் என்பதையும், அதைக்கடவாத வீமனும் அபிமனும் அம் மாலையை எவ்வளவு மதித்தனர் என்பதையும் காண்கின்றோம்.

'இன்று அமரின் யாரும்உயிர்
பொன்றிடினும் ஈசன்அணி
கொன்றைகட வேன்எனமுன்
நின்றனன் நராதிபனே'

என்ற பாடலால் என்ன நேர்ந்தாலும் ஈசன் கொன்றை மாலையைக் கடவேன் என்ற அபிமனின் உறுதிப்பாடு விளங்குகிறது.

வியாதன், சிவனிடம் படைபெற்று வந்தாலன்றிப் போர் வெல்லல் முடியாது என்று கூறினன் என்பதைப் பின்வரும் பாடல் காட்டும்.

'தோத்திரம் ஆன தெய்வச்
சுருதிகள் யாவும் நான்காக்

கோத்தவன், பின்னும் சொல்வான்;
'குன்றவில் லவன்பால் இன்று

பார்த்தனே சென்று, பாசு
பதக்கணை வாங்கின் அல்லால்,

ஆர்த்தபைங் கழலாய்! எய்தாது
அரும்பகை முடித்தல்' என்றான்.

மேலும் மனம் மாழ்கிய அசுவத்தாமனைப் பார்த்து,

'சிரத்தி னுல்அரனை அடிவ ணங்கிஇடர்
தீரு மாறுநனி சிந்தியாய்'

என வியாதன், 'சிவனை வழிபட்டுத் துன்பத்தைப் போக்கிக் கொள்ள எண்ணு' எனக் கூறுவான்.

'ஆசறு கடவு ளோர்க்கும்
அருமறை தனக்கும் எட்டாத்
தேசவன் வருமோ என்று'

பார்த்தனிடம் சிவன் பெருமையை, இந்திரன் பேசுவான். நிற்க, ஒரே பாடலில் திருமாலை 'ஆழியான்' எனவும், சிவனை "ஊழியின் நாதன்" என்றும் இந்திரன் இயம்புவதால் சிவனே "ஊழிமுதல்வன்" என இந்திரன் தெளிந்தான் என்று ஆகின்றது.

கண்ணன், சிவனை 'ஈசன்' என்றும், 'முருகு இதழிச்சுடர்' எனவும், 'நீற்றணி நிமலன்' என்றும், 'கைலைஅம் பொருப்பன்' என்றும் பாராட்டுவதோடு, பார்த்தனிடம், நாங்கள் இருவரும் ஒருவரே என்றும் செப்புகின்றுன்.

கன்னன் 'சிவனும் என் கணையை அஞ்சும்' என்று கூறுவதால், சிவனை எவ்வளவு மதிக்கின்றுன் என்று தெரிகின்றது. தவிர, அடலாழி 'அவனேயன்றி, சிவன் வந்து தேர்விடினும் கொல்வேன்' எனக் கன்னன் கூறுவதிலிருந்து கன்னனின் மனப்பாங்கை அறியலாம்.

தருமன்,

'மான்புரிந்த திருக்கரத்து மதிஇருந்த
நதிவேணி மங்கை பாகன்
தான்புரிந்த திருக்கூத்து'

எனச் சிவபிரான் நடனத்தைப் பாராட்டும் சிறப்பு எண்ணி எண்ணி மகிழத்தக்கது.

மாதலி, சிவனை 'உகாந்த நாதன்' என்று உரைப்பதால் ஊழிக்காலத்தில் நிற்கும் தலைவன் சிவனே என எண்ணுகின்றுன்.

அபிமன், 'ஆதிபகவனது அணிமுடி அலங்கல் எனக் கொன்றை மாலையைக் கூறுவதால் சிவனைக் குறளாசிரியர் கூறிய ஆதிபகவன் என்ற சொற்றொடரால் சொல்லி மகிழ்கின்றுன்.

## மணிப்பணித் திங்கள் மௌலி!

200 ‘விழுந்து,அரு வினையினின்
மெலிந்து, நாயினும்,
அழுந்திய பிறவியின்,
அயரு வேன்முனம்,

செழுஞ்சுடர் மணிப்பணித்
திங்கள் மௌலியாய்!

எழுந்தரு ளியஇஃது
என்ன மாயமோ!’ (1)

பொழிப்பு: செழுமையான ஒளி விடுகின்ற மணிகள் பொருந்திய பாம்பையும் திங்களையும் முடித்த சடையை உடையாய்! அரிய வினையிலே விழுந்து தளர்ந்து நாயினும் கீழ்ப்பட்ட பிறவியிலே வருந்துகின்ற என் முன்னர் எழுந்து அருளிய இச்செயல் என்ன மாயமோ?

விளக்கம்: சுடர்: ஒளி. மணி: அரதனம். பணி: பாம்பு. மௌலி: சடை.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. சிவனை நேரே கண்டதும் பார்த்தன் பரவசப்பட்டுப் பகரல்.)

## கொன்றையம் தொங்கல் மௌலி

201 ‘ஆதியே! அண்டமும்
அனைத்து மாய்ஒளிர்

சோதியே! கொன்றைஅம்
தொங்கல் மௌலியாய்!

வாதியே! மரகத
வல்லி யாள்ஒரு

பாதியே! பவளமாம்
பரம ரூபியே! (2)

**பொழிப்பு:** மூலப்பொருளே! அண்டங்களும் பிற அனைத்துமாய் விளங்குகின்ற ஒளி வடிவமே! அழகிய கொன்றை மாலையை அணிந்த சடையை உடையவனே! சொல்திறம் வாய்ந்தவனே! பச்சைக் கொடிபோன்ற உமையவளைப் பாதி உடம்பில் பெற்றவனே! பவளம் போன்ற நிறமுடைய மேலான வடிவத்தை உடையவனே!

**விளக்கம்:** ஆதி: முதற்பொருள். சோதி: ஒளி. தொங்கல்: மாலை. வாதி: வாதிக்க வல்லவன். மரகதவல்லி: பச்சைக்கொடி.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. பார்த்தன் பரமனைப் பரவுதல்.)

## எங்குமாய் விளங்கும் சோதி

202 'பைஅரா அணிமணிப்
பவள மேனியாய்!

செய்யவாய் மரகதச்
செல்வி பாகனே!

ஐயனே! சேவடி
அடைந்த வர்க்கெலாம்

மெய்யனே! எங்குமாய்
விளங்கும் சோதியே!' (3)

**பொழிப்பு:** படம் பொருந்திய பாம்பை அணிந்த அழகிய பவளம்போன்ற நிறத்தை உடையவனே! சிவந்த வாயை உடைய பச்சை நிறம் வாய்ந்த உமையவளைப் பங்கில் கொண்டவனே! தலைவனே! உன் திருவடியை அடைந்த எல்லாருக்கும் உண்மையானவனே! எங்குமாய் விளங்கும் ஒளிப்பிழம்பே!

**விளக்கம்:** பை: பாம்பின் படம். மரகதச் செல்வி: உமையவள்.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அருச்சுனன் அரனை ஏத்துதல்.)

## மரகதவல்லி வாழ்வுறு வடிவம்

203 முக்கணும், நிலவுஎழ
முகிழ்த்த மூரலும்,

சக்கர வதனமும்,
தயங்கு வேணியும்,

மைக்கயல் மரகத
வல்லி வாழ்வுறு

செக்கர்மெய் வடிவமும்,
சிறந்து வாழியே. (4)

பொழிப்பு: மூன்று கண்ணும் நிலவு தோன்ற வெளிப்படுத்திய பற்களும், வட்டவடிவமான முகமும், விளங்குகின்ற சடைமுடியும், மைதீட்டிய மீன்போன்ற கண்ணை உடைய பச்சைக்கொடி வாழ்கின்ற சிவந்த உடம்பின் தோற்றமும் சிறந்து வாழ்வதாக!

விளக்கம்: மூரல்: பல். சக்கரம்: வட்டம். வதனம்: முகம். வேணி: சடை. கயல்: மீன். செக்கர்: சிவந்த.

(ஆரணியம். அருச்சுனன் தவநிலை. அம்மைஅப்பனை அருச்சுனன் வாழ்த்துதல்.)

## பொன்புரை மேனி

204 'அன்புஉறு தருமனுக்கு
அநுசன் ஆயினேன்;

நன்பரம் பொருளுக்கு
நண்பும் ஆயினேன்;

பொன்புரை மேனியாய்!
போற்றி னேன்உனை;

என்பெருந் தவப்பயன்
யார்பெற் றார்களே!' (5)

பொழிப்பு: அன்புடைய தருமராசனுக்குத் தம்பியாகப் பிறந்தேன்; நல்ல பரம்பொருளாகிய கண்ணனுக்கு நண்பனாக ஆயினேன்; தங்கத்தை ஒத்த மேனி உடையவனே! உன்னை வணங்கினேன்; என் பெரும் தவத்தின் பயனை யார் பெற்றார்?

விளக்கம்: அநுசன்: தம்பி. பரம்பொருள்: கண்ணன். பொன்புரை மேனியாய் என்பது,

*'பொன்னார் மேனியனே'*

என்ற சுந்தரமூர்த்திகளின் தேவாரத்தை நினைப்பூட்டுகின்றது.

*'என்பெரும் தவப்பயன்*
*யார்பெற் றார்களே'*

எனச் சிவபெருமானைப் பார்த்து இங்குப் பார்த்தன் கூறுமாப் போல,

*'யான்பெற்ற பெருந்தவப்பேறு என்னை யன்றி*
*இருநிலத்தில் பிறந்தோரில் யார்பெற் றாரே'*

என்று கண்ணனைக் கண்ட கன்னன் கூறுவதும்,

*'யான்புரிந்த தவம்உலகில்*
*யார்புரிந்தார் அவனிபரில்'*

என நாரதனிடம் தருமன் கேட்பதும் ஒத்த கருத்தன.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. சிவனைக் கண்ட கிரீடியின் பெருமிதம்.)

## கொன்றைத் தொடையல்

205 'சக்கரம் பிளந்த வாறும்,
தரியலர் உடைந்த வாறும்,
துக்கரம் ஆன கொன்றைத்
தொடையலால் வளைத்த வாறும்,
மெய்க்கரம் துணிந்த வாறும்,
மீண்டுஉருத்து அடர்த்த வாறும்,
உக்கிர முடன்என் முன்னே
ஓடிவந்து உரைசெய் யாயோ?' (6)

**பொழிப்பு :** சக்கர வியூகத்தைப் பிளந்த விதத்தையும் எதிரிகள் உடைந்து ஓடிய மாதிரியையும், தெய்வத் தன்மை வாய்ந்த கொன்றை மாலையைப்போட்டு வளைத்த நிகழ்ச்சியையும், உண்மைக் கை துணிந்தவற்றையும், கைபோன பிறகும் திரும்பக் கோபித்துப் போர் செய்ததையும் கோபத்தோடு என் முன்னே ஓடிவந்து சொல்லமாட்டாயா?

**விளக்கம் :** சக்கரம்: சக்கர வியூகம். தரியலர்: எதிரிகள். துக்கரம்: தெய்வத்தன்மை.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். இறந்த மைந்தன் அபிமனைப் பார்த்துப் பார்த்தன் புலம்பல்.)

## பாவை பங்கன் பூசை

206 சரிந்தவர் சரிவுஅறத்
தாங்கும் நாயகன்
பரிந்து,இவை உரைத்தலும்,
'பாவை பங்கன்மேல்
புரிந்திலன் இன்னமும்
பூசை!' என்றனன்,
வரிந்தவெஞ் சிலைக்குமண்
மதிக்கும் வீரனே. (7)

**பொழிப்பு :** இளைத்தவர்களின் மெலிவு நீங்குமாறு காப்பாற்றுகின்ற நாயகனாகிய கண்ணன் அன்போடு இவ்வாறு சொல்லுதலும், 'நான் இன்னமும் அம்மையப்பனைப் பூசை செய்யவில்லையே' என்று, கட்டமைந்த வில் தொழிலுக்கு உலகம் மதிக்கும் வீரனாகிய, விசயன் விளம்பினான்.

**விளக்கம் :** நாயகன்: கண்ணன். பரிந்து: அன்பு கொண்டு. பாவைபங்கன்: சிவபெருமான். வீரன்: பார்த்தன். கண்ணன் பார்த்தனை உணவு அருந்துமாறு கூற 'நான் இன்னும் சிவபூசை செய்யவில்லையே, எவ்வாறு உணவுகொள்வேன்?' எனப் பார்த்தன் கூறினான் என்க.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். சிவபூசை செய்யாது உணவுகொள்ளேன் எனல்.)

## சிவ சிவ தேவ தேவன்

207 ‘பொங்கு அரா வெயில்மணிப்
பூணும், பேணும்நீற்று

அங்கரா கமும்,உவந்து
அணியும் மேனியாய்!

சங்கரா! மேருவெஞ்
சாபம் வாங்கிய

செங்கரா! சிவ!சிவ!
தேவ! தேவனே!’ (8)

**பொழிப்பு:** பொங்குகின்ற பாம்பை வெயில் விரிக்கும் அழகிய ஆபரணமாகவும், பேணுகின்ற திருநீற்றை உடல் பூச்சாகவும் அணிந்த மேனியை உடையவனே! சங்கரா! மேருமலையைக் கொடிய வில்லாக வளைத்த சிவந்த கையை உடையவனே! சிவ! சிவா! தேவ! தேவனே!

**விளக்கம்:** அங்கராகம்: மெய்ப்பூச்சு. சங்கரன்: நன்மை செய்பவன் சாபம்: வில்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். அருச்சுனன் கைலையில் சிவனைக்கண்டு போற்றுதல்.)

## கண்ணுடைக் கடவுள்

208 ‘விண்ணிடைத் திரிபுரம்
வெந்து நீறுஎழப்

பண்ணுடைச் செந்தழல்
பரப்பும் மூரலாய்!

எண்ணுடைக் காமனை
எரித்த பேர்அழல்

கண்ணுடைக் கடவுளே!
கால காலனே!’ (9)

**பொழிப்பு:** வானுலகத்தில் முப்புரம் வெந்து நீருகுமாறு ஒலியோடுகூடச் சிவந்த நெருப்பைப்பரப்பிய புன்சிரிப்பு உடையவனே! பெருமை உடைய காமனை எரித்த பெரிய நெருப்புக்கண் பெற்ற கடவுளே! எமனுக்கு எமனே!

**விளக்கம்:** பண், ஈண்டு ஓசை. மூரல்: புன்சிரிப்பு.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். விசயன் சிவனின் சங்காரத் தொழிலைப் புகழ்தல்.)

## மை உறு கண்டன்

209 'கை உறு சிலையுடன்
கான வேடன் என்று
ஐயுற அருகுவந்து
அணுகி, மெய்யுடன்
மெய்உற அமர்புரி
விநோதம், நாள்தோறும்,
மைஉறு கண்டனே!
மறப்பது இல்லையே. (10)

**பொழிப்பு:** கறுப்பு நிறம் பொருந்திய கழுத்தைஉடையவனே! கையில் வில்லைத் தூக்கிக்கொண்டு காட்டு வேடன் என்று நினைக்குமாறு பக்கத்தே வந்து நின்று என் உடம்புடன் உன் உடம்பு பொருந்துமாறு நீ போர் செய்த வேடிக்கையை ஒரு நாளும் மறக்கமுடியவில்லையே.

**விளக்கம்:** மை உறு கண்டனே என்ற விளியை முதலில் எடுத்துக்கொள்க. ஐயுற: சந்தேகிக்க. விநோதம்: வேடிக்கை.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். பார்த்தன் சிவவேடன் தன் உடம்புடன் உராய்ப் போர்புரிந்ததை எண்ணி இன்புறல்.)

## உமையவள் கணவன்

‘உமையவள் கணவனே!
உகாந்த காலனே!

இமையவில் வீரனே!’
என்று கொண்டு,இவன்

அமைவுறத் துதித்தலின்,
அவனும் மற்றுஇவன்

சமைவுகண்டு ஐயனோடு
உவகை சாற்றினன். (11)

பொழிப்பு: ‘உமையவளின் நாயகனே! உக முடிவிலும் தனித்து நிற்பவனே! இமயமலையை வில்லாக வளைத்த வீரனே!’ என்று கொண்டு பார்த்தன் பொருந்துமாறு தோத்திரம் செய்தலின், சிவபெருமானும் அருச்சுனனின் செய்கையைக்கண்டு கண்ணனிடம் மகிழ்ந்து கூறினன்.

விளக்கம்: அமைவுற: பொருந்துமாறு. அவன்: சிவன். இவன்: விசயன். சமைவு: செயல். ஐயன்: கண்ணன். உவகை: மகிழ்ச்சி.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். பார்த்தன் சிவனின் பரத்துவத்தைச் சொல்லிப் பாராட்டுதல்.)

## அரனும் வேயில் ஆயினன்

211 'அரிபிறந்தது, அன்று தூணில்;
அரனும் வேயில் ஆயினன்;

பரவை உண்ட முனியும்இப்
பரத்து வாசன் மைந்தனும்,

ஒருவ யின்கண் முன்பி-
-றந்தது; ஒண்சரத்தின் அல்லவோ?

அரிய வென்றி முருக
வேளும் அடிகளும்பி றந்ததே. (1)

**பொழிப்பு:** திருமால் அன்று தூணில் தோன்றினன்; சிவன் மூங்கிலில் பிறந்தான்; கடல் குடித்த அகத்திய முனியும் இந்தப் பரத்துவாசன் மகனாகிய துரோணனும் முன்னே ஓரிடத்தில் பிறந்தார்கள்; அருமையான வெற்றி முருகனும் அடிகளாகிய தாங்களும் பிறந்தது ஒளிமிக்க சரத்தின் அல்லவா? (என கிருபாசாரி என்ற முனிவனைப் பார்த்துத் துரியோதனன் கூறினன்.)

**விளக்கம்:** அரி: திருமால். தூணில் தோன்றியது நரசிங்கமூர்த்தி. அரன்: சிவன். வேய்: மூங்கில். பரவை: கடல். முனி: அகத்தியன். மைந்தன்: துரோணன். அகத்தியனும் துரோணனும் பிறந்தது ஓரிடம். அது குடம் என்க. சரம்: ஒன்று, நாணற்புல்; இரண்டு, சரவணப்பொய்கை. முன்னதிற் பிறந்தவன் கிருபன்; பின்னதில் தோன்றியவன் முருகன். ஈண்டு அடிகள் என்றது கிருபனை.

(ஆதிபருவம். வாரணாவதச் சருக்கம். பிறப்பில் இழிவு கற்பிக்கக்கூடாது எனத் துரியோதனன் பகர்தல்.)

## சிவன்முன் பூ வில் எடுத்த மதன்

212 'மாவில் எடுத்தனன் இளையோர்கள் கந்த-
-வகன்மைந்தன் முன்பு. சிவன்முன்

பூ,வில் எடுத்த மதன்ஆன வாறு
புகல்கிற்பது அல்ல' அனிகக்

கோவில் எடுத்துஎன்? மறைநான்கும் வல்ல
குருவில் எடுத்துஎன்? இனிமேல்,

நீ, வில் எடுக்கில் அனைவோரும் உய்தும்;
நினையாரும் வாகை புனையார்.' (2)

பொழிப்பு: சிறந்த வில்லைக் கையில் தூக்கி என் தம்பி மார், காற்றின் மகனாகிய வீமன் முன்னே சிவபெருமான் முன்னர் பூ அம்பு தொடுக்கும் வில்லைத் தூக்கிய மன்மதனைப் போல் ஆனது சொல்லும் தரத்தது அல்ல; சேனைத் தலைவனாகிய வீட்டுமன் வில் எடுத்து என்ன பயன்? நான்கு மறைகளும் வல்ல குரு துரோணன் வில்லைத் தூக்கி என்ன பயன்? இனிமேல் நீ வில்லைத் தூக்கினால்தான் நாங்கள் அனைவரும் பிழைப்போம். எதிரிகளும் வெற்றிமாலை சூட மாட்டார், (எனத் துரியோதனன் கன்னனிடம் சொன்னான்.)

**விளக்கம்:** மா: சிறந்த. கந்தவகன்: காற்றுக் கடவுள். மைந்தன்: வீமன். பூ வில்: மலர் அம்பு தொடுக்கும் வில். அனிகம்: சேனை. அனிகக்கோ: சேனைத் தலைவனான வீட்டு மன். குரு: துரோணன். உய்தும்: பிழைப்போம். நினையார்: மாற்றார். வாகை: வெற்றிமாலை.

(வீட்டும பருவம். ஒன்பதாம் போர்ச் சருக்கம். துரியோதனன் கன்னன் வில்லாற்றலைப் புகழ்தல்)

## நிறைபுனல் பரந்துலாவும் மௌலியர்

213 மறன்உடையை! செம்பொன் மேரு கிரிநிகர்
வலிஉடையை! வென்றி கூறும் அரசியல்

அறன்உடையை! பஞ்ச பாணன் எனவடிவு
அழகுஉடையை! நின்ற சேனை அரசரில்

நிறன்உடையை! திங்கள் சூடி வியன்நதி
நிறைபுனல் பரந்து உலாவு மவுலியர்

திறன்உடைய மன்றல் நாறும் மலரடி
தெளிவொடு பணிந்த ஞான முடிவினை! (3)

பொழிப்பு: வீரம் உடையாய்! சிவந்த பொன்மலையை ஒத்த ஆற்றல் உடையாய்! வெற்றி மிக்க அரசியல் தருமம் உடையாய்! மதனனை ஒத்த உடல் எழில் உடையாய்! இங்கு நின்ற படைகளை உடைய மன்னர்களுக்குள் நல்ல நிறத்தை உடையாய்! மதியைத் தலையில் அணிந்த பெரிய நதியின் பெருகுநீர் விரிந்து கொட்டும் சடைமுடியை உடைய சிவ பெருமானின் தகுதிவாய்ந்த மணம் கமழும் திருவடியைத் தெளிவாக வணங்கும் முடிந்த அறிவை உடையாய்! (என சயத்திரதனைச் சுயோதனன் அழைத்தான்.)

விளக்கம்: மறன்: வீரம். பஞ்சபாணன்: மன்மதன். வியன்: பெரிய. மௌலி: சடைமுடி. மன்றல்: மணம்.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். சயத்திரதனைச் சுயோதனன் பாராட்டுதல்)

## நுதல் எரி நயனன்

214. வயவிசயன் நின்ற தேர்க டவிவரும்
 வலவன்மரு கன்த னேடு வரைபுரை
புயம்உடைய தண்ட வீமன் உறில்,இரு
 பொருநரையும் இன்று பூசல் பொரஅரிது;
அயல்இவர் அகன்று போகில், அமர்பொர
 அறவும்எளிது; உண்டு உபாயம்; நுதல்எரி
நயனன்அருள் கொன்றை மாலை தனைஇவர்
 நடுஇடில் இரண்டு பாலும் அகல்வரே. (4)

பொழிப்பு: வெற்றி விசயன் நின்ற தேரைச் செலுத்தி வரும் சாரதியின் மருமகன் அபிமனுடன் மலையை ஒத்த தோளுடைய கதைக்கு உரிய வீமன் ஒன்று சேர்வானுனல், அவ்விரண்டு வீரர்களையும் எதிர்த்தல் அருமையாகும்; அவ் விருவரும் பக்கத்திலே அகன்று விடுவார்களேயானுல் போர் செய்தல் மிகவும் எளிது; அதற்கு வழி இருக்கிறது; நெற்றிக் கண் பெற்ற கடவுள் அருளிய கொன்றைமாலையை அபிமன், வீமன் ஆகிய இவ்விருவர்க்கும் இடையில் போட்டுவிட்டால் இவ்விருவரும் இரண்டு பக்கத்தில் அகன்று விடுவர்.

**விளக்கம்:** வயம்: வெற்றி. வலவன்: கண்ணன். மருகன்: அபிமன். வரை புரை: மலையை ஒத்த. தண்ட வீமன்: தண்டில் வல்ல வீமன். பொருநர்: வீரர். பூசல்: போர். உபாயம்: தந்திரம். நுதல் எரி நயனன்: சிவபிரான்.

(துரோணபருவம். பதின்மூன்றும்போர். கொன்றை மாலையினுல் அபிமனுடன் வீமனைச் சேராது செய்ய எண்ணுதல்)

## மங்கை பாகன் உதவிய தண்டு

215 அரன்முடி அணிந்த தாமம் இதுஎன
அடிகொடு கடந்து போக வெருவுவர்;
பரவைநிகர் நம்ப தாதி அவனிபர்
பலருடன் வளைந்து கோலி, அமரிடை

வசம்உற வணங்கு நாளில் அருள்செய்து
மனம்மகிழ மங்கை பாகன் உதவிய

உரனுடைய தண்டி னுல்இவ் அபிமனை
உயிர்கவர்தல் இன்று சால உறுதியே. (5)

**பொழிப்பு:** சிவபெருமான் முடியிலணிந்த மாலை இது, என்று எண்ணி அதனைக் காலினுல் தாண்டிப்போக அஞ்சுவர்; கடலை ஒத்த நம்முடைய சேனை மன்னர்கள் பலரும் உடனே வளைந்துகொண்டு, போர்க்களத்து வரம் விரும்பித் தொழுத காலத்துக் கருணை புரிந்து மனமகிழ்ச்சியுடன் சிவபெருமான் அருளிய வலிமை வாய்ந்த தண்டுப்படையால் இவ்அபிமனை இன்று உயிர் கொள்தல் மிக உறுதியாகும், (எனச் சுயோதனன் சொன்னுன்).

**விளக்கம்:** தாமம்: மாலை. பரவை: கடல், பதாதி: தானை. மங்கை பாகன்: சிவன். உரன்: வலிமை. சிவன் கொன்றை மாலையை மாற்றுர் தாண்டார் ஆதலின் அம்மாலையால் அபிமனைத் தனியே பிரித்து அரன் அளித்த தண்டால் இன்று உயிர் கவர்தல் பொருத்தம் எனச் சுயோதனன் சொன்னுன் என்க.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். கொன்றை மாலையால் அபிமனைப் பிரித்து உயிர்கவர முடிவு செய்தல்)

## பசுபதி அருளிய கதைப்படை

216 'அருகு நின்றகொற் றவர்களும், அவர் அவர்
அரிய திண்திறல் குமரரும், அமரில்உன்

மருக னும்படப் பொருதனன்; மகபதி
மகன்ம கன்தனைப் பசுபதி அருளிய

உருகெ ழும்கதைப் படைகொடு கவருதி
உயிரை' என்றுஎடுத்து உரைசெய, அரசனை

இருகை யும்குவித்து அருளுடன் விடைகொளும்
எழில்கொள் சிந்துவுக்கு ஒருதனி முதல்வனே. (6)

**பொழிப்பு :** 'அணித்தே நின்ற மன்னர்களும் அவர வரின் அருமையான வலிய ஆற்றலுள்ள மைந்தர்களும் போர்க்களத்தில் உன் மருமகன்கூட அழியுமாறு போர் செய்தான்; (அப்படிச் செய்த) இந்திரனின் மகனுக்கு மகனுன அபிமனை, சிவபிரான் தந்த அச்சத்தைத் தரும் தண்டுப் படையைக் கொண்டு உயிரை வாங்குவாயாக' என்று சொல்ல, அப்படிச் சொன்ன மன்னனுகிய சுயோதனனை இரண்டு கையும் கூப்பி வணங்கி அழகிய சிந்துநாட்டின் ஒரு தனி முதல்வனுன சயத்திரதன் அருள் விடைகொண்டான்.

**விளக்கம் :** உன்மருமகன் என்றது தன்மகனுகிய இலக் கண குமரனை. சிந்துநாட்டு மன்னன் சயத்திரதன், துரியோ தனனின் தங்கை துச்சளையின் கணவனுவான். அபிமனைக் கொன்றவன் அவனே. மகபதி: இந்திரன். அவன்மகன்: பார்த்தன்: அவன் மகன் அபிமன். பசுபதி: உயிர்களுக்கெல் லாம் தலைவனுகிய சிவன். உரு: அச்சம்.

(துரோணபருவம். பதின்மூன்ரும்போர். அபிமன் உயிர் கவரச் சிந்துபதி வணங்காமுடியோனிடம்விடைகொண்டான்)

## அரன் பருப்பதம்

217 'பயத்துஇரவின் நடுங்கி,அரன் பருப்பதம்புக்கு
அவன்கொடுத்த படையும் வாங்கி,

வயத்துஇரதம் மால்கடவ வந்துஎதிர்தோன்-
-றுவன்ஆகில் மகரம் மோதும்

கயந்துஇரவி விழுவதன்முன் கைஅறுதன்
புதல்வனைப்போல் களத்தில் மாளச்
சயத்திரதன் தொடும்கணையால் நான்படுதல்
உறுதி'எனச் சாற்று வாயே. (7)

பொழிப்பு: 'அச்சத்தைத் தருகின்ற இரவிலே நடுக்கத்தோடு சிவபிரானின் வெள்ளிமலையை அடைந்து, அவன் கொடுக்கும் பாசுபதப் படையைப் பெற்று, வெற்றித் தேரைத் திருமால் ஓட்டப் போர்க்களத்தில் வந்து எதிர்ப்பானுனல், மீன்கள் துள்ளித் திரிகின்ற கடலிலே சூரியன் சாய்வதற்கு முன்னம், ஈண்டு இறந்த தன் மைந்தனைப் போல, மாண்டு ஒழியுமாறு, சயத்திரதன் விடும் அம்பால், பார்த்தனுகியதான் இறந்துபடுதல் உறுதி' எனச் சொல்வாயாக (என்று துரியோதனன் கடோற்கசனிடம் சொன்னுன்).

விளக்கம்: மகரம்: மீன். கயம்: கடல். இரவி: ஆதவன். கையறுதல்: இறத்தல். புதல்வன்: அபிமன்.

(துரோணபருவம். பதின்மூன்ரும் போர். கடோற்கசனிடம் துரியோதனன் கூறும் விடை.)

## அறம் வளர்க்கும் தெய்வப்பாவை பங்கோன்

218 செங்கோல மலரில்இருந்து அனைத்தும் ஈன்ற
திசைமுகன்தான் அறம்வளர்க்கும் தெய்வப் பாவை
பங்கோனுக்கு ஆதிமறைப் புரவி பூண்ட
படிக்கொடித்தேர் கடவுதனிப் பாகன் ஆனுன்;
பொங்குஓதப் பாற்கடலான் இவன்என்று யாரும்
புகல்கின்ற வசுதேவன் புதல்வன் வந்து,
வெங்கோப விசயனுக்குச் சூதன் ஆனுன்;
விசையனும்அன்று, உத்தரன்தேர் விசையின் ஊர்ந்தான். (8)

பொழிப்பு: செம்மையான அழகிய தாமரையில் அமர்ந்து எல்லாவற்றையும் பெற்ற பிரமதேவன், அறத்தை வளர்க்கின்ற கடவுள் தன்மை உடைய உமையவளின் பங்கனுகிய சிவபிரானுக்கு, ஆதியான வேதம் என்ற

குதிரை பூட்டிய உலகமென்ற கொடித்தேரைச் செலுத்துகின்ற ஒப்பற்ற சாரதியாக அமைந்தான்; பொங்கி வருகின்ற அலையை உடைய திருப்பாற்கடலான் இவன், என்று எல்லோரும் செப்புகின்ற வசுதேவன் மைந்தனாகிய கண்ணன் இங்கு வந்து, கொடிய வில்லைக் கையில் கொண்ட பார்த்தனுக்குச் சாரதி ஆனான்; அருச்சுனனும் அன்று உத்தரன் இரதத்தை விசையாக ஓட்டினான். (எனச் சல்லியனிடம் சுயோதனன் சாற்றினான்.)

**விளக்கம்:** திசைமுகன்: பிரமன். தெய்வப் பாவை: அம்பிகை. பங்கோன்: சிவன். வெங்கோபம்: கொடியவில். பாகன், சூதன்: சாரதி. வேதம் என்னும் குதிரைபூட்டிய உலகமென்னும் சிவன் அமர்ந்திருந்த தேரைப் பிரமனென்னும் சாரதி செலுத்தினான் என்க.

(கன்னபருவம். பதினேழாம் போர். கன்னனுக்குத் தேரோட்டுமாறு சல்லியனுக்குச் சுயோதனன் சான்றுகள் காட்டல்.)

## கரிமுகக் கடவுள்

219 கரிமுகக் கடவுள் அன்ன
கடும்பரித் தாமா என்னும்
குரைகழல் துணைத்தாள் சிங்கக்
குருளையைப் பயந்த தாதை,
அருமறைக்கு அயனை ஒப்பான்,
அடல்சிலைக்கு அரனை ஒப்பான்,
திருவருட்கு அரியை ஒப்பான்,
திருத்தகு வீடு சேர்ந்தான். (9)

**பொழிப்பு:** யானைமுகக் கடவுளை ஒத்த கடுமையான அசுவத்தாமா என்னும் ஒலிக்கின்ற கழல் அணிந்த இரண்டு தாள்கள் கொண்ட சிங்கக் குட்டியைப் பெற்ற தந்தையாகிய துரோணன், அரிய வேதங்களுக்குப் பிரமனை நிகர்ப்பான்; வலிய வில்லுக்குச் சிவனை நேர்வான்; அழகிய கருணைக்குத் திருமாலைப்போல்வான்; சிறப்பு வாய்ந்த மோட்ச வீட்டை அடைந்தான்.

**விளக்கம்:** கரிமுகக் கடவுள்: விநாயகர். குருளை: குட்டி.

(கன்னபருவம், பதினேழாம் போர். துரியோதனன் துரோணனின் பெருமையைப் பாராட்டிப் பேசுதல்.)

## தன்பங்கைத் திறைநல்கும் ஈசன்

220 அன்பன் தெரிவை வழிபாடுகண்டு
ஆர்வம் எய்தி,
துன்பம் பயந்த பிணியால்அழி
தோற்றம் மாற்றி,
தன்பங்கை ஈசன் திறைநல்கமுன்
சாபம் வாங்கும்
வன்பன் தனக்கும் கிடையாத
வடிவு கொண்டான். (1)

**பொழிப்பு:** கொழுநனாகிய அன்பன், மனைவியின் வழி பாட்டைக் கண்டு பரிவு காட்டித் துன்பத்தைத் தரத்தக்க நோயால் அழிகின்ற தோற்றத்தை மாற்றிக்கொண்டு, தன் உடம்பில் ஒரு கூற்றைச் சிவன் உமையவளுக்குக் கொடுக்க முன்னே வில்லை வளைத்த வலிமை வாய்ந்தோனாகிய மன்மத னுக்கும் கிடையாத உருவத்தைப் பெற்றுக்கொண்டான்.

**விளக்கம்:** அன்பன்; மௌத்கல்யன் என்னும் முனி வன். தெரிவை: நளாயினி என்னும் பெண். திறை: கப்பம். சாபம்: வில். நளாயினி என்னும் மனைவியைச் சோதிக்கப் பெருநோய் கொண்ட உடல்பெற்றிருந்த மௌத்கல்யன் என்னும் முனிவன் அவள் வழிபாட்டைக் கண்டு மெச்சிப் பிணி உடம்பை மாற்றி, மன்மதனைப்போல் வடிவுகொண்ட னன் என்றவாறு.

(ஆதிபருவம். துரோபதை மாலையிட்ட சருக்கம். வியாதன் துரோபதையின் முற்பிறப்புக் கூறல்.)

## கூறு ஒரு தையல் ஆளும் முன்னோன்

221 அன்னோன் அகல, அவன்மேல்அவள்
ஆசை விஞ்சி,
"என்னே புரிவது இனி?" என்றலும்,
ஏந்தல் கூற்றால்,

தன்ஓர் வடிவின் ஒருகூறுஒரு
தையல் ஆளும்
முன்னேனை நோக்கித் தவம்செய்தனள்
மூரல் வாயாள். (2)

பொழிப்பு : அந்த மௌத்கல்ய முனிவன் செல்ல, அவன் மீது அந்த நளாயினி ஆசைமிகுந்து, 'இனி நான் என் செய்வது?' என்று கேட்டவுடன், ஏந்தலாகிய அந்த முனிவன் சொற்படி, தனது ஒப்பற்ற உருவத்தில் ஒருபகுதியை ஒப்பற்ற பெண்ணுகிய உமையவள் ஆளுகின்ற சிவபிரானை எண்ணித் தவம் புரிந்தாள், நல்ல பற்களைக்கொண்ட வாயை உடைய அவள்.

விளக்கம் : அன்னேனும் ஏந்தலும், மௌத்கல்ய முனிவன். முன்னேன்: சிவபெருமான். மூரல் வாயாள்: நளாயினி.

(ஆதிபருவம். துரோபதை மாலைஇட்ட சருக்கம். வியாதன் நளாயினியின் தவத்தைச் சொல்லுதல்.)

## ஐந்து ஆனனத்தோன்

222 ஐந்துஆன னத்தோன் அருள்செய்ய,
அழகின் மிக்காள்,
ஐந்துஆன சொல்லால் "கணவன்தருக
ஐய!" என்முள்;
ஐந்துஆன சொல்லான் அளித்தான்,மற்று
அவனும் முன்நாள்,
ஐந்துஆன போகம் இவள்எய்திய
ஆறுஅ றிந்தே. (3)

பொழிப்பு: ஐந்து முகத்தை உடைய சிவபெருமான் அருள் செய்ய, அழகில் மிக்கவளாகிய நளாயினி, ஐந்தான பேச்சால் 'கணவனைத் தருக ஐய' என்று கேட்டாள்; ஐந்தான சொல்லை உடைய சிவபிரானுகிய அவனும் முன் நாளில் ஐந்தான இன்பத்தை இவள் அடைந்த விதத்தை அறிந்து கொடுத்தான்.

விளக்கம்: ஐந்து ஆனனம்: ஐந்து முகம். ஐந்தான சொல்: ஐந்து முறை. ஐந்தான சொல்லான்: ஐந்து எழுத்தான சொல்லை உடையவன். ஐந்து எழுத்து: சிவாயநம. ஒவ்வொரு எழுத்தையும் ஒவ்வோர் சொல் என்று சொல்லுவர் பெரியார்.

*'அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி'*

என்பார் சுந்தரமூர்த்திகள்.

ஐந்தான போகம்: ஐம்புலனும் நுகரும் இன்பம். இப் பாடலில் எல்லா வரிகளும் ஐந்தான என அமைந்திருப்பது ஒரு அணி.

(ஆதிபருவம். துரோபதை மாலையிட்டசருக்கம். நளாயினி சிவனிடம் வரம் பெறல்.)

## சிவனை மதியாமையால் வீழ்ந்தான்

223 அவனை, 'தொடர்பால் வருக!'என்ன,
அவனும் ஆங்கண்
சிவனைச் சிறிதும் மதியாதுஎதிர்
சென்ற காலை,
இவனுக்குஎன் மேன்மை?' எனச்சீறலும்,
எஞ்சி னான்போல்,
புவனத்து எவரும் நகையாட,
புலம்பி வீழ்ந்தான். (4)

பொழிப்பு: அவனை (இந்திரனை) சிவபெருமான் கூறிய சம்பந்தத்தால் 'வருக' என்று அவள் சொல்ல, அங்குச் சிவ பெருமானை அவன் கொஞ்சமும் மதியாமல் அவர் முன் சென்ற போது, 'இவனுக்கு இவ்வளவு செருக்கு என்ன?' என்று சிவன் கோபிக்க, இறந்தவரைப் போல உலகத்திலுள்ள எவரும் சிரிக்க அழுது வீழ்ந்தான்.

விளக்கம்: சீறல்: கோபித்தல்: எஞ்சினான்: இறந்தவன்.

(ஆதிபருவம். துரோபதை மாலையிட்ட சருக்கம். இந்திரனின் கருவ பங்கம்.)

## மழுவாளி

224 வெவ்ஆ யுதங்கள் உதவாமல்
விபுத நாதன்

இவ்வாறு விழ, மழுவாளி
இமைப்பில் மீண்டும்,

அவ்வா சவற்குப் பிலம்ஒன்றில்
அடைத்த வச்ரக்

கைவா சவர்கள் ஒருநால்வரைக்
காட்டி னனே. (5)

**பொழிப்பு:** கொடிய ஆயுதங்கள் பயன்படாமல் தேவர்கள் தலைவனான இந்திரன் இவ்விதம் வீழச் சிவபிரான் கணப்பொழுதில் திரும்பவும் அந்த இந்திரனுக்கு ஒரு துவாரத்தில் அடைபட்டுக் கிடந்த வச்சிரப் படையை உடைய வாசவர்கள் நால்வரைக் காட்டினான்.

**விளக்கம்:** விபுதநாதன்: இந்திரன். மழுவாளி: சிவன். அவ்வாசவன், புதிதாக வந்த இந்திரன். வாசவர்கள் ஒரு நால்வர்: முன்னே அடைக்கப்பட்ட இந்திரர்கள்.

(ஆதிபருவம்: துரோபபதை மாலையிட்ட சருக்கம். முந்திய நான்கு இந்திரர்களுடன் புதிய இந்திரனும் சேர்ந்தான்.)

## மென்பாவை பங்கன்

225 'வன்பா தலத்தில் வருநால்வரும்,
வானின் வந்த

புன்பாக சாதன னும்தன்அடி
போற்றி நிற்ப,

அன்பால் மகிழ்நர் இவட்குஐவரும்
ஆதிர்!' என்று,

மென்பாவை பங்கன், விதிக்கப்புவி
மீது வந்தார். (6)

பொழிப்பு: வலிய பாதாளத்தில் நின்றும் வந்த நால்வரும் வானின் நின்றும் வந்த அற்ப இந்திரனும் தன் திருவடியை வணங்கி நிற்ப, 'நீங்கள் ஐவரும் அன்போடு இவளுக்குக் கொழுநர்களாக ஆவீர்கள்' என மென்மை வாய்ந்த உமையவள் பங்கன் விதிக்க, பூலோகத்தில் அந்த ஐந்து இந்திரர்களும் வந்து சேர்ந்தார்கள்.

விளக்கம்: பாக சாதனன்: இந்திரன். மென்பாவை பங்கன்: சிவன்.

(ஆதிபருவம். துரோபதை மாலை இட்டசருக்கம். துரோபதையின் ஐந்து கணவரின் முற்பிறப்பு.)

## சங்கரன் விதி

226 இங்கிதத்து இந்திரர்
என்பர் யாவரும்
சங்கரன் விதியினுல்,
தரணி பாலராய்,
வெங்கனல் தோன்றிய
மின்னை, ஐவரும்,
மங்கலம் புவிமகள்
வழக்கின் எய்தினீர். (7)

பொழிப்பு: முறைப்படி இந்திரர் என்பவர் யாவரும் சிவபெருமான் கட்டளையின்படி பூமியில் மன்னராகத் தோன்றிக் கொடிய நெருப்பில் தோன்றிய மின்போன்ற துரோபதையை நீங்கள் ஐவரும் மங்கலமாக உலகில் பிறந்த முறைப்படி அடைந்தீர்கள்.

விளக்கம்: நெருப்பில் பிறந்த மின்: துரோபதி. ஐவர்: பாண்டவர். மங்கலம்: திருமணம். புவிமகள் வழக்கின்: பூமியில் தோன்றிய முறைப்படி.

(சபாபருவம். இராசசூயச்சருக்கம். பாண்டவர்களுக்கு வியாதன் முன்பிறப்பு உணர்த்தல்.)

## குன்றவில்லவன் பாசுபதக்கணை

227 தோத்திரம் ஆன தெய்வச்
சுருதிகள் யாவும் நால்காக்
கோத்தவன் பின்னும் சொல்வான்;
'குன்றவில் லவன்பால் இன்று
பார்த்தனே சென்று, பாசு
பதக்கணை வாங்கின் அல்லால்,
ஆர்த்தபைங் கழலாய்! எய்நாது
அரும்பகை முடித்தல்' என்றான். (8)

**பொழிப்பு :** தோத்திரங்களான தெய்வமறைகள் எல்லாவற்றையும் நான்காக வகுத்த வியாத முனிவன் மேலும் சொல்லுவான்: 'மலையை வில்லாகவளைத்த சிவபெருமானிடம் இன்று அருச்சுனன் சென்று பாசுபதக்கணை பெற்று வந்தாலல்லது, பசுமையான வீரக்கழல் அணிந்தவனே, அரிய பகையை முடித்தல் ஆகாது' என்று சொன்னான்.

**விளக்கம் :** சுருதிகளை நான்காக் கோத்தவன்: வேதவியாதன். குன்றவில்லவன்: சிவன். பைங்கழலான்: தருமன்.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலைச் சருக்கம். பார்த்தனைப் பாசுபதம் பெறப் பரமனிடம் அனுப்புமாறு வியாதன் பகர்தல்.)

## அரனை அடிவணங்கி இடர்தீர்க!

228 வரத்தி னால்உனது தந்தை போரினில்
மடிந்தது அன்றிஒரு வயவர்தம்
சரத்தி னால்அவனை வெல்ல வல்லவர்
தராத லத்தின்மிசை இல்லையால்;
உரத்தி னால்விறல் மயூர வாகனனை
ஒத்த வீர!இனி உள்உறச்
சிரத்தி னால்அரனை அடிவ ணங்கிஇடர்
தீரு மாறுநனி சிந்தியாய். (9)

**பொழிப்பு :** (யாகசேனன் பெற்ற) வரங்காரணமாக உன் தந்தை போரில் இறந்ததைத் தவிர, துரோணனைத் தம் அம்புகொண்டு வெல்லத்தக்க வீரர் எவரும் இந்த உலகத்தில் இல்லை. 'ஆற்றலினாலே மயிலை ஊர்கின்ற கந்தக் கடவுளை ஒத்த வீரனே! இனி மனமாரத் தலைதாழ்த்திச் சிவபிரானைக் கும்பிட்டுத் துன்பம் தீரும் வழியை நன்கு சிந்திப்பாயாக' என (வியாதமுனிவன் விளம்பினான்.)

**விளக்கம் :** வரம் : துருபத மன்னன் முன்னே பெற்ற வரம். வயவர்: வெற்றி வீரர். உரமும் விறலும் ஒரே பொருளன. மயூரம்: மயில். மயூரவாகனன்: முருகன்.

(துரோணபருவம். பதினைந்தாம் போர். வியாத முனிவன் அசுவத்தாமனைச் சிவ வழிபாட்டில் ஈடுபடச் சொல்லல்.)

## பெரும்பிறை அணிசடைப் பிஞ்ஞகன்

229 அருப்பகை வலிமையால்
அவுணர் ஊர்சுடும்
பெரும்பிறை அணிசடைப்
பிஞ்ஞ கன்றனது

இரும்பக ழிகள்பெற
எண்ணி யேகொலாம்,

விருப்பியது இத்தவம்,
வில்வ லான்அரோ! (1)

**பொழிப்பு:** அரிய பகையின் ஆற்றலை எண்ணி, அவுணர்களின் முப்புரத்தை எரித்த சிறந்த திங்களை அணிந்த சிவபிரானது பெரிய அம்புகளை வாங்க எண்ணியேபோலும் வில்வல்லானாகிய விசயன், இத்தவத்தை விரும்பியது! (என்றான் இந்திரன்.)

**விளக்கம்:** பிஞ்ஞகன்: தலைக்கோலமுடைய சிவன். வில்வலான்: விசயன். அரோ: அசை.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலைச் சருக்கம் இந்திரன் குருவிடம் கூறல்.)

## பைந்தொடி பாகன்

230 மைந்தன்இம் மாற்றம் கூற,
மனன்உற மகிழ்ந்து தெய்வத்

தந்தையும், விருத்த வேடம்
தனைஒரு கணத்தில் மாற்றி,

இந்திரன் ஆகி, முன்நின்று,
'இப்பெருந் தவத்தால் வந்து,

பைந்தொடி பாகன் பாசு
பதம்உனக்கு உதவும்' என்றான். (2)

**பொழிப்பு:** மகனாகிய பார்த்தன் இவ்வாறு (உயிர் இறும் அளவும் இந்தக் கருத்து நான் விடேன்) என்று சொல்ல, மனமாரக் களிப்படைந்து, கடவுள்தந்தை தான் கொண்ட கிழவடிவத்தைக் கணப்பொழுதில் மாற்றி, இந்திரனாகவே ஆகி மைந்தன் முன்னே காட்சி கொடுத்து, உன் இந்தப் பெரிய தவத்துக்கு இரங்கி உமையவள் பங்கன் உனக்குப் பாசுபதம் அருளுவான், என்று இயம்பினான்.

**விளக்கம்:** மைந்தன்: பார்த்தன். தெய்வத் தந்தை: தேவேந்திரன். பைந்தொடி: பசிய வளையல்களை அணிந்த பார்வதி.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. இந்திரன் மைந்தன்முன் மெய்வடிவுடன் தோன்றுதல்.)

## கொன்றை அம் சடையான்

231 என்றலும், கடவுள் வேந்தன்,
இருபுயம் துளங்க நக்கு,

மன்றல்அம் துளப மாயோன்
மைத்துனன்; எனக்கு மைந்தன்;

கொன்றைஅம் சடையா னோடும்
அமர்புரி குரிசில் தன்னை,

''நன்றிஇல் மனிதன்'' என்றுஇங்கு
இகழ்வதோ நங்கை! என்றான். (3)

**பொழிப்பு:** என்று கூறியவுடன் தேவேந்திரன் இரு தோள்களும் குலுங்குமாறு நகைத்து,(இவன்யார் தெரியுமா?) 'மணமுள்ள அழகிய துழாய்மாலையை அணிந்த மாயவனுக்கு மைத்துனன்; எனக்கு மகன்; எழில் மிக்க கொன்றை மாலையை அணிந்த சடை உடையானோடு போர்புரிந்த வீரன்; இவனை நன்றியற்ற மனிதன் என்று நீ பழிப்பதா பெண்ணே!' என்று சொன்னான்.

**விளக்கம்:** கடவுள் வேந்தன்: இந்திரன். துளங்க: அசைய. நக்கு: சிரித்து. மன்றல்: மணம். மாயோன்: கண்ணன். சடையான்: சிவன். குரிசில்: ஆணிற் சிறந்தவன். நங்கை: இந்திராணி.

'மன்னிய புவியில் வைகும்
மானுட மன்னன் வந்து உன்
தன்னுடன் ஒக்க உண்ணத்
தக்கதோ உரைத்தி'

என இந்திராணி கேட்டாள். அதற்கு இந்திரன் கூறிய விடை இப்பாடல்.

(ஆரணிய பருவம். நிவாதகவச காலகேயர் வதை. இந்திராணிக்கு இந்திரன் கூறிய விடை)

## சிவன் அருள்படை

232 அவன்உரை மகிழ்ந்து கேட்டுஆங்கு
அமரருக்கு அதிபன் சொல்வான்;

'புவனம்மூன் றினுக்கும் உன்னைப்
போல்ஒரு வீரன் உண்டோ?

சிவன்அருள் படையும் பெற்றாய்!
செந்தழல் அளித்த தெய்வக்

கவனவாம் பரியும், தேரும்,
கணையும்கார் முகமும் பெற்றாய்!' (4)

**பொழிப்பு:** அவனது பேச்சைக் களிப்புடன் கேட்டு, அவ்விடத்துத் தேவர்களுக்குத் தலைவன் (பின்வருமாறு) சொல்வான். மூன்று உலகத்திலும் உன்னைப்போன்ற ஒரு வீரன் இருக்கின்றானா? சிவன் தந்த படையைப் பெற்றுக் கொண்டாய்! சிவந்த தீக்கடவுள் அளித்த கடவுள் தன்மை வாய்ந்த விரைந்து தாவிச் செல்லும் குதிரையும், இரதமும், அம்பும், வில்லும் அடைந்தாய்!

**விளக்கம்:** அவன்: அருச்சுனன்.

'யாவரும் பரவும் உன்தன்
உடன்ஓர்ஆ சனத்துஇ ருந்து
மேவஅரும் முடியும் சூடப்
பொறுக்குமோ விமல'

என அருச்சுனன் கூறியதற்கு இந்திரன் கூறிய விடை இப் பாடல்.

(ஆரணிய பருவம். நிவாதகவச காலகேயர் வதை. அருச்சுனனை இந்திரன் பாராட்டுதல்.)

## ஊழியின் நாதன்

233 ஆழிநீர் அழுவத்து என்றும்
உறைபவர்; ஆழி யானும்,

ஊழியின் நாதன் தானும்,
உருப்பினும், உலப்புஇ லாநோர்;

ஏழ்இரு புவனத்து உள்ளோர்
யாரையும் முதுந காண்போர்;

கோழியான் தனக்கும் தோலா
அவுணர்முக் கோடி உண்டால். (5)

**பொழிப்பு:** கடல் நீரின் பரப்பில் என்றும் தங்கி இருப்பவர்; பாற்கடல் பள்ளியானும், ஊழியின் தலைவனும் கோபித்தாலும் அழிவு இல்லாதவர்; ஈரேழு பதினான்கு உலகங்களிலும் உள்ள எவரையும் புறங்காட்டி ஓடச்செய்வோர்; கோழிக்கொடி உடையானுக்கும் தோற்காத அசுரர் முக்கோடி எண்ணிக்கை உடையவர்.

**விளக்கம்:** அழுவம்: பரப்பு. ஆழியான்: திருமால். ஊழியின் நாதன்: சிவன். உருத்தல்: சினத்தல். உலப்பு: அழிவு. புவனம்: உலகம். கோழியான்: கந்தன்.

(ஆரணிய பருவம். நிவாத கவச காலகேயர் வதை. இந்திரன் பார்த்தனுக்கு நிவாத கவச காலகேயர் திறத்தை உரைத்தல்.)

## கல்தவர் வணக்கினான்

234 'மற்றுஅவர் எனக்கு நாளும்
வழிப்பகை ஆகி நிற்போர்;

கல்தவர் வணக்கி னாற்கும்
கடக்கஅரும் வலியின் மிக்கோர்;

செற்றிட நின்னை அன்றி,
செகத்தினில் சிலர்வேறு உண்டோ?

வெற்றிவெஞ் சிலைகொள் வீர!
இவ்வரம் வேண்டிற்று' என்றான். (6)

**பொழிப்பு:** 'மற்ற அன்னூர் எனக்கு எப்பொழுதும் வழிவழியாகப் பகை உடையார்; கல்லே வில்லாக வளேத்த கடவுளுக்கும் வெல்லமுடியாத ஆற்றல் மிகுந்தவர்; (அவர் களே) அழிக்க உன்னேத்தவிர உலகத்தில் யார் உளார்? வென்றிக்குரிய கொடியவில்லேக் கையில் தூக்கிய வீரனே! நான் உன்னே வேண்டுவது இவ்வரம்' என்று இயம்பினன் (இந்திரன்.)

**விளக்கம்:** மற்றவர்: நிவாத கவச காலகேயர்: கல்தவர்: மலே வில். வணக்கினர்: சிவன்.

(ஆரணிய பருவம். நிவாதகவச காலகேயர் வதை. அருச்சுனனிடம் அவுணரை அழிக்கும் வரத்தை இந்திரன் வேண்டல்.)

## அரிவை ஓர் பாகன்

235 'வரிசிலே விசயன் வந்து
வான்தவம் புரிந்த வாறும்,

அரிவைஓர் பாகன் அன்பால்
அவற்கு அருள் புரிந்த வாறும்,

இரிய,என் பகையை எல்லாம்
இவன்தனி தடிந்த வாறும்,

தருமனுக்கு உரைத்தி என்ன,
தபோதன முனியும் போனன். (7)

**பொழிப்பு:** கட்டமைந்த வில்விசயன் இங்கு வந்து சிறந்த தவத்தைச் செய்த வரலாற்றையும், மங்கை பங் காளன் அவனுக்கு அருள் செய்த நிகழ்ச்சியையும், என் மாற்ருரையெல்லாம் நிலேகுலேந்து அழியுமாறு இந்தப் பார்த்தன் தனிநின்று வென்ற செய்தியையும், தருமனுக்கு உரைப்பாயாக, என்று சொல்ல, தபோதனனுகிய இருடியும் புறப்பட்டான்.

**விளக்கம்:** வான்தவம்: மேலான தவம். அரிவை: பெண். அவற்கு: அருச்சுனனுக்கு. இரிய: நிலேகுலேய. தடிந்த: வென்ற. தபோதனமுனி: உரோமசன் என்னும் இருடி.

(ஆரணிய பருவம். நிவாதகவச காலகேயர் வதை. இந்திரன் தருமனுக்குச் செய்தி அனுப்புதல்.)

## நீற்று அணி நிமலன்

236 ஏற்றிய நறுநெய் வீசி
இந்தனம் அடுக்கி னுலும்,

காற்றுவந்து உருத போது.
கடுங்கனல் கதுவ வற்ருே?

நீற்றுஅணி நிமலன் அன்ன
நின்கைவில் இற்றது ஆகில்,

சீற்றவேல் அரசன் சேனை
தென்புலம் படர்கை திண்ணம். (1)

**பொழிப்பு:** ஊற்றிய நல்ல நெய்யை அளாவி விறகுக் கட்டைகளை அடுக்கி வைத்தாலும், காற்று வந்து சேராத போது கொடிய நெருப்பு எரிக்கும் வன்மை பெறுமா? (பெருது என்பதாயிற்று.) திருநீறு அணிந்த மேலானவனுன சிவனை ஒத்த நின்கையில் உள்ள வில் ஒடிந்ததாஞல், சீறி வருகின்ற வேலை உடைய மன்னனின் படைகள் எமலோகத்தைச் சேர்வது உறுதி.

**விளக்கம்:** இந்தனம்: விறகு. கடுங்கனல்: கொடிய நெருப்பு. கதுவ: பற்றுதற்கு. வற்ருே: வன்மை பெறுமோ? நிமலன்: சிவன். அரசன்: சுயோதனன். தென்புலம்: எமலோகம். படர்கை: சேர்தல்.

**(உத்தியோக பருவம். கண்ணன் தூது. வில்லொடித்த விதுரனைக் கண்ணன் பாராட்டுதல்.)**

## ஈசன் காக்கினும்

237 இந்திரன் காக்கினும்
ஈசன் காக்கினும்,

சிந்துவின் தலைவனைத்
தேவர் காக்கினும்,

கந்தனின் சிறந்தநின்
கலிட்டன், நானேயே,

மைந்துஉறப் பொருது,அவன்
மகுடம் கொள்ளுமே. (2)

**பொழிப்பு:** தேவேந்திரன் காத்தாலும், ஈசன் புரந்தாலும், சிந்துநாட்டு மன்னனைத் தேவர்களே காப்பாற்றினாலும், முருகனைவிடச் சிறந்த நின்தம்பி நாளை வலிமையாகப் போர்செய்து அவன் மகுடத்தை வாங்குவான்.

**விளக்கம்:** சிந்துவின் தலைவனை என்பதை இந்திரன் ஈசன் இரண்டனோடும் கூட்டுக. ஈசன்: சிவன். தலைவன்: சயத்திரதன். கனிட்டன்: தம்பி. மைந்து: வலிமை. மகுடம்: மகுடமணிந்த தலை.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். தருமனிடம் **கண்ணன்** பேசுதல்.)

## கயிலை அம் பொருப்பன்

238 'வெயில்எழு வதன்முன்இவ்
விசயன் தன்னொடும்,

கயிலைஅம் பொருப்பனைக்
கண்டு மீளவும்,

துயில்உணர்த் திடும்படி
தோன்று வோம்'என,

அயில்அணி ஆழியான்
அவனொடு ஏகினான். (3)

**பொழிப்பு:** சூரியன் தோன்றுதற்கு முன்னமேயே இப்பார்த்தனோடு அழகிய கைலை மலையானைக் கண்டு திரும்பி, உங்களை எழுப்புதற்கு வந்து விடுவோம், என்று இயம்பிக், கூர்மை பொருந்திய சக்கரத்தை உடைய கண்ணன் பார்த்தனோடு சென்றான்.

**விளக்கம்:** வெயில்: ஆதவன். பொருப்பன்: சிவன். துயில் உணர்த்திடும்படி: உறக்கத்தினின்றும் எழுப்பத்தக்கவாறு. அயில்: வேல்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். கண்ணன் தருமனிடம் விடைபெற்றுப் பார்த்தனுடன் கைலை செல்லல்.)

## அருவரையவன்

239 மருவரு கானக
 மலரிஞல் எமைப்

பொருஅரு பூசனை
 புரிதி, ஐய!நீ

இருவரும் ஒருவரே
 என்பது, இன்றுபோய்,

அருவரை அவன்அடி
 அடைந்து காண்டியே. (4)

**பொழிப்பு :** மணம் பொருந்திய காட்டுப் பூவிஞல் எம்மை ஒப்பற்ற பூசை செய்வாயாக, ஐயனே! நான், சிவன் ஆகிய இருவரும் ஒருவரே என்பதை இன்று சென்று அருமையான மலையில் வாழும் அவன் அடியை அடைந்து நீ காண்பாய்.

**விளக்கம் :** மரு: மணம். கானகம்: காடு. பொரு: ஒப்பு. ஐயன்: பார்த்தன். இருவர்: திருமால், சிவன். அருவரை: கைலே. அவன்: சிவன்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். சிவபூசை செய்ய விரும்பிய அருச்சுனனைத் தன்னைப் பூசிக்குமாறு கண்ணன் சொல்லுதல்.)

## முருகு இதழிச் சுடர்

240 'திருநசினைத் தொடும்கடுகி, பாசறையில்
 புகுதலுமே செங்கண் பூதம்

பெருகுவிழி நீர்சொரிய அடர்ந்தலும்பின்-
 -விட்டு அரனைப் பேட்பின் போற்றி,

முருகுஇதழிச் சுடர்அருளும் படைக்கலம்பெற்று
 இவ்வண்ணம் முடித்தான் அம்மா!

குருகுகிரி எறிந்தோனை நிகர்த்தவன்தன்
 விறல்எவர்க்கும் கூறல் ஆமோ?' (5)

**பொழிப்பு:** திருகிய கோபத்தோடு விரைந்து (அசுவத்தர்மன்) பாடி வீட்டினுள் நுழையவே (அங்கிருந்த சிவந்த கண்ணை உடைய பூதமானது அசுவத்தாமன் கண்களில் நீர் பெருகி ஓடுமாறு அவனை மோத, அவன் பின்வாங்கிச் சென்று, சிவனை விரும்பி வணங்கி, மணம் வாய்ந்த கொன்றை மாலையை அணிந்த சோதிவடிவான சிவன் அருளிய படையைப்பெற்று, இவ்வாறு முடித்துவிட்டான்; கிரௌஞ்ச மலையை வென்றவனை ஒத்த அசுவத்தாமனின் ஆற்றலை யாரால் அறைய முடியும்? (எனக் கண்ணன் கூறினான்.)

**விளக்கம்:** திருகுசினம்: முதிர்ந்த கோபம். பாசறை: பாடிவீடு. முருகு: மணம். இதழி: கொன்றை. சுடர்: சிவன். அம்மா, அசை. குருகு: பறவை. கிரி: மலை. எறிந்தோன்: முருகன்.

(சௌப்திக பருவம். பதினெட்டாம் போர். கண்ணன் பாண்டவர்க்குச் சில நிகழ்ச்சிகளை உரைத்தல்.)

## சிவனும் என்கணையை அஞ்சும்

241 அவன்மொ ழிந்தமொழி தன்செ விப்படலும்,
'அருகுஇ ருந்துஅமுது அருந்தும்நீ,

இவனு டன்சிலர் பகைக்கின் மற்றுஅவர்தம்
இசையும் ஆண்மையும் இயம்புவாய்!

புவனம் ஒன்றுபட வரினும் என்தனொடு
பொருவர் ஆயின்எதிர் பொரவிடாய்!

சிவனும் என்கணையை அஞ்சும்!' என்றுநனி
சீறினன், இரவி சிறுவனே. (1)

**பொழிப்பு :** வீட்டுமனாகிய அவன் சொன்னசொல், தன் காதில் படலும், சூரியன் மைந்தனாகிய கன்னன், (வீட்டுமனைப் பார்த்து) 'பக்கத்தே இருந்து உணவு உண்ணும் நீ, இந்தத் துரியோதனனுடன் யாராவது எதிர்த்தால் அவர்களுடைய புகழையும் ஆண்மையையும் சொல்லிக் கொண்டே இருப்பாய்! உலகம் முழுதும் திரண்டு வந்தாலும், என்னொடு அவர்கள் போர் செய்வாரானால் எதிர்த்துப் போர் செய்ய என்னை விடமாட்டாய்! சிவபெருமானும் என் அம்புக்கு அஞ்சுவான்' என்று சொல்லிப் பெரிதும் சீறி எழுந்தான்.

**விளக்கம் :** இசை: புகழ். புவனம்: உலகம். பொருதல்: போர் செய்தல். நனி: நன்கு. இரவி சிறுவன்: கன்னன்.

(உத்தியோக பருவம். கண்ணன் தூது. வீட்டுமனோடு கன்னன் சீறுதல்.)

## பங்கிருந்த உமாபதி

242 'அங்குஇருந்து "சயத்திரதன் ஆவிகவர்ந்
திடுவல்!"என ஆண்மை கூறி,

பங்குஇருந்த உமாபதிபால் பணிந்து,வரம்
பெறச்சென்றான் பார்த்தன் ஆகில்,

கொங்குஇருந்த தாராய்!நின் குடைநிழற்கீழ்
இதுகாலம் கூட்டம் கூடி,

இங்குஇருந்த ஏழையரேம், என்செயமற்று
இருக்கின்றேம்?' என்று சொன்னான். (2)

பொழிப்பு: 'அவ்விடத்து இருந்துகொண்டு, சிந்து மன்னனின் உயிரை வாங்குவேன், என்று ஆண்மையாகச் சொல்லி, பகுதியிலே உமையவளைக் கொண்ட பதியாகிய சிவனிடம் வணங்கி வரம் வாங்கப்போனான் பார்த்தன் என்றால், மணம் இருந்த மாலையை அணிந்தவனே! உன் குடை நீழலிலே இவ்வளவு காலமாகக் கூட்டம்போட்டுக் கொண்டு இங்கு வீற்றிருக்கின்ற ஏழையரேமாகிய நாங்கள் என்ன செய்வதற்கு இருக்கின்றோம்' என்று இயம்பினான் (அங்கர் கோமான்.)

**விளக்கம்:** பங்கு: பக்கம். கொங்கு: மணம். ஏழையர்: இல்லாதவர்கள்.

(துரோண பருவம். பதின்மூன்றாம் போர். கன்னன் கடோற்கசன் முன்னிலையில் துரியோதனனைப் பார்த்துப் பேசுதல்.)

## சிவன்வந்து தேர் விடினும் கொல்வேன்

243 'அவன்இன்றுஎன் மணிநெடுந்தேர் கடவும் ஆகில்
அருச்சுனனுக்கு அடல்ஆழி யவனே அன்றிச்,

சிவன்வந்து தேர்விடினும், கொல்வேன் அந்தத்
தேர்நின்றோர் இருவரையும்; செங்கோல் வேந்தே!

பவனன்சேய் முதலான துணைவர் ஓர்ஓர்
பகழிமுனை தனக்குஆற்றார்; பரவை ஆடைப்

புவனங்கள் அனைத்தையும்நின் குடைக்கீழ் ஆக்கி.
புரிதிறல்வா கையும்நினக்கே புனைவிப் பேனே.' (3)

பொழிப்பு: 'அந்தச் சல்லியன் இன்று என்னுடைய அழகிய நீண்டதேரை ஓட்டுவானானால், பார்த்தனுக்கு வலிய சக்கரக் கையனை திருமாலல்லாமல், சிவபிரானே வந்து இரதத்தை ஓட்டினாலும், அந்தத் தேரில் நின்ற இருவரையும் கொன்று முடிப்பேன்; செங்கோல் தாங்கிய மன்னனே! காற்றின் மைந்தன் முதலான துணைவரெல்லாம் ஒவ்வொரு அம்பின் நுனிக்குமுன் நிற்கமாட்டார்கள்; கடலை ஆடையாகப்புனைந்த உலகம் முழுதையும் உன்குடைக்கீழ்க்கொண்டு வந்து செய்யத்தக்க வலிய வெற்றி மாலையையும் உனக்கே சூடுவேன்' (என்று பேசினான் கன்னன்.)

**விளக்கம் :** ஆழியவன்: கண்ணன். தேர் நின்றார் இருவர்: பார்த்தனும் சிவனும். செங்கோல் வேந்தன்: சுயோதனன். பவனன்: காற்று. சேய்: வீமன். பகழி: அம்பு. முனை: நுனி. பரவை: கடல். வாகை: வெற்றி மாலை. ஆழியவனே அன்றிச், சிவன்வந்து தேர் விடினும் கொல்வேன் என்றமையால் அவனைவிடச் சிவன் வலியவன் என்றவாறு.

(கன்னபருவம். பதினேழாம் போர். சல்லியனைச் சாரதியாக்கக் கன்னன் வேண்டல்.)

## இருண்ட கண்டர்

244 'நஞ்சுஒற்றம் பெறநுகர்வுற்று இருண்ட கண்டர்
நல்தொண்டர் வடிவம்என, நண்ணும் வெண்ணீற்று
அம்சோற்று மடல்கைதை கமழும் கானல்
அகல்குருநாட்டு அரிஏறே! ஆனின் தீம்பால்
வெஞ்சோற்றோடு இனிதுஅருந்தி, அமுதுஅ ருந்தும்
விண்ணவர்போல், இந்நெடுநாள் விழைந்து வாழ்ந்தேன்;
செஞ்சோற்றுக் கடன்இன்றே கழியேன் ஆகில்,
திண்தோள்கள் வளர்த்ததனால் செயல்வேறு உண்டோ? (4)

**பொழிப்பு :** விடத்தை, ஆரவாரம் அடங்க உண்டு கறுத்த கழுத்தைஉடைய சிவபெருமானின் நல்ல அடியார்கள் உருவம் என்று சொல்லுமாறு, பொருந்திய வெண்ணீறு போன்ற அழகிய மகரந்தத்தைப் பெற்ற மடல்வாய்ந்த தாழை மணக்கின்ற கடற்பகுதி சூழ்ந்த, அகன்ற குருநாட்டின் ஆண் சிங்கமே! பசுவின் இனிய பாலை விரும்பத்தக்க சோற்றோடு இனிமையாக உண்டு, அமுதுண்ட அமரர்களைப்போல் இவ்வளவு நீண்ட காலமாக விரும்பி வாழ்ந்து வந்தேன்; செஞ்சோற்றுக்கடனை இன்று கழியாது விட்டுவிடுவேனானால். திண்ணிய தோள்களை வளர்த்ததனால் பயன் ஏதும் உண்டா? (என்றான் கன்னன்.)

**விளக்கம் :** ஒற்றம் பெற: ஆரவாரம் அடங்க. கண்டர்: சிவபிரான். தொண்டர்: அவன் அடியார். தாழையின் மகரந்தப்பொடி வெண்ணீறு பூசிய சிவனடியாரை ஒத்தது என்க.

கானல்: நெய்தல் நிலப்பகுதி. அரிஏறு: சிங்க ஆண். ஆன்: பசு. இப் பாடல் கன்னனின் செய்ந்நன்றி அறிதலைப் புலப் படுத்துகின்றது.

'ஓர்ஊரும் ஒருகுலமும் இல்லா என்னை
உங்கள்குலத்து உள்ளோரில் ஒருவன் ஆக்கி,

தேர்ஊரும் அவர்மனைக்கே வளர்ந்த என்னைச்
செம்பொன்மணி முடிசூட்டி, அம்பு ஏாசி

நீர்ஊரும் புவிபாலர் பலரும் போற்ற,
நின்னிலும்சீர் பெறவைத்தாய்! நினக்கே அன்றி,

ஏர்ஊரும் கதிர்முடியாய்! உற்ற போரில்
யார்க்குஇனிஎன் உயிர்அளிப்பது? இயம்பு வாயே!'

என்ற அடுத்த பாடல் இப்பாடலுக்குப் பெரிதும் அரண் செய்யும்.

(கன்ன பருவம். பதினேழாம் போர். கன்னனின் செய்ந் நன்றி அறிதல்.)

## நாம் இது முன்னமே அறிவோம்

245 'ஆடியா னனந்தன் மதலையர் விரகால்
ஆடிய சூதினுக்கு அழிந்து,

காடுதாம் உறையும் கடனினர் அவரில்
கடவுள்நா யகன்தரு காளை;

நீடுபேர் அமரில் பகைவரைச் செருக்கும்
நினைவினுல், நெருப்பிடை நம்மை

நாடியே, அரிய தவம்புரி கின்ருன்;
நாம்இது முன்னமே அறிவோம்.' (1)

**பொழிப்பு :** கண்ணுடி முகத்தினனுகிய திருதராட்டிர னின் மக்கள் செய்த சூழ்ச்சியால் சூதாடித் தோற்றுக் காட்டு வாழ்க்கையை மேற்கொண்ட கடமையை உடையவர்களில் தேவேந்திரன் பெற்ற காளை இவன்; நீண்ட பெரிய போரில் பகைவரை அழிக்கும் எண்ணத்தால் தீயில் நின்று நம்மை நாடி அரியதவம் செய்கின்ருன்; நமக்கு இது முன்னரே தெரியும். (என்ருன் சிவன்.)

**விளக்கம் :** ஆடி ஆனனன்: பொட்டைக் கண்ணன். மதலையர்: துரியோதனுதியர். கடவுள் நாயகன்: தேவேந் திரன். காளை: பார்த்தன். செருத்தல்: அழித்தல்.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. தேவியிடம் சிவன் பேசுதல்.)

## மனத்தை உறைபதி ஆக்கினுன்

246 பருகுநீர் துறந்து, காற்றும்வெவ் வெயிலும்
பாதவங் களின்சினை உதிர்ந்த

சருகுமே ஒழிய, காய்கனி கிழங்கும்
தான்இனிது அருந்துதல் தவிர்ந்தான்;

உருகுமா மனத்தை, நாம்உவந்து இருத்தற்கு
உறைபதி ஆக்கி,நம் இடத்தே

செருகினுன், உணர்வை; யாவரே இவன்போல்
செய்தவம் சிறந்தவர் என்ருன். (2)

பொழிப்பு: 'உண்ணுகின்ற நீரை ஒழித்து, காற்றையும் கொடிய வெயிலையும் மரங்களின் கிளைகளினின்றும் உதிர்ந்து வீழும் சருகுகளையுமேதவிரக் காய்கள், பழங்கள், கிழங்கு களைக்கூட உண்பதை விட்டுவிட்டான்; உருகுகின்ற சிறந்த உள்ளத்தை, நாம் மகிழ்ந்து தங்குதற்கு இருப்பிடமாகச் செய்துகொண்டு, உணர்ச்சியை நம்மிடத்தே பதித்துவிட் டான்; இவனைப்போல் தவம் செய்வதிலே சிறந்தவர் யார் உளர்' என்றான் (சிவன்.)

**விளக்கம்:** பாதவம்: மரம். சினை: கொம்பு. தவிர்தல்: நீக்குதல்.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. பார்த்தன் தவச் சிறப்பைப் பார்வதியிடம் பரமன் பாராட்டிப் பேசுதல்.)

## சிறுவன் நீயோ?

**247** கூறியசொல் கொண்டுஅறிந்து வேடன் மீண்டும்
குருகுலத்தோர் ஐவருளும் குனிவில் கற்று,
சீறிவரு துருபதனைத் தேரில் கட்டி,
சென்று,குரு தக்கிணைசெய் சிறுவன் நீயோ?
வீறியஎம் குலத்தில்ஒரு வேடன் தன்னை
வின்மைபொருது அவன்நடக்கை விரலும் கொண்டாய்!
பேறுஅற அன்று ஒருமுனிவன் வார்த்தை கேட்டு,
பிளந்தனைபல் வேடுவரைப் பிறைவாய் அம்பால். (3)

பொழிப்பு: (பார்த்தன்) சொன்ன பேச்சைக் கேட்டு அறிந்துகொண்டு, வேடனாகிய சிவன் மீண்டும் பேசுவான்: குருகுலத்தோர் ஐவருக்குள் வளைந்த வில் தொழிலைப் படித்து, சீற்றம்கொண்டு, துருபத மன்னனைத் தேர்க்காலிலே கட்டி வந்து, குரு தக்கிணை செலுத்திய சிறுவன் நீதானோ? வீரம் வாய்ந்த எம் குலத்தில் தோன்றிய ஒரு வேடனை அவன் வில்லாற்றலில் பொறாமை கொண்டு, அவன் கையின் பெரு விரலை அறுக்கச்செய்தாய்! ஒரு முனிவனின் பேச்சைக் கேட்டு, அந் நாள் பல வேடுவர்களைப் பேரே இல்லாது அற்றுப்போமாறு பிறைவாய்க்கணையால் பிளந்து தள்ளினாய்.

**விளக்கம் :** வீரிய, பேர் அற என்ற இரண்டும் எதுகை நோக்கி வீறிய, பேறு அற எனத்திரிந்து நின்றது. ஒரு வேடன், ஏகலைவன். ஒரு முனிவன், மாடுகளை இழந்த ஓர் அந்தணன். ஏகலைவன் கைப்பெருவிரலைப் பார்த்தன் குரு தட்சணையாகப் பெறச்செய்தான் என்பதும் ஒரு முனிவனின் பொருட்டுப் பல வேடுவர்களைப் பிளந்தானென்பதும் பழங்கதை.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. சிவவேடன் பார்த்தனிடம் வேடப் பழம்பகையை எடுத்துக் காட்டுதல்.)

## அடியும் உண்டனன்; உதையும் உண்டனன்.

248 'நின்னுடன் அமர்செய்து,
நின்வில் நாண்அறுத்து,

அங்நெடு வில்லினல்
அடியும் உண்டனன்;

உன்அரு மல்லினல்
உதையும் உண்டனன்;

என்,இனி உன்கருத்து?'
என்று கூறினன். (4)

**பொழிப்பு :** 'நின்னோடு போர் செய்து, உன் வில்லின் நாணை அறுத்து, அந்த நீண்ட வில்லினல் அடியும் பட்டேன்; நின்னுடைய அருமையான மற்போரினல் உதையும் பட்டேன்; இனி உன் எண்ணம் என்ன?' என்று இயம்பினன் (சிவபெருமான்.)

**விளக்கம் :** மல்: மற்போர்.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. சிவன் பார்த்தனிடம் தன் பாட்டைப் பகர்தல்.)

# ௯. வீமன் மொழி

மூன்று பாடல்

## கடவுள் கங்கைநீர் முடித்தான்

249 போர்முடித்தான்; அமர்பொருது, புலம்புறுசொல்
பாஞ்சாலி பூந்தண் கூந்தல்

கார்முடித்தான்; இளையோர்முன் கழறியவஞ்
சினம்முடித்தான்; கடவுள் கங்கை

நீர்முடித்தான் இரவுஒழித்த நீஅறிய,
வசைஇன்றி, நிலைநின்று ஓங்கும்

பேர்முடித்தான்; இப்படியே யார்முடிந்தார்?
இவனுடனே பிறப்ப தேநான்! (1)

**பொழிப்பு:** அமரை முடித்துவிட்டான்; போர் வென்று, புலம்பிய துரோபதையின் மாலையணிந்த குளிர்ந்த கூந்தலாகிய மேகத்தை முடித்து விட்டான்; தம்பிமார், முன்னே செய்த சபதத்தையெல்லாம் முடித்துவிட்டான்; தெய்வக் கங்கை நீரைச் சடையில் முடித்த சிவனது பலியேற்கும் தொழிலை ஒழித்துக்கட்டிய உனக்குத் தெரிய. இழிவு இல்லாமல்நின்று உயரக்கூடிய பேர் வாங்கி முடித்தான்; இப்படி யார் செய்தார்? இவனுடனே நான் பிறந்தது எவ்வளவு சிறப்பு?

**விளக்கம்:** இப் பாடல் கண்ணனை நோக்கித் தருமன் செயலுக்கு வருந்தி வீமன் விளம்புவது. தருமனின் அளவற்ற பொறுமைக்கு ஆற்ருது வீமன் கூறிய உரை என்க.

*'அரவுயர்த்தோன் கொடுமையினும் முரசுயர்த்தோய்!*
*உனது அருளுக்கு அஞ்சினேனே'*

எனத் தருமனைப் பார்த்து முன்னும் சொன்னுன் வீமன். அருள் அளவுக்குமேற்பட்டுவிட்டால் தாங்க முடியாதுதானே? மற்றப்படி,

*'அன்புறு தருமனுக்கு அநுசன் ஆயினேன்'*

என்று இயம்பித் தருமனை மதிக்கும் பார்த்தனைவிட வீமன் தருமனிடம் குறைந்த மதிப்பு உடையவன் என எண்ண வேண்டுவது இல்லை. சிவன் பலி ஏற்றதைத் திருமால் ஒழித்தான் என்ற கதையை ஆசிரியர் வேறு இடத்தும் கூறுவர்.

(உத்தியோக பருவம். கண்ணன் தூது. வீமன் கண்ணனிடம் பேசல்.)

## பங்கெலாம் மரகதமாம் பவளநிறப் பொருப்பு

250 'சங்கலார் இடைவளைத்த சக்கரத்தை
உடைப்பதற்குத் தமியேன் எய்தி,

அங்குஉலா வருப்இரதத்து அரசரையும்
தொலைத்து,உன்னை அடுப்பான் வந்தேன்;

பங்குஎலாம் மரகதமாம் பவளநிறப்
பொருப்புஉதவு பைம்பொன் கொன்றைத்

தொங்கலால் உனைவளைத்த சூழ்ச்சியைஇன்று
அறிந்திலனே, தோன்ற லே! நான்?' (2)

**பொழிப்பு:** 'மாற்றார் இடையே கட்டிய சக்கரக் கோட்டையை உடைத்துத் தள்ள அடியேன் வந்து, அங்கு உலாவி வருகின்ற தேர் மன்னர்களையெல்லாம் அழித்து, உன்னை வந்து அடையப் புறப்பட்டேன்; பக்கத்தில் பச்சைக் கொடியை வைத்துக்கொண்ட பவளம் போன்ற நிறத்தை உடைய மலையாகிய சிவபிரான் அளித்த பசிய பொன்னிற மான கொன்றை மாலையால் உன்னை வளைத்துக்கொண்ட தந்திரத்தை இன்று நான் அறியாது போய்விட்டேனே, எங்கள் குலத் தோன்றலே!'

**விளக்கம்:** சங்கலார்: பகைவர். சக்கரம். சக்கர வியூகம். பொருப்பு: சிவன்.

(துரோண பருவம். பதின்மூன்ரும் போர். அபிமன் பிரிவுக்கு வீமன் இரங்கல்.)

## விடையோன் ஈந்த வெங்கதை

251 'மின்னுமல் இடித்ததுஎன வீழ்ந்தபொலந்
தொடையாலும், விடையோன் ஈந்த

பொன்ஆர்வெங் கதையாலும், அல்லதுஅபி
மனைஅமரில் பொரவல் லார்யார்?

தன்ஆண்மை நிலைநிறுத்தி, சங்கம்முழக்
கியவீர சிங்க சாப

என்ஆனை இறந்துபட, இன்னமும்நான்
இவ்வுயிர்கொண்டு இருக்கின் றேனே.' (3)

பொழிப்பு: மின்னல் இல்லாமல் இடி வீழ்ந்ததுபோல, போட்ட அழகிய மாலையாலும் சிவபெருமான் கொடுத்த தங்க நிறமான கொடிய தண்டினுலுமல்லாமல், அபிமனைப் போரில் வெல்லவல்லவர் யார் இருக்கின்றார்? தன் ஆண்மையை நிலை நிறுத்திவிட்டுச் சங்கத்தை ஊதிய வீரனுகிய என்னுடையவனுன சிங்கக்குட்டி இறந்து வீழ, நான் இன்னமும் இவ்வுயிர் சுமந்து இருக்கின்றேன் அல்லவா?

விளக்கம்: சாபம்: குட்டி. என்னனை: என்னுடையவனை.

'என்னனை என்னப்பன் என்பார்கட்கு இன்னமுதை'

என்பது திருவாசகம்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். அபிமன் ஆற்றலை வீமன் பாராட்டி அரற்றல்.)

இரு, இரு இடங்களில் எழுவர் மொழி

10 கடோற்கசன் மொழி

11 துரோணன் மொழி

12 தருமன் மொழி

13 விதுரன் மொழி

14 மாதலி மொழி

15 உரோமசமுனிவன் மொழி

16 அபிமன் மொழி

# 10. கடோற்கசன் மொழி

## அரன்வாழ் கயிலாயம்

252 தன்திரு மைந்தனை மௌலிது
ணித்த சயத்திர தன்தனை,"வாள்

வென்றிகொள் காவலர் காவல்மி
குப்பினும், வெயிலவன் விழ்வதன்முன்,

கொன்றிடு வேன்;அது தப்பின்அ
ருங்கனல் ஊடு குதித்திடுவேன்!"

என்றுமொ ழிந்து,அரன் வாழ்கயி
லாயமும் எய்தினன் வில்விசயன். (1)

**பொழிப்பு:** தனது அழகிய மைந்தனாகிய அபிமனைத் தலையை வெட்டிய சிந்து மன்னனை, "வாள் தாங்கிய வெற்றி கொண்ட காவலாளிகள் காவல் மேம்பட்டிருப்பினும், ஆதவன் சாய்வதற்கு முன்னே கொல்வேன்; அது தவறினால், அரிய தீயில் வீழ்ந்து சாவேன்" என்று சொல்லிச் சிவன் வாழும் கைலைமலையை அடைந்தான் வில்லுக்குரிய விசயன், (என்றான் கடோற்கசன்.)

**விளக்கம்:** மௌலி: முடி அணிந்த தலை. சயத்திரதன்: சிந்து நாட்டு மன்னன்.

(துரோணபருவம். பதின்மூன்றும் போர். துரியோதனன் கூட்டத்தில் கடோற்கசன் பேச்சு.)

## சிவன் எரிசெய் புரம்

253 இவன்மொழிந்த இகழ்உரைகேட்டு இடிம்பன்மரு
மகன்வெகுளுற்று, 'என்சொன் னாலும்,

அவனிதலம் முழுதும்இனி அரசாள
நினைந்திருந்தீர்! அறிவி லீர்காள்!

சிவன்எரிசெய் புரம்போலும் பாடிவீடு
அழல்ஊட்டி, சேனை யாவும்

பவனன்மகன் மகன்என்னும் பரிசுஅறியத்
தொலைத்துஈடு படுத்து வேனே!' (2)

**பொழிப்பு:** இவன் (கன்னன்) பேசிய இகழ்ச்சிப் பேச்சைக்கேட்டு, இடிம்பனின் மருமகனான கடோற்கசன், சினம் கொண்டு, 'என்ன சொன்னாலும், உலகத்தை எல்லாம் இனி அரசாள வேண்டும் என்ற எண்ணத்திலேயே இருக் கின்றீர்! அறிவு அற்றவர்களே! சிவன் எரித்த திரிபுரத்தைப் போல, இந்தப் பாசறையை நெருப்புக்கு இரையாக்கி, உங்கள் படைகள் முழுதும் காற்றின் மைந்தனுக்கு மைந்தன் என்னும் சிறப்பை அறிந்து கொள்ளுமாறு, உங்களைத் தொலைத்து, உங்கள் வலியை அழிப்பேன்,' (என்று சொன்னான்).

**விளக்கம்:** இடிம்பன், வீமனின் மனைவிகளுள் ஒருத்தி யாகிய இடிம்பியின் உடன் பிறந்தவன். இடிம்பி, கடோற் கசனின் தாய். பவனன்: காற்று. அவன் மகன்: வீமன். அவன் மகன்: கடோற்கசன். ஈடு: ஆற்றல். படுத்துதல்: அழித்தல்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். துரியோதனன் குழுவில் கடோற்கசனின் பெருமிதப் பேச்சு.)

## 11. துரோணன் மொழி

### காளகண்டன்

254 கந்த மகவை, ஈன்ற
காள கண்டன் அருளால்,

வந்த மகவுஇம் மகவும்,
வறுமை வளர, வளர்ந்தான்;

இந்த மகவும் ஐஆண்டு
இளமை அறியாது; எனலால்,

தந்த மகவை, நோக்கி,
தாயும் பெருகத் தளர்ந்தாள். (1)

**பொழிப்பு:** கந்தன் என்னும் பிள்ளையைப் பெற்ற நஞ்சைக் கழுத்திலடக்கிய சிவனருளால் வந்த, குழந்தை யாகிய இக் குழவியும் வறுமை வளர இவனும் வளர்ந்தான்; இந்தப் பிள்ளைக்கு இளமை அறியாத ஐந்து ஆண்டு என்று சொல்லத்தக்க பருவத்தில் பெற்ற மகவைப்பார்த்து அன்னை யும் பெரிதும் அயர்ச்சி அடைந்தாள்.

**விளக்கம்:** மகவு: அசுவத்தாமன். தாய்: துரோணன் மனைவி.

(ஆதிபருவம். வாரணாவதம். வீட்டுமனிடம் துரோணன் தன் பழங்கதை சொல்லல்.)

## அரனார் திருஅருள்

255 உரனுல்வரு தேர்ஒன்றினில்
உற்ருேர்இரு வரையும்,
" நரநாரணர் இவர்"என்பர்கள்
ஞானத்தின் உயர்ந்தோர்;
அரனார்திரு வருளால்முனை
அடல்வாளிகள் பலவும்,
வரனுல்உயர் மறையும்,பிறர்
மற்றுஆர்நனி பெற்ருர்? (2)

**பொழிப்பு:** வலிமையினுல் வருகின்ற ஒரு தேரில் பொருந்திய இவ்விருவரையும் இவர்தாம் நர நாரணர்கள் என, அறிவில் மேம்பட்டவர் கூறுவார்கள்; சிவபிரானார் திருவருளால் போர்முனையில் வெல்லத்தக்க அம்புகள் பல வற்றையும் வரத்தினுல், உயர்ந்த அவற்றிற்குரிய மந்திரங் களையும் வேறு எவர் இவ்வளவு நன்ருக அடைந்தார்?

**விளக்கம்:** உரன்: வலி. நர நாரணர்: பார்த்தனும் கண்ணனும்.

(துரோண பருவம். பதினுன்காம் போர். கண்ணனையும் பார்த்தனையும் துரோணன் வாயாரப் புகழ்தல்.)

## 12. தருமன் மொழி

### மதிஇருந்த நதிவேணி மங்கை பாகன்

256 “யான்புரிந்த தவம்உலகில் யார்புரிந்தார்,
அவனிபரில்? இசையின் வீணைத்

தேன்புரிந்த தெள்அமுதால் அமுதுஉண்டோர்
செவிஇரதம் தெவிட்டு விப்பாய்!

மான்புரிந்த திருக்கரத்து, மதிஇருந்த
நதிவேணி மங்கை பாகன்,

தான்புரிந்த திருக்கூத்துக்கு இசையமகிழ்ந்து,
இசைபாடும் தத்வ ஞானி! (1)

**பொழிப்பு:** தேன் கலந்த தெளிந்த அமுதமென்னும் வீணையின் இசையால், அமுதுண்ட அமரர்களின் காதுகள் தெவிட்டுமாறு சுவையைப் பாய்ச்சுகின்றவனே! மான் படிந்த அழகிய கையையும் திங்களும் கங்கையும், தங்கிய சடையையும் உடைய உமையொரு கூறுடையோன் ஆடிய அழகிய கூத்துக்குப் பொருந்தக் களித்து இசை பாடுகின்ற உண்மை அறிஞனே! (நீ எழுந்தருள) நான் செய்த தவம் இந்த உலகத்தில் யார் ஆற்றினர் மன்னர்களுக்குள்?

**விளக்கம்:** அவனிபர்: உலகாளும் மன்னர். அமுதுண்டோர்: தேவர். இரதம்: இரசம்.

(சபா பருவம். இராசசூயச் சருக்கம். தருமன் நாரதனை வரவேற்றல்.)

### அவன் அருள் பெறுதி ஐயா!

257 பரிவுடன் முனிவன் மாற்றம்
பணிந்து,தன் தலைமேல் கொண்டு,

வரிசிலைக்கு உலகம் என்னும்
மகபதி மகனை நோக்கி,

'கிரிசனை உன்னி, வெள்ளிக்
கிரிப்புறம் எய்தி, யார்க்கும்
அரியநல் தவம்செய் தேனும்,
அவன்அருள் பெறுதி, ஐயா!' (2)

**பொழிப்பு:** அன்போடுகூட முனிவன் சொல்லை வணங்கித்தன் தலைமீது தாங்கி, வில்லுக்கு உலகம் மதிக்கும் இந்திரன் மைந்தனைப் பார்த்து, கைலைத் தலைவனை நினைந்து, வெள்ளிமலைப் பக்கம் சென்று, எவரும் செய்தற்கு அரிய நல்ல தவத்தைச் செய்தாயினும் அவனருளைப் பெற்றுவா, ஐயா!

**விளக்கம்:** பரிவு: அன்பு. முனிவன்: வியாதன். மகபதி: இந்திரன். மகன்: பார்த்தன். கிரிசன்: சிவன். வெள்ளிக்கிரி: கைலைமலை. அவன்: சிவன். ஐயா என்பது அருச்சுனனை.

(ஆரணிய பருவம். அருச்சுனன் தவநிலை. தருமன் பார்த்தனைத் தவம்புரிய ஏவல்.)

## 13. விதுரன் மொழி

### புரிசடையவன்

258 நீதிநூல் வரித்து நெஞ்சம்
தீயவர் ஆடும் மாயச்
சூதினுல் வென்று கொள்கை
தோற்றமும் புகழும் அன்று;
போதில்நான் முகனும், மாலும்,
புரிசடை யவனும், கேள்வி
ஆதிநான் மறையும், உள்ள
அளவும்இவ் வசைஅ ருதே. (1)

**பொழிப்பு:** தீய எண்ணங்களால் உந்தப்பட்டு, உள்ளம் தீயவர்கள் ஆடுகின்ற மாயச் சூதினால் வென்று, நாட்டை அடைதல் இனிமையும் புகழும் ஆகா; தாமரைவாழ் பிரமனும், திருமாலும், முறுக்கிய சடையை உடைய சிவனும் கேள்விக்கு உரிய பழைய நான்கு மறைகளும் இருக்கின்ற வரையும் இந்தப்பழி நீங்காது.

**விளக்கம்:** கொள்கை: நாட்டைக் கொள்ளுகை. தோற்றம்: காட்சிக்கு இனிமை. போது: தாமரைப்பூ. வசை: இழிவு.

(சபாபருவம்: சூதுபோர். துரியோதனனிடம் விதுரன் மாயச் சூதை வெறுத்துப் பேசுதல்.)

## அம்பிகாபதி

259 அன்று போல்அலன் அருச்சுனன்;
அம்பிகா பதிபால்

துன்று போர்புரி தவத்தினல்
சுடுகணை பலபெற்று,

அன்று போரினில் அவுணரை
அமரருக்கு ஆக

வென்று, போனகம் நுகர்ந்துபொன்
தருமலர் வேய்ந்தான். (2)

**பொழிப்பு:** முன்னாளில் இருந்தவனல்லன் பார்த்தன்; சிவபிரானோடு நெருங்கி அமர்செய்து, தவத்தின் காரணமாகச் சிவனிடம் எரிக்கும் அம்புகள் பல வாங்கி, அன்றே போரில் அவுணர்களைத் தேவர்கட்காக வெற்றிகொண்டு, உணவு அருந்தித் தங்கத்தாலான பூமாலையைச் சூடிக்கொண்டான்.

**விளக்கம்:** அம்பிகாபதி: சிவன். அவுணர்: நிவாத கவச காலகேயர். அன்று அவுணரை வென்றதும் போனகம் நுகர்ந்ததும் பொன்மலர் வேய்ந்ததும் தேவலோகத்தில்.

(விராட பருவம். நிரைமீட்சிச் சருக்கம். விதுரன் பார்த்தன் சிறப்பை வாயாரப் பாராட்டுதல்.)

# 14. மாதலி மொழி

## செஞ்சடை வானவன்

260 'செப்பு உரத்தினில்,
செஞ்சடை வானவன்
முப்பு ரத்தை
முனிந்தஅந் நாளினும்,
தப்பு உரத்தர்;
சதமகன் தன்னைவென்று,
இப்பு ரத்தை
இவர்கவர்ந் தார்'என. (1)

**பொழிப்பு :** சொல்லத் தக்க வலிமையினால், சிவந்த சடையை உடைய தேவனாகிய சிவன் முப்புரத்தைச் சினந்த அந்தக் காலத்திலும் தப்பிய ஆற்றலர்; நூறுவேள்வி செய்த இந்திரனை வென்று, இந்த நகரத்தை இவர்கள் பறித்துக் கொண்டனர், என்று இயம்பினான் (மாதலி.)

**விளக்கம் :** உரம்: வலிமை. சதமகன்: நூறு வேள்வி செய்த இந்திரன். சதம்: நூறு. மகம்: வேள்வி.

(ஆரணியபருவம். நிவாதகவச காலகேயர் வதை. நிவாத கவசர் கதையை மாதலி என்னும் சாரதி பார்த்தனுக்குச் சொல்லல்.)

## உகாந்த நாதன்

261 வருமுப் பொழுதும் மறைஅந்தணர்
அம்கை வாரி,
உருமுப் புயல்போல் கவர்வோர்;முன்
உகாந்த நாதன்
பொருமுப் புரத்தில் உறைதானவர்
போனும் வீரர்;
இருமுப் பதினா யிரம்வஞ்சகர்
இங்கும் உண்டால். (2)

**பொழிப்பு:** வருகின்ற மூன்று காலமும் மறை அறிந்த அந்தணர் அழகிய கைகளால் இறைக்கும் தருப்பண நீரை, இடிக்கின்ற மேகத்தைப்போல் பறித்துக்கொள்ளுவர்; அந் நாளில் ஊழி முதல்வனாகிய சிவன் அழித்த முப்புரத்தில் தங்கிய அசுரர்களைப்போன்ற வீரர்கள், அறிபதினாயிரம் கொடியவர்கள் இங்கும் இருக்கின்றார்.

**விளக்கம்:** கை வாரி: முன்னோர்களைக் குறித்துக் கையினால் இறைக்கும் நீர். உருமு: இடி. புயல்: மேகம். உகாந்த நாதன்: உலக முடிவில் தனித்து நிற்கும் சிவன். தானவர்: அசுரர். இருமுப்பதினாயிரம்: அறுபதினாயிரம்.

(ஆரணிய பருவம். நிவாதகவச காலகேயர் வதை. மாதலி பார்த்தனுக்குக் காலகேயரைப்பற்றிச் சொல்லுதல்.)

## 15. உரோமச முனிவன் மொழி

### வேள் விசயம் தவிர்த்த பிரான்

262 வாள்விசயன், புரவிரயன் தன்னை நோக்கி,
மன்னுதவம் புரிந்ததுவும், மகிழ்ச்சி கூர்ந்து,அவ்

வேள்விசயம் தவிர்த்தபிரான் அருளால் வேண்டும்
விறல்படைகள் அளித்ததுவும், விபுதர் கோமான்

நாள்விசயம் பெறக்கொடுபோய், உம்பர் ஊரில்,
நளிர்மகுடம் புனைந்ததுவும், நாளும் தன்பொன்

தோள்விசயம் தொலைத்தநிறல் அவுணர் சேனை
சுடுசரத்தால் தொலைத்ததுவும், சூழ்ந்த யாவும், (1)

**பொழிப்பு:** வாள் ஏந்திய பார்த்தன் முப்புரத்தை வென்ற சிவனைக் குறித்து நிலைபெற்ற தவம் செய்ததையும், களிப்படைந்து காமனின் வெற்றியை அழித்த கடவுள் கருணையால் விரும்பிய வலிய படைகள் அளித்ததையும், தேவேந்திரன் அந்த நாளில் வெற்றி பெறுவதற்காக இவனைத் தேவர் ஊருக்கு அழைத்துச் சென்று, விளங்கு கின்ற கிரீடத்தைச் சூட்டியதையும், நாள் தோறும் தன் னுடைய அழகிய தோளின் வெற்றியைத் தொலைத்துக் கொண்டிருந்த வலிய அவுணர் படைகளை எரிக்கின்ற அம்பு களால் அழித்ததையும் பிற எல்லாவற்றையும்.

**விளக்கம்:** இப்பாடல் குளகம். வாள் விசயன்: பார்த்தன். புர விசயன்: சிவன். வேள் விசயம் தவிர்த்த பிரான்: சிவன். வேள்: மன்மதன். விசயம்: வெற்றி. விபுதர்கோமான்: தேவேந்திரன். உம்பர் ஊர்: அமராபதி. அவுணர்: நிவாத கவச காலகேயர்.

(ஆரணிய பருவம். புட்ப யாத்திரை. அமராபதியினின்றும் வந்த உரோமச முனி பார்த்தன் செய்தியைத் தருமனுக்குப் பகர்தல்.)

## எமை ஆள் உடையான் குன்றம்

263 அந்தஉயர் கிரியின்நெடுஞ் சாரல் தோறும்,
அருந்தவம்செய் முனிவரரை அடைவே காட்டி,
'இந்தவனம் தனக்குஎமைஆள் உடையான் குன்றம்
ஈர்ஐம்பது யோசனை'என்று எடுத்துக் காட்டி,

கந்தன்என எக்கலையும் வல்ல ஞானக்
கடவுள்முனி விசாலயன்ஆ லயமும் காட்டி,

'உந்துநெறிச் செங்கோலாய்! இதனில் ஓர்ஆண்டு
இருந்தி'என உரோமசனும் உரைத்திட் டானே. (2)

**பொழிப்பு:** செலுத்துகின்ற முறைச் செங்கோல் உடையவனே! (என்று தருமனை விளித்து), அந்த உயர்ந்த மலையின் சாரல்களிலெல்லாம் அரிய தவம் செய்கின்ற இருடிகளையெல்லாம் முறையாகக் காட்டி, இந்த வனத்துக்கு எம்மை ஆளுடையான் கைலமலை நூறு யோசனை தூரத்தில் உள்ளது என எடுத்துச்சொல்லி, கந்தக் கடவுளைப்போல எல்லாக் கலைகளினும் வல்லவனான அறிவுக் கடவுள் இருடியாம் விசாலயன் என்பானின் இருப்பிடத்தையும் காட்டி, இவ்விடத்து ஓராண்டு இருப்பாயாக என்று உரோமச முனிவன் சொன்னான்.

**விளக்கம்:** அடைவே: முறையாக. எமை ஆளுடையான்: சிவபிரான். குன்றம்: வெள்ளி மலை.

(ஆரணிய பருவம். புட்பயாத்திரை. உரோமச முனிவன் தருமனுக்குக் கந்தர்ப்ப மலையின் சிறப்பைச் சொல்லி அங்கு ஓராண்டு இருக்கப் பணித்தல்.)

## 16. அபிமன் மொழி

### ஆதிபகவனது அணிமுடி அலங்கல்

264 எறிதொடையல், சங்க பாணி மருமகன்,
இகலும்அமர் வென்று மீளும் அளவையில்,
நெறியிடை விளங்கி, வாள கிரிஎன
நிமிர்வுஉற வளைந்து சூழ வருதலும்,
அறிவுடன் இறைஞ்சி, 'ஆதி பகவனது
அணிமுடி அலங்கல் ஆகும்; அடையலர்
முறியஇனி மண்டு போரில் அமர்செய்து,
முடிதும்!'என வந்து மீள முடுகவே, (1)

**பொழிப்பு:** சங்கைக் கையிலேந்திய கண்ணன் மருமகனான அபிமன், வலிய போரை வென்று, திரும்புங்கால்' அங்கே எறியப்பட்ட கொன்றைமாலை வழியிலே தோன்றிச் சக்கரவாள மலையைப் போல நிமிர்ந்து வளைவாகச் சுற்றிக் கிடத்தல் கண்டு, அறிவுடன் அந்த மாலையை வணங்கி, 'இது ஆதிபகவனாகிய சிவபிரானுடைய அழகிய முடியிலணிந்த மாலையாகும்; (அதனைக் கடத்தல் ஆகாது) இனி எதிரிகளை முறியடித்து, நெருங்கிய அமரில் முடிவோம்,' எனத் திரும்ப வந்து போர்க்களத்தில் பொருந்த,

**விளக்கம்:** எறி தொடையல்: வீசியமாலை. சங்கபாணி: சங்கைக் கையில் பிடித்த திருமால். மருமகன்: அபிமன். நெறி: வழி. ஆதிபகவன்: சிவபிரான். இச்சொற்றொடர்,

'ஆதிபகவன் முதற்றே உலகு' என்ற திருவள்ளுவரின் முதற்குறளை நினைப்பூட்டுகின்றது.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். அபிமன் கொன்றை மாலையைக் கடவாது திரும்பச் சென்று போர் புரிதல்.)

### ஈசன் அணி கொன்றை கடவேன்

265 'இன்றுஅமரின் யாரும்உயிர்
பொன்றிடினும் ஈசன்அணி
கொன்றை,கட வேன்'எனமுன்
நின்றனன், நராதிபனே. (2)

**பொழிப்பு:** இன்று போரில் யார் உயிர் விட்டாலும் சிவபிரான் அணிந்த கொன்றை மாலையைத் தாண்ட மாட்டேன், என்று முன்நின்றான் அபிமன்.

**விளக்கம்:** ஈசன்: சிவபிரான். நராதிபன்: அபிமன்.

(துரோண பருவம். பதின்மூன்றும் போர். அபிமனின் உறுதிப்பாடு.)

## ஒவ்வோர் இடத்தில் ஐவர் மொழி

17 மான் உரு முனிவன் மொழி

18 நாரதன் மொழி

19 பாண்டியன் மொழி

20 பூதத்தின் மொழி

21 அசுவத்தாமன் மொழி

## 17 மான் உருவில் வந்த முனிவன் மொழி

### நாரிக்கு ஒரு கூறு நல்கும் அரனார்

266 நாரிக்கு ஒருகூறு அரனார்முதல்
நல்க எய்த
வேரிக் கணையால் மிகநொந்துழி,
வேடம் மாறிப்
பூரித்த காம நலம்எய்து
பொழுது, நின்கைச்
சோரிக் கணையால் அறையுண்டுஉயிர்
சோர்ந்து வீழ்ந்தேன். (1)

**பொழிப்பு:** பெண்ணுக்கு ஒரு பகுதியைச் சிவனார் முன்னே கொடுக்கச் செலுத்திய தேன் பொருந்திய அம்பினால் நான் வருந்தியபோது, வேடம் மாறி (மான் உரு எடுத்துப்) பெருமிதமான இன்பநலத்தை நுகர்ந்தபொழுது, உன் கையினின்றும் புறப்பட்ட இரத்தம் சொரியும் அம்பினால் தாக்கப்பட்டு உயிர் சோர்ந்து வீழ்ந்தேன்.

**விளக்கம்:** நாரி: உமை. கூறு: பகுதி. வேரி: தேன். கணை: மலர் அம்பு. சோரி: குருதி.

(ஆதி பருவம். சம்பவம். மான் வடிவெடுத்து இன்பம் நுகர்ந்த இருடி சொல்லுதல்.)

## 18 நாரதன் மொழி

### முக்கண் புராரி

267 முராரியை, முராரி நாபி
முளரிவாழ் முனியை, முக்கண்
புராரியை, நோக்கி முன்னாள்,
புரிபெருந் தவத்தின் மிக்கார்;

சுராரிகள் தம்மில் சுந்தோ
பசுந்தர்என்று இருவர் தங்கள்
திராரி.யே வலினல் வந்த
திலோத்தமை தன்னைக் கண்டார். (1)

பொழிப்பு: திருமாலை, திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமனை, முக்கண் பெற்ற சிவனை, எண்ணி அந்த நாள், செய்த பெரிய தவத்தில் மேம்பட்டவர், அசுரர்களுக்குள்ளே சுந்த, உபசுந்தர் என்ற இருவர், அவர்கள் இந்திரன் பணியினல் வந்த திலோத்தமையைப் பார்த்தார்கள்.

விளக்கம்: முராரி: திருமால். அவன் முளரி வந்தோன்: பிரமன். புராரி: முப்புரத்தை எரித்த சிவன். சுராரி: சுரர்களுக்குப் பகைவர்களான அசுரர். திராரி: இந்திரன். ஏவல்: பணி. திலோத்தமை: தேவ மங்கையருள் ஒருத்தி.

(ஆதி பருவம். இந்திரப் பிரத்தம். நாரதன் சுந்தோபசுந்தர் கதை சொல்லுதல்.)

## 19 பாண்டியன் மொழி

### கொன்றை நாள் மலரோன்

268 கேள்மதிஓர் மொழி!முன்னம் கேண்மையின்நம்
குலத்துஒருவன் கிரீசன் தன்னைத்

தாள்மலர் அன்பு உறப்பணிந்து தவம்புரிந்தான்
மகப்பொருட்டால்; தரித்த கொன்றை

நாள்மலரோன் வெளிநின்று,அந் நரபதிக்கும்,
நின்குலத்து நரேசர் யார்க்கும்

வாள்மருவும் கரதலத்தோய்! ஓர்ஒருமா
மகவுஎன்று வரமும் ஈந்தான். (1)

**பொழிப்பு:** ஒன்று சொல்லுகின்றேன், கேட்பாயாக! முன்னாளில் நம் குலத்துத் தோன்றிய ஒருவன், உறவோடு சிவபெருமானை அன்புகொண்டு திருவடித் தாமரையை வணங்கி, மகவின் பொருட்டாகத் தவம்செய்தான்; அன்று பூத்த கொன்றை மாலையை அணிந்த சிவபிரான், அவன் முன் தோன்றி, அந்த மன்னனுக்கும் அவன் வழியிலே தோன்றுகின்ற மன்னர் எல்லோர்க்கும், 'வாள் பொருந்திய கையை உடையவனே! ஒவ்வொரு சிறந்த மகவு தோன்றும்' என்று வரம் கொடுத்தான்.

**விளக்கம்:** கேள்: கேட்பாயாக. மதி. முன்னிலை அசை. கேண்மை: உறவு. இப்பாடல் பார்த்தனைப் பார்த்துப் பாண்டியன் பகர்வது. இருவரும் மதிக்குலம் ஆதலின் 'நம்குலத்து' என்றான். இப் பாண்டியனுக்குச் சித்திர வாகன பாண்டியன் என்று பெயர். இவன் பார்த்தன் மணந்த சித்திராங்கதையின் தந்தை. கிரீசன்: சிவன்.

(ஆதி பருவம். அருச்சுனன் தீர்த்தயாத்திரை. அருச்சுனனிடம் பாண்டியன் பேசுதல்.)

## 20 பூதத்தின் மொழி

### தாண்டவ நடனம்

269 பூண்டவெள் அரவத் தோடு
புனைமதி வேணி யார்க்குத்
தாண்டவ நடனம் செய்யத்
தக்கதுஓர் தழல்வெங் கானில்

பாண்டவர் தம்மைக் கொல்லப்
பணித்தனை; ஒருகால் ஆவி
மாண்டவர், பின்னும் பின்னும்
மாள்வரோ? மதியி லாதோய்! (1)

**பொழிப்பு:** வெள்ளை நிறமுள்ள பாம்பை அணிந்த தோடு திங்களைச் சூடிய சடையை உடைய சிவபெருமானுக்குத் தாண்டவக் கூத்து ஆடத்தக்கதாகிய ஒப்பற்ற நெருப்பு நிறைந்த கொடிய காட்டில் பாண்டவர்களைக் கொல்லுமாறு ஏவினாய்; ஒருமுறை உயிர்விட்டவர் மீண்டும் மீண்டும் சாவார்களோ? அறிவில்லாதவனே!

**விளக்கம்:** தாண்டவ நடனம்: ஆனந்தக் கூத்து. பணித்தனை: ஏவினாய். ஒரு கால்: ஒருமுறை.

(ஆரணிய பருவம். நச்சுப்பொய்கை. பூதம் முனிவனைப் பார்த்துப் பேசுதல்.)

## 21 அசுவத்தாமன் மொழி

### விடையவன் முதலோர் கணை

270 'எல்லவன் வீழும் முன்னம்,
யாரையும் தொலைத்து, வேலைத்

தொல்லைமண் அளித்தி லேனேல்,
துரோணன்மா மதலை அல்லேன்;

வில்எனும் படையும் தீண்டேன்;
விடையவன் முதலோர் தந்த

வல்லிய கணையும் பொய்த்து,என்
மறைகளும் பொய்க்கும் மாதோ!' (1)

**பொழிப்பு:** ஆதவன் சாய்வதற்கு முன்னே எல்லாரையும் அழித்துக் கடல் சூழ்ந்த பழைய நிலத்தை அளிக்கவில்லையானால், துரோணமுனிவனுடைய சிறந்த மகனாக நான் ஆகமாட்டேன்; வில் என்ற படையைத் தொடமாட்டேன்; சிவபெருமான் முதலியோர் அளித்த வன்மை வாய்ந்த அம்புகளும் பொய்த்துப்போய், என்னுடைய மறைகளும் பொய்த்து விடட்டும்.

**விளக்கம்:** எல்லவன்: சூரியன். வேலை: கடல். விடையவன்: சிவபெருமான்.

(சல்லிய பருவம். பதினெட்டாம் போர். அசுவத்தாமனின் சபதம்.)

# வில்லி பாரதத்தில் சிவனைப்பற்றி வந்த இடங்கள்

| தொடர் எண். | | பாடல்கள் |
|---|---|---|
| 1 | ஆதிபருவம் | 46 |
| 2 | சபா பருவம் | 9 |
| 3 | ஆரணிய பருவம் | 94 |
| 4 | விராட பருவம் | 7 |
| 5 | உத்தியோக பருவம் | 5 |
| 6 | வீட்டும பருவம் | 13 |
| 7 | துரோண பருவம் | 64 |
| 8 | கன்ன பருவம் | 20 |
| 9 | சல்லிய பருவம் | 6 |
| 10 | சௌப்திக பருவம் | 6 |
| | ஆக | 270 |

## சிவனைப் பற்றிய சொல் தொடர்

எண், பாடல் எண்.

---

## சிவ சம்பந்தமான சொல் தொடர்

எண், பாடல் எண்.

## வில்லியும் சிவனும்

### பாட்டு முதற் குறிப்பு அகராதி

## பாட்டு முதற் குறிப்பு அகராதி

## பாட்டு முதற் குறிப்பு அகராதி

# பாட்டு முதற் குறிப்பு அகராதி